உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ சங்கராசாரியசுவாமிகள் வடமொழியில்
அருளிச்செய்ததை
தாம்பிரவர்ணிதீரத்தி லெழுந்தருளியிருந்த
பிரமக்ஞானவெங்கிடேசுரசுவாமிகளால்
மொழிபெயர்த்தருளிய

# பாஷியஇருதயம்.

இஃது
சமிவனக்ஷேத்திரமென்னுங்
கோயிலூர்

## அ-இராமசுவாமியவர்களால்,

திருத்தியும் விளக்கியுங் கூட்டியும்
புதுக்கி
நாட்டரசங்கோட்டை கிருஷ்ணய்யா அவர்கள்
வேண்டுகோளின்படி

சென்னை:
மிமோரியல் அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.
சர்வதாரி௵ வைகாசி௴

இதன் விலை ரூபா-௧௨.
1888.

# இந்நூல்மான்மியம்.

:o:

இந்தநூலொன்றைப்பார்க்கிலிதரநூலிச்சைபோகும்
பந்தமுமகன்றுபோகும்பரம்பதமடையலாகும்
தொந்தமுந்துலைந்துபோகுந்தொய்தமுந்துலைந்துபோகுஞ்
சந்ததஞ்சிவமேயாகச்சந்ததமொளிரலாகும்.

## வரலாறு.

"சகலலோகபூஜ்ஜியராகிய ஸ்ரீ@ஸ்ரீ சங்கராசாரியசுவாமிகள் சகலவேதசாஸ்திர புராணவிதிகாச சம்பன்னராயுஞ் சமதமாதிசகிதாளாயு மிருக்கிற வுத்தமாதிகாரிகளுக்குச் சூத்திரபாஷிய முபநிடதபாஷியங் கீதாபாஷியங்க ளென்கிற வேதாந்தப் பிரஸ்தானத்திரயங்களை நிர்மாணம்பண்ணிப் பிற்பாடிந்த மூன்றுபாஷியங்களையு மவைகளைச் சேர்ந்த வியாக்கினோபன்னியாச விஸ்தாரங்களையும் பார்த்துத் தாற்பரியத்தை நிச்சயஞ் செய்கின்ற சாமார்த்தியமில்லாதபேர்களாயும் மஹாமுமூக்ஷுக்களாயு மிருக்கிற மந்தவதிகாரிகளை இரக்ஷிக்கும் நிமித்தஞ் சர்வவேதாந்த சித்தாந்த சங்கிரகரூபமாயும் பாஷியஇருதயமென்கிற பெயரையுடைத்தானதாயு மிருக்கிற இந்தக்கிரந்தத்தை யருளிச்செய்தனர்" ஆனபடியால்; மோக்ஷாபேக்ஷையுடையபுண்ணியபுருஷா ளிந்நூலி லாதரஞ்செய்வார்களேல்; அடையத்தக்க பிரயோஜனத்தை யடைந்தானந்தசுகிகளாய் என்று மிருக்கலா மிது சித்தம்! சித்தம்!! சித்தம்!!!.

# பாஷிய இருதய அட்டவணை.

—:o:—

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ குருதேவ நம:

# பாஷ்ய இருதயம்.

## முதலாவது சிஷ்யப்பிரகரணம்.

ஸ்ரீ-கணபதியையும், சுப்பிரமண்ணியரையும், பார்வதியையும், பரமேசுவரரையும், சரஸ்வதியையும், பிரம்மாதிதேவதைகளையும், ரிஷீசுவரர்களையும், குருவையும் நமஸ்கரித்துப் பாஷ்ய விருதயஞ்சொல்லுகிறோம்.

பிரமக்கியானியானவன் பிரமமாகத்தானே யிருப்பன். ஆத்மக்கியானியானவன் சகலசோகங்களையுங் கடந்து பிரமானந்தரூபமாகத்தானே யிருப்பன். இப்படிப்பட்ட மோக்ஷத்திலே பிரமக்கியானந்தானே சாதனம்; வேறே சாதனமில்லை. பிரமத்திற்கு லக்ஷணமென்னே? சச்சிதானந்தமே லக்ஷணம். சத்தாவதேது? காலத்திரயத்திலும் வாதிக்கப்படாத நித்தியமென்று நிச்சயம். சித்தாவதேது? போதலக்ஷணம். ஆனந்தமாவதேது? சுகலக்ஷணம். பிரமானந்தமாவதேது? காலத்தினாலேயும், தேசத்தினாலேயும், வஸ்துவினாலேயும், அபரிச்சின்னவஸ்து. அது சர்வமயமென்று நிச்சயம். இப்படிப்பட்ட பிரமமானது மாயாசம்பந்தமாய்த் தன்னுடைய விருதயக்குகையிலே பிரவேசித்திருக்கிற புத்திக்குகையிலே சிவரூபமாகப் பிரவேசித்திருக்கிற பிரமத்தை:—யாதொருத்தனறிகிறானோ; அவனே பிரம

வித்து. அவனே ஜீவன்முக்தன். அவனே கைவல்யத்தை யடைவன். கோடியெக்ஞயங்களினாலேயும், கோடிதானங்களினாலேயும், கோடி தபசுகளினாலேயும், கோடி கங்காஸ்நானங்களினாலேயும், கோடி விரதங்களினாலேயும், முக்திலபியாது. ஞானத்தினாலேதானே முக்திலபிக்கவேண்டும். முக்தியிலே ஞானந்தானே சாதனம்:—வேறே சாதனமில்லை. இப்படிப்பட்ட அறிவிலே வேதாந்த சிரவணந்தானே சாதனம்:—வேறே சாதனமில்லை. வேதாந்தக்கியானமே முக்தி சாதனம்:—இதரக்கியானம் மோக்ஷசாதனமன்று. வேதாந்தசிரவணமாவதேது? குருமுகத்திலே நின்றும்வேதாந்தவுபதேசங் கேட்க, வேதாந்த அர்த்தவிஜாரங்கேட்க, சகல வேதாந்தங்களுக்கும்; அத்தொய்தப் பிரமத்தினிடத்திற்றாற்பரியமென்கிற ஞானனுகூல விஜாரம். இதைத்தானே வேதாந்தசிரவணமென்று பெரியவாள் சொல்லுவார்கள். வேதாந்தசிரவணம்:—பிரமக்கியானத்திலே சாதனமாம். பிரமக்கியானம்:—முக்தியிலே சாதனமென்று சித்தாந்தம். முக்திலக்ஷணமாவதேது? சில பெரியவாள்:—பிரமவித்தையினாலே அவித்தையாநிவிர்த்திமுக்தியென்று சொல்லுவார்கள். சில பெரியவாள்:—வித்தையினாலே யவித்தையாநிவர்த்தியாய்ப் பிரமமாக விருக்குகை மோக்ஷமென்றுசொல்லுவார்கள். அனர்த்தநிவிர்த்தி ஆனந்தப்பிராப்தி இரண்டும் மோக்ஷமென்று அத்தொய்திகள் அங்கிகரித் திருக்கிறார்கள். ஞானத்துக்குத் தேவபாவம்பேர்லே ஆகந்துவமாகிற நூதன முக்திருபமென்று சொல்லவந்தால்:—அது முக்தியாகமாட்டாது. அது சென்னியமானபடியினாலே:—அநித்தியமாகையினாலே முக்தியன்று. ஆறைற் சுவர்க்கலோகந்தானே மோக்ஷமென்றுவர:—தேவலோகம் புண்ணியக்ஷயமா

ய் நட்சேத்திரங்கள் கீழே விழுகிறதுங் கண்டிருக்கிறோம்,
தேவலோகம் அநித்தியமென்று ஆயிரஞ் சுருதிவசனங் கே
ட்டிருக்கிறோம், ஆனாற் சுகவிசேஷஞ்சுவர்க்கமென்று மனை
நித்தியாத்ம சொரூபமென்று மதுவே முக்தியென்றுஞ்
சொல்வோமென்று லாத்மசொரூபம் முக்தியென்கிறது இ
ஷ்டந்தானே. ஆனாற் பிரமலோகம் மோக்ஷமென்றவர:—
பிரமோபாசகாளாயிருக்கிற பேர்கள் வேத அக்ஷராதி
யுபாசனமார்க்கத்தினாலே பிரமலோகத்திற்குப் போய் அவ
டத்திலே பிரமக்கியானம் வந்து அந்தப் பிரமக்கியானத்தி
னாலே பிரமசாயுச்சியமா யிருக்கிற முக்தியை யடைவார்க
ளென்றும், அவர்களுக்கு மறுபிறப்பில்லையென்றும், சாந்
தோக்கிய வுபநிடதத்திலே சொல்லியிருக்கிறது. ஆனபடியி
னாலே பிரமலோகப் பிராப்திதானே மோக்ஷமல்ல:—பிரம
சாயுச்சியமே மோக்ஷம். ஆனாற் பிரமரகீட ஞாயம்போலே
சித்தாருடைய ரசகுளிகா சம்பந்தத்தினாலே தாம்பிரந்
தானே யேமமாகிறாப்போலே ஜீவன்றானே யுபாசனையினா
லே பிரமமாகிறான். பிரமம்போலே யாகிறான்:—பிரமசொ
ரூபத்தன்மையை யடைகிறான். இதுதானே முக்தியென்று
வைஷ்ணுவாள் சொல்லுவார்கள். இது:—முக்தியாகமாட்
டாது. பிரமம் ரூபியென்கிற பக்ஷத்திலே:—இந்த முக்தி
கூடும். அரூபியென்கிற பக்ஷத்திலே:—இந்தமுக்திகூடாது.
இந்தமுக்தி யந்தத்தோடே கூடியிருக்கிறபடியினாலே க்ஷ
யமாவென்று பாஷிய விருதயம். ஞானகருமக் கூட்டுறவி
னாலே; மோக்ஷமென்று யோகிகள் சம்மதம்; அதுகூடாது.
ஞானம், கருமவிரோதமானபடியினாலே கூட்டுறவு கூடா
து. கூட்டுறவாவதேதென்றவர:—ஞானமன்றியிலே கரு
மத்தினாலே மோக்ஷமில்லை; கருமமன்றியிலே ஞானத்தினா

லே மோக்ஷமில்லை; இரண்டுங் கூடியே மோக்ஷசாதனம். பக்ஷியானது ஒரு சிறகாலே பறக்கமாட்டாது இரண்டு சிறகினாலேயும் பறக்கவேண்டும். மநுஷனானவன் ஒற்றைக் காலினாலே நடக்கமாட்டா னிரண்டுகாலினாலேயும் நடக்க வேண்டும். அப்படிப்போலே இரண்டுவிதமுங்கூடியே மோக்ஷமென்று சொல்லுவார்கள். ஞானத்திற்குங் கருமத்திற்கு மொன்றுக்கொன்று விரோதமானபடியினாலே கூட்டுறவு கூடாது. ஆனாற் கருமம் மோக்ஷசாதனமென்றுவர:—மோக்ஷங் கருமஜன்னியமானால் முக்தி அநித்தியமாய்ப் போய்விடும். அநித்தியபதம் மோக்ஷமன்று. ஆனால் ஞானம் மோக்ஷசாதனமென்றுவர:—சம்மதந்தானே. ஆனால்:—அந்தக்கரணத்திலே பிரமமிருக்கிறது; அவித்தையினாலே மறைக்கப்பட்டிருக்கிறபடியாலே தியானத்தினாலேவெளிப்படவேண்டும். எப்படிப்போலேயென்றால்? காஷ்டத்திலேயிருக்கிற வன்னியானது மதனத்தினாலே வெளியிலே வரும், காஷ்டத்தையுந் தகிக்கும். ததியிலேயிருக்கிற ஆச்சியங் கடைந்தால் வெளியிலே வரும். ரத்தினத்திலேயிருக்கிற பிரபை சாணைக்கல்லின் கடைச்சலினாலே தோஷங்கள்போய்ப் பிரகாசிக்கும். இதுபோலே தியானத்தினாலே யவித்தை நீங்கி ஞானமுதித்துப்பிரகாசிக்கும். அந்தஞானஞ் சர்வக்ஞத்துவாதி லக்ஷணத்தோடே கூடியிருக்கும். அப்படிப்பட்ட சொரூபம் மோக்ஷமென்றுசொல்லுவார்கள்; அதுகூடாது. வியாசாசாரியாள் யோகமதநிராகரணம் பண்ணுகிறபோது சாங்கியமதம்போலே யோகமதம் அவைதிகமென்று நிராகரித்தார். அதேதென்றுவர:—பிரதானமாகிற பிரகிருதிக்கு மிருத்துமய பிண்டம்போலே உபாதான காரணத்துவமும், ஈசுரனுக்குக் குலாலன்போலே நிமித்த காரணத்துவ

மும், யோகிகள் அங்கீகரித்தபடியினாலே இது அவைதீகம்; வேதவிருத்தமென்று நிராகரித்தார். பாஷியக்காரர், விவரணாசாரியர், வித்தியாரண்ணியசுவாமிகள், மனனநிதித்தியாசனங்களோடே கூடியிருக்கிற சிரவணம் பிரதானம்:—ஞானசாதனமென்று அங்கீகரித்தார்கள். வாசஸ்பதிமிசிரான்:—சிரவணமனன நிதித்தியாசனங்களோடே கூடியிருக்கிற மனசுதானே ஞானசாதனமென்று அங்கீகரித்தார்கள். தியானத்துக்கு ஞானசாதனத்துவம் அங்கீகரிக்கவில்லை. ஆனால், சுருதியிலே தியானஞ் சொல்லியிருக்கிறதென்றுவர:—சிரவணத்தினாலே ஞானம் வந்தபிற குதித்த ஞானத்திற்குச் சமுசய விபரீதாதிதோஷப் பிரதிபந்தம்போகிற நிமித்தியந் தியானஞ் சொல்லியிருக்கிறதென்று அங்கீகரித்தார்கள். இதுமாத்திரமல்ல:—யோகசூத்திரத்திலே வியாசாதிகுலத்திலே ஜனனத்தினாலேயும், ஞானசித்தி. திவ்விய அவுஷத கற்பசேவையினாலேயும், ஞானசித்தி. மந்திரசித்தியினாலேயும், ஞானசித்தி. தவசுசித்தியினாலேயும், ஞானசித்தி. சமாதிசித்தியினாலேயும், ஞானசித்தி. சித்தாளுடைய வரப்பிரசாதத்தினாலேயும், ஞானசித்தி. ஆக ஆறுபிரகாரமாக ஞானசித்தி வருமென்றும், அந்தஞானந் திவ்வியஞானலக்ஷணஞ் சர்வக்ஞத்துவாதி லக்ஷணமா யிருக்குமென்றும், யோகசூத்திரக்காரர் சூத்திரஞ்சொன்னார். அவையெல்லாம் யோகசித்தி லக்ஷணமேயல்லாமல் ஞானசித்தி லக்ஷணமல்லவென்று பாஷியசம்மதம். சர்வக்ஞத்துவாதி லக்ஷணமாயிருக்கிற ஞானம்; ஞானபக்ஷத்திலே ஞானிகள் அங்கீகரிக்கவில்லை. தபோசித்தாள், யோகசித்தாள், ஈசுரோபாசகாள், சர்வக்ஞத்துவாதி லக்ஷணம்; ஞானமென்று அங்கீகரித்தார்கள். அதுசித்திதருமந்தானே; ஞானதருமமல்லவெ

வானப்பிரஸ்தன், நான் சந்நியாசி, நான் ஸ்திரீ, நான் புருஷன், நான் தேவதத்தன், நான் யெக்ஞயதத்தன், நான் வெளுத்தவன், இது முதலான ஸ்தூலதேக தருமமாத்மாவினிடத்தி லாரோபம்; அவித்தை. இதற்குமேல் ஆத்மாவினிடத்திலே:—நான் குருடன், நான் செவிடன், நானூமை, இதுமுதலாகிய இந்திரிய தருமமாரோபம்; அவித்தை. இதற்குமேலாத்மாவினிடத்திலே:—நான் பசித்தேன், தாகித்தேனென்கிற பிராண தருமமாரோபம்; அவித்தை. ஆத்மாவினிடத்திலே; நான் காமி, நான்குரோதி, நான் லோபி, இச்சிக்கிறேன், பண்ணுகிறேன், நான் கர்த்தா, போக்தாவென்கிற விதுமுதலான அந்தக்கரணதருமங்களை ஆத்மாவினிடத்திலே யாரோபிக்கிறது; அவித்தை. இந்த அவித்தை வித்தையினாலே போகவேண்டும். அந்தவித்தையாவதேதென்றால்? ஆத்மப்பிரகரணத்திலே தேகேந்திரியாதிகள் நாமன்று; பிராணன் அந்தக்கரணம் நாமன்று; ஜீவனும் நாமன்று; தேகேந்திரியாதி தருமமும் நமக்கில்லை; பிராணன் அந்தக்கரண தருமமும் நமக்கில்லை; நான் அகர்த்தா, நான் அபோக்தா, நான் பரமாத்மாவென்கிற பிரமக்கியானம் வித்தையென்று சொல்லப்படும். வித்தையென்றும், எதார்த்தத்தை ஞானமென்றும், பிரமக்கியானமென்றும், இவைகளெல்லாம் பரியாயமாய்ச்சொல்லுவார்கள். வஸ்துவினுடைய யதார்த்தக்கியானம்வித்தை. அந்தவஸ்துவிலேவஸ்துவென்கிற ஞானம் யதார்த்தக்கியானம். அந்த வஸ்துவினிடத்திலே யிருக்கிற தருமத்தை அந்தவஸ்துவினிடத்திலேதானே யறிகிறதுவே யதார்த்தக்கியானம். இதற்கு வாகியத்திலே திருஷ்டாந்தஞ்சொல்லுகிறோம். சுத்தியினிடத்திலே சுத்திஞானம் யதார்த்தஞானம். புருஷனிடத்திலே புருஷனென்

கிற ஞானமும், ஸ்தாணுவினிடத்திலே ஸ்தாணுவென்கிற ஞானமும், யதார்த்தஞானம். இப்படி வித்தையாலக்ஷணஞ் சொல்லப்படும். ஞானம், மோக்ஷசாதனமோ? அல்லவோ? ஞானத்தினாலேமோக்ஷமோ? கருமத்தினாலேமோக்ஷமோ? இரண்டுங்கூடி மோக்ஷமோ வென்றுவர:—கருமத்தினாலே தானே மோக்ஷமென்று மீமாம்ஷகாள் சொல்லுவார்கள். ஞானகருமக் கூட்டுறவினாலே மோக்ஷமென்று யோகிகள் சொல்லுவார்கள். பிரமாணப்பிரமேய, சமுசய, பிர யோஜன, திருஷ்டாந்த, சித்தாந்த, அவையவ, தர்க்க, நிர்ணய, வாத, செலப்ப, விதண்ட, எத்துவா, பாச, சல, சாதி, நிக்கிரகஸ்தானம், இந்தப்பதினாறி னுடைய அறிவினா லே மோக்ஷமென்று தார்க்கீகாள் சொல்லுவார்கள். ஆத் மானாத்ம ஞானத்தினாலே மோக்ஷ மென்று சாங்கியாள் சொல்லுவார்கள். வேதாந்திகள் பிரமஞானத்தினாலே மோக்ஷம்; ஞானந்தானே சாதனமென்று சொல்லுவார்கள். கருமம் மோக்ஷசாதனமல்ல. கருமத்துக்கும், அவித்தைக் கும், விரோதமில்லையே; கருமம் பிராந்திக்கி மூலமானபடி யினாலே அவித்தைக்குங் கருமத்துக்கும் விரோதமில்லை. கருமத்தினாலே அவித்தைவிருத்தி யடைகிறதானால் லக்ஷ ணத்துடன் கூடியிருக்கிறமோக்ஷமில்லை. அஃதெப்படியென் றால்? நானஞ்ஞானி நானறியேனென்கிற இடத்திலே ஞான மாயிருக்கிறஆத்மாவானவர் அஞ்ஞானத்திற்காசிரையமாக த்தானே தோற்றுகிறாரே; ஆனபடியினாலே சாஸ்திர சென் னியஞானத்திற்கும், அஞ்ஞானத்திற்கும், விரோதமுண்டெ ன்கிறதிலே பிரமாணமில்லை. ஞானத்தினாலே யஞ்ஞான நிவி ர்த்தியில்லை. ஞானசம்பாதனம் வியர்த்தமென்றுவர:—ஞா ன அஞ்ஞானங்களுக்கு விரோதமுண்டு. எங்கும் வியாபித்

திருக்கிற சூரியகிரணந்திரணாதிகளைத் தகியாதிருந்தாலுங் காந்தத்தை இரவிசன்னிதானத்திலே பிடித்தாற்காந்தத்திற் குள்ளே பிரவேசித்து அந்தக்கிரணந்தானே திரணாதிகளைத் தகிக்கிறது கண்டிருக்கிறோம். இதுவல்லாமற்காஷ்டத்தி லே பொருந்தியிருக்கிற வன்னியானது காஷ்டங்களைத் தகியாது மதனத்தினாலே அக்கினிவெளிப்பட்டு அந்த அக் கினிதானே யந்தக்காஷ்டத்தைத் தகிக்கிறது. அப்படிப் போலே ஆத்மசொரூப ஞானம் அஞ்ஞானத்திற்கு அவிரோ தியாயிருந்தாலுஞ் சிரவணாதிகளினாலே அந்தாந்தக்கரண த்திலே பிரவேசித்து அந்த ஞானந்தானே அஞ்ஞானத்தை யழிக்கும். அதைத்தானே விர்த்திக்கியானமென்று சொ ல்லுவார்கள். நானே பிரமமென்கிற அகண்டாகார விர்த் திக்கியானத்தினாலே அவித்தையாநாசமென்று பாஷிய விரு தயம். இன்னஞ் சொல்லுகிறோம். ஞானத்தினாலே அவித் தைக்கிநாசம். கருமத்தினாலே மோகமயமாயிருக்கிற அவி த்தைக்கி நாசமில்லை. அஃதெப்படியென்னில்? கருமம் அவித் தையா மூலமானபடியினாலே:—நான் பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரன், நான் பிர மசாரி, நான் கிரகஸ்தன், நான் வானப்பிரஸ்தன், நான் சந்நியாசி, நான் ஸ்திரீ, நான் புருஷனென்கிற மோகமுண் டானால் அதன் பிறகு வர்ணாச்சிரம தருமங்களிலே யிவனுக் கதிகாரமுண்டிந்த மோக மில்லாதேபோனால் கரும அதி காரமில்லை. ஆனபடியினாலே கருமக்கூட்டம் மோகசென் னிய மிரண்டுந் தாய்பிள்ளைக ளானபடியினாலே அவிவேக கருமங்களுக் கொன்றுக்கொன்று விரோதமில்லை. ராத்திரி யிலே மேகாவரணத்துக்கும், இருட்டுக்கும், எப்படி விரோ தமில்லையோ; அப்படிப்போலே விரோதமில்லை. அதுமாத்

திரமல்ல:—கருமத்தினாலே மோகம் விருத்தியடையும். மேகாவரணத்தினாலே அந்தகார மெப்படி விருத்தியடையுமோ; அப்படிப்போலேயாம். பிரகாச மப்பிரகாசங்களுக் கொன்றுக்கொன்று எப்படி விரோதமோ; அப்படி ஞானாஞ்ஞானிகளுக் கொன்றுக்கொன்று விரோதம். கருமத்துக்கும், அவித்தைக்கும், விரோதமில்லை. வித்தையினாலே தானே யவித்தை நசிக்கவேண்டும். கோடிகருமங்களினாலேயும்; அவித்தை நசியாது. தேகத்திலே நானென்கிற மோகலக்ஷணம் அவித்தை. தேகநாமல்ல; நாம் பரமாத்மாவென்கிறது வித்தை. ஆனதாலொன்றுக்கொன்று விரோதம். கருமம்:—நான் கர்த்தாவென்று தேகேந்திரியாதி தருமங்களை ஆத்மாவினிடத்திலே ஆரோபிக்கும். ஆனதால் மோகத்துக்குக் கருமம் சகாகாரியாகத்தானே யிருக்கும். எட்டுப்படி வெந்நீரில் ஒருபடி குளிர்ந்தஜலம் விட்டாலு முஷ்ணோதகந் தானேயாம். எட்டுப்படி குளிர்ந்த ஜலத்தில் ஒருபடி வெந்நீரைவிட்டா லெல்லாங் குளிர்ந்தஜலமேயாம். அப்படிப்போலக் கரும மதிகமானால் அஞ்ஞானம் நசிக்கும். மோகந்தானே விருத்தியடையும். ஞானமதிகமானால் அவித்தையும் நசிக்கும். அவித்தையாகருமங்களுஞ் சாம்பராய்ப் போய்விடுமென்று பாஷியவிருதயம். இன்னஞ் சொல்லுகிறோம். ஞானாஞ்ஞானங்களுக்குத் தமப் பிரகாசங்கள் போலே ஒன்றுக்கொன்று விரோதந்தானே. சுத்தியிலே இது ரசிதமென்கிற வஞ்ஞானத்திற்கு இது சுத்தியென்கிற ஞானத்தினால் நிவிர்த்திகண்டோம். ரச்சுவிலே இது சர்ப்பமென்கிற பிராந்திக்கி இது ரச்சுவென்கிற ஞானத்தினாலே நிவிர்த்தி. புருஷனிடத்திலே ஸ்தாணுவென்கிற பிராந்திக்கி இவன் புருஷனென்கிற ஞானத்தினாலே நிவிர்த்தி. தாணுவி

ணிடத்திலே புருஷனென்கிற பிராந்திக்கி தாணுவென்கிற ஞானத்தினாலே நிவிர்த்தி கண்டிருக்கிறோம். அப்படித்தானே:—நான் ஜீவனென்கிற பிராந்திக்கி நான் பரமாத்மாவென்கிற ஞானத்தினாலே நிவிர்த்தி சித்தந்தானே. சாஸ்திர ஞானத்தினாலே பிரமம் பரோக்ஷமென்கிற பிராந்திபோய் விடும். அபரோக்ஷஞானத்தினாலே நான் ஜீவனென்கிற பிராந்தி போய்விடுமென்று பாஷிய சித்தாந்தம். இன்னஞ் சொல்லுகுறோம். சிலபேர் சாஸ்திரஞானத்தினாலே விஷய விசுவத்துக்கு நித்தியத்துவப் பிராந்தி போய்விடும். அபரோக்ஷக்கியானத்தினாலே விஷய விசுவத்திலே பிரவிருத்திப் பிராந்தி போய்விடும். பிராரத்த நாசத்தினாலே விசுவந் தோன்றுகிற பிராந்தி போய்விடும். இது மாத்திரமல்ல:—சாஸ்திரத்தினாலே பிரமத்துக்கு அசத்துவம் நசிக்கும். அபரோக்ஷத்தினாலே பிரமத்துக்குப் பரோக்ஷத்துவம் நசிக்கும். பிராரத்தநாசத்தினாலே ஆகந்துவமாகத் தோற்றுகிற விசுவத்தோற்றரவு நசிக்கும். இந்தப்படி மூன்றுவிதமாயிருக்கிற பிராந்திலக்ஷணமான மாயை நசிக்குமென்றுசொல்லுவார்கள். சிலபேர்பெரியவாள் ஞானம்வந்தாலும்; பிராரத்துவநாசபரியந்தம் அஞ்ஞானப்பிராந்தி போகாது யென்பர். அஃதெப்படியென்றால்? ஜலசூரியனிடத்திலே சூரியன்சலிக்கிறானென்கிற பிராந்திக்கிச் சூரியனிடத்திலே சலனமில்லை. ஜலத்தினுடையசாஞ்சலியஞ்ஜலசூரியவிம்பத்திலேதோற்றுகிறதென்கிற ஞானமிருந்தாலும்நிவிர்த்திகாணோம். இதுமாத்திரமன்று:—ஓடத்திலே யேறியிருக்கிறவனுக்குக் கரையிலேயிருக்கிற விருக்ஷஞ் சுழலுதென்கிற பிராந்திக்கி யோடஞ் சுழலுகிறது விருக்ஷங்களிலே தோற்றுகிறது; விருக்ஷங்களுக்கு அசைவில்லை யென்கிற ஞானமிருந்தாலும்

நிவிர்த்திகாணோம். மேகங்கள் சுருக்காயோடுகிறபோது நட்சேத்திரங்களுஞ் சுருக்காவோடுகிறதென்கிற அக்கியானத்துக்கு மேகத்தினுடைய சீக்கிரகதி நட்சேத்திரத்தினிடத்திலே தோற்றுகிறது; நட்சேத்திரம் மந்தகதிதானேயென்கிற ஞானமிருந்தாலும் நிவிர்த்திகாணோம். செம்பரத்தம் பூவினுடைய சன்னிதானத்திலே படிகஞ் சிவப்பென்கிற பிராந்திக்கிப் படிகஞ் சுத்தவெளுப்புச் செம்பரத்தம் பூவினுடைய சிவப்பு அதிலே தோற்றுகிறதென்கிற ஞானமிருந்தாலும் நிவிர்த்திகாணோம். இதுமாத்திரமன்று:—சகலவேதசாஸ்திரங்கள் படித்திருக்கிற வித்துவாமிஷாளிடத்திலேயும், தேகேந்திரியாதிகளிலே நானென்கிற பிராந்தியும், நான் கர்த்தா போக்தாவென்கிற பிராந்தியும், கண்டிருக்கிறோம். ஆனபடியினாலே:—ஞானத்தினாலே அஞ்ஞானம் போகாதென்று சங்கைவர:—அவித்தைவாசனை யதிகமாயிருக்கிறது. வித்தைவாசனை போதாது. வித்தைவாசனை யதிகமாயுண்டானால் அவித்தை நிவிர்த்தியாமென்று பரிகாரஞ் சொன்னார்கள். சிலபேர் அத்தொய்த பாவனையாகிற நிதித்தியாசனம் நிரம்பப் பண்ணவேண்டும். நிரம்ப நிதித்தியாசனத்துடனே கூடியிருக்கிற வித்தை அவித்தையை யழிக்கும். நான் கர்த்தா ஜீவனென்கிறபிராந்தி அஞ்ஞானிகளுக்குண்டு. ஞானிகளுக்கு நான் கர்த்தா ஜீவனென்கிற பிராந்தி இல்லவேயில்லையென்று சொல்லுவார்கள்.

சிலபேர் பெரியவாள் ஆயிரந்தியானம் பண்ணினாலும்; பிராந்திபோகாது. பிராந்தி மித்தையென்கிற நிச்சயமிருந்தாற்போதும் தியானம் பண்ணத் தேவையில்லை. அந்தக்கரணவுபாதி யிருக்கிறபரியந்தஞ் ஜீவத்துவப் பிராந்திபோ

காது. அந்தப் பிராந்தி வுபாதி நாசத்திறைலே போம். உபா
தியிருக்கிற பரியந்தம் பிராந்தி யிருக்குமென்று வித்தியார
ண்ணியர்மதம். ஞானத்துக்கும், கருமத்துக்கும், விரோத
முண்டோ வில்லையோவென்றுவர:—ஞானத்துக்குங் கரும
த்துக்கும்விரோதந்தானே. கர்த்துருத்துவ கருமங்கள் அந்
தக்கரணதருமம். ஆத்மா அகர்த்தா. ஆனபடியினுல்ஆத்மாவு
க்குக் கருமங்களில்லை யென்கிற ஞானத்திறைலே அந்தக்கர
ணதருமமாயிருக்கிற கரும கர்த்துருத்துவாதிகள் பிராந்
தியிறைலே ஆத்மாவினிடத்திலே கற்பிதமாய்த் தோற்றமா
ட்டாது. ஞானம் அவித்தைக்கி விரோதமான படியினுலே
அவித்தையை நிவிர்த்தி பண்ணுகிறதில் மூலமாயிருக்கிற
கருமக்கூட்டங்களுக்கும், அறிவுக்கும், வெருவிரோதந்தா
னே. இதுமாத்திரமன்று ஞானமாகிற அக்கினியிலே கரும
ங்களாகிற இலவம்பஞ்சுகள் பஸ்பமாய்ப் போய்விடும்.
கருமகாஷ்டங்கள் ஞானக்கினியினுலே சாம்பராய்ப் போய்
விடும். அசுவமானது பூமியிலே பிரண்டெழுந்திருந்து
தன்னுடைய ரோமங்களை யெல்லா முதறும் அதினலே சக
லதூசிகளும் பறந்துபோய்விடும். அப்படிப்போலே நான்
கர்த்தாவில்லை யெனக்குக் கருமங்களுமில்லை யென்கிற அச
ங்கத்துவ அனுசந்தானத்திறைலே கருமத்தூசிகளெல்லாம்
பறந்துபோய்விடும். இதுமாத்திரமல்ல:—தாமரையிலையுஞ்
ஜலமு மெப்படி யொட்டாதோ; பிள்ளைப்பூச்சியுஞ் சேறு
மெப்படி யொட்டாதோ; புளியம்பழமுந் தோடுமெப்படி
யொட்டாதோ; அப்படிக் கருமக்கூட்டங்கள் ஞானியாயிரு
க்கிற ஆத்மாவை யொட்டாது. இன்னம் ஞானமாகிற கத்தி
கருமங்களாகிற பாசங்களை ஆயிரந்துண்டாய்ச்சேதித்துவிடு
மென்று சாஸ்திரத்திலே பேரிகைவாத்தியம் போலே சரு

திசப்தங் கோஷிக்கிறது. ஆனபடியினாலே ஞானத்துக்கும், கருமத்துக்கும், அத்தியந்தம் விரோதந்தானே. கருமவரிசை ஜன்மவரிசையைக் கொடுக்குந் திரும்ப ஜனனந் திரும்ப மரணமென்கிற வரிசையைக் கொடுக்குங் கருமத்தினாலே மோக்ஷமில்லை. அப்படிப்பட்ட அனந்தகோடி ஜனனங்களிலே யார்ச்சித்த கருமராசிகளை ஞானாக்கினி நாசம்பண்ணிச் சாம்பராக்கிவிடும். ஞானத்துக்கும், கருமத்துக்கும், வெகு விரோதமென்று சித்தாந்தம். இதுவல்லாமல்:— ஞானஞ் சர்வசிரேஷ்டமாக விருக்கிற தருமம். அஃதெப்படி யென்றால்? ஞானதருமஞ் சொற்பமாயிருந்தாலும்; ஆத்ம ஞானியாயிருக்கிற புருஷனை மஹாபயத்திலே நின்றும் ரக்ஷிக்குமென்று கீதாவசனம். இதுமாத்திரமல்ல:—யாகம், தானம், சதாசாரம், வாகிய இந்திரியநிக்கிரகம், அகிம்சை, ஸ்நானம், வேதாத்தியான மிவைகளுக்குள்ளே ஆத்மஞான தருமந் தானே சிரேஷ்டமென்று வியாக்கியவர்க்கர்வசனம். இது மாத்திரமல்ல:—எக்கியந் தானந் தபசுகளுக்குள்ளே ஞானந்தானே சிரேஷ்ட தருமமென்று மனுவசனம். கிரேதாயுகத்திலே தபசு சிரேஷ்ட மென்றும், திரேதாயுகத்திலே ஞானஞ் சிரேஷ்டமென்றும், பராசர்வசனம். இதுமாத்திரமல்ல:—சொற்ப ஜலங்களாயிருக்கிற அனேக ஊத்துக்களிலே யாதொரு ஸ்நானாதி லாபமுண்டோ; அந்தச்சவுக்கியமெல்லாம் பூரண தடாகத்திலே யேகதேசத்திலே யந்தலாபமெல்லாங் கிடைக்கிறதுபோலச் சகலகருமக்கூட்டங்களினாலேயும் யாதொருசவுக்கியமுண்டோ அந்தசவுக்கியமெல்லாம் ஞானயேகதேசத்திலேதானே லபிக்குமென்று கீதாவசனம். இதுமாத்திரமல்ல:—ஞானத்துக்குங் கருமத்துக்கு மிகுதியாய்ச் சுவர்ணத்துக்கு மிரும்புக்கும்போல வுக்கிருஷ்

டபாவம் நிக்கிருஷ்டபாவ முண்டென்றும், ஞானத்தைத் தானேசரணமாயடையென்றும்,கருமம்அற்பபலமென்றும், கீதாவசனம். அருச்சுனன், ஞானஞ்சர்வோத்தமமாய்கருமம் நிக்கிருஷ்டமானு லப்படிக்கொத்த கோரமாயிருக்கிற கருமத்திலே நம்மையேனேவுகிறீரென்று கேட்க? அதற்குப் பகவான் சொல்லுகிருர். ஞானிகளுக்குப்பிரமநிஷ்டையும், அஞ்ஞானிகளுக்குக் கருமநிஷ்டையு மென்று பரிகாரஞ் சொன்னுர். ஞானம் மோக்ஷபலம்;கருமம் பாவபலமென்று மனுவசனம். ஞானமன்றியிலே யிருக்கிறவன் சமுசாரத்தை யடைவன். ஞானமுள்ளவன் கருமபந்தத்தினின்றும் விடுபட்டு முக்தியடைவனென்று மனுவசனம். ஞானம்வந்தால்; ஒருகருமமும் பண்ணத்தேவையில்லை. ஞானம் வந்தால்; சகலகருமங்களும் முடிந்தது.யாதொருத்தன் ஆத்மரதியாயிருக்கிருனே; யாதொருத்தன் ஆத்மதிருப்தனு யிருக்கிருனே; அவனுக்கொரு கருமக்கூட்டங்களும்பண்ணத்தேவையில்லையென்றும், அவனுக்குக் கருமம்பண்ணினு லொருபலமுமில்லையென்றும்,கருமம்பண்ணுதகினுலேபிரத்தியாபாயமில்லையென்றும்,ஞானியா யிருக்கிறவனுக்குக் கருமமேபண்ணத்தேவையில்லை யென்றுங் கீதாவசனங்கள். யாதொருத்தன் பிரமசுகத்தை யடைந்திருக்கிருனே; யாதொருத்தன் பிரமதிருஷ்டியாகத்தானே யிருக்கிருனே; அவனுனுவிதத்திலும் பிரமத்தைத்தானே யடைவனென்று கீதாவசனம். யாதொருத்தனுக்குத் தேகேந்திரியாதிகளிலே நானென்கிறபுத்தியில்லையோ; யாதொருத்தனுக்கு நான் கர்த்தாவென்கிற புத்தியில்லையோ; அப்படிப்பட்டஞானி லோகஹிம்சைகளெல்லாம் பண்ணினுலுமவன்பண்ணவுமில்லை. அவனை யந்தக் கருமங்களும் பந்தியாதென்று கீதாவசனம்.

திரவியமயமாயிருக்கிற யெக்கியத்தைக் காட்டிலும்; ஞான யெக்கியம்மிகவுஞ் சிரேஷ்டமென்றும், ஞானிகளாயிருக்கிற பேர்களுக்கு வொருகருமமும்பண்ணத்தேவையில்லை யென்றும்,சகலரிஷிகள்சம்மதம். இகலோகபரலோககருமங்களெல்லாம் விட்டு வேதங்களும் விட்டு ஆத்மாவைத்தேடி யறிந்தால் மோக்ஷப் பிராப்தியென்று ஆபஸ்தம்பாசாரியர் சொன்னார். சகலதருமங்களையும் விட்டுத் துவிசனனவன் ஆத்மஞானத்தையுஞ் சமதமாதிகளையு மெத்தனம்பண்ணிச் சம்பாதி யென்று மனுவசனம். சகலகருமங்களையும் விட்டு யென்னைத்தானே சரணமாயடை; சகலபாவ சகலகருமங்களினின்றும்விடுபடுவாயென்றுபகவான் வசனம். இப்படிஞானிகளா யிருக்கிறபேருக்குச் சகலகருமங்களையும் விட்டு ஆத்மநிஷ்டனாகத்தானே யிருக்கச் சொல்லிச் சகல சுருதி சம்மதமானாலும்; லோகோபகாரார்த்தமாய் ஞானிகளுங் கருமம் பண்ணவேண்டும். ஞானியா யிருக்கிறபேர் நல்லாசாரத்தைப் பண்ணினால்; மஹாத்மாக்களைப் பார்த்து இதராளுஞ் சதாசாரத்தைப் பண்ணுவார்கள். மஹாத்மாக்கள் யெதைப் பிரமாணமாகச் சொல்லுகிறார்களோ; அதுதானே பிரமாணமென்று இதராளுங் கொள்ளுவார்கள். ஆனபடியினாலே லோகோபகாரார்த்தமாகச் சற்கருமங்களை ஞானிகளும் பண்ணவேண்டும். அதுமாத்திரமல்ல:—வசிஷ்டர், பரத்துவாசர், அத்திரி, பிருகு, குச்சரர், அகஸ்தியர், நாரதர், கௌதமர் முதலாயிருக்கிற ரிஷிகளும், சனகாதிராஜரிஷிகளும், திவ்விய ஞானபரர்களாய் யோகசித்தாளாய் ஞானசித்தாளா யிருக்கிறபேர்கள் சகலரும்; லோகோபகாரார்த்தமாகச் சற்கருமக்கூட்டங்களைப் பண்ணினார்களென்றும், இதராளையும்; பண்ணச்சொல்லி விதித்

திருக்கிறார்களென்றும், லோகபுராணங்களிலே பிரசித்தம். ஞானந்தானே சர்வப்பிராயச்சித்தம். ஞானம்வந்தால்; இலவம்பஞ்சிலே தீப்பற்றினு லெப்படிப் பஸ்மமாமோ; அப்படிச் சகலகருமங்களு ஞானக்கினியினாலே சாம்பராய்ப்போமென்றும், ஞானியாயிருக்கிறவனைப் புண்ணியபாவம் பந்தியாதென்றும், அசுவமானது இலே பிரண்டு ரோமங்களை யெப்படி யுதறுமோ; அப்படிச் சகலமு முதறிப்போடுவனென்றும், ஒருபாவங்களும் ஞானியை யொட்டாதென்றும், காஷ்டங்களை யெப்படி அக்கினிபகவான் தகிக்கிறாரோ; அப்படி ஞானக்கினி கருமகாஷ்டங்களையெல்லாந் தகித்துப் போடுமென்றும், ஞானத்துக்குச் சமானமாகப் பிராயச்சித்தமில்லையென்றும், ஓடத்தினாலே யெப்படிச் சமுத்திரத்தைக் கடப்பனோ; அப்படி ஞானதெப்பத்தினாலே சகலபாவங்களையுங் கடப்பனென்றும், ஞானவிவேகத்தினாலேசகலமோகங்களையும்; கடப்பனென்றும், பகவான் முதலானபேர்களுஞ் சாந்தோக்கிய வுபநிடத்துஞ் சொல்லுகிறது. அதுமாத்திரமல்ல:—தைத்திரிய வுபநிடத்துந் தாண்டினி சுருதியுமிப்படியே சொல்லுகிறது. அசுவமேதயாகம்போலே ஞானஞ் சர்வப்பிராயச்சித்தமென்று சகலவேதங்களுக்குஞ் சகலரிஷிகளுக்குஞ் சம்மதம். இதுவல்லாமல்:—ஆத்மஞானம் சர்வப்பிராயச்சித்தமென்று ஆபஸ்தம்பாசாரியர் சொல்லியிருக்கிறார். மிருத்துஜலங்களினாலே பாகியசுத்தியென்றும், ஆத்மபாவனையினாலே ஆந்தரசுத்தியென்றும், ஸ்மிருதிவசனம். எக்கியந் தானந் தபசுகளெல்லாம் சிரம்பப் பிரயாசம், ஆயாசம், திரவியச்செலவு, சரீரக்கிலேசங்களுண்டு. திரும்பவருதுகள்; அற்பபலன்கள். ஆத்மத்தியானம்முக்திபலம். அன்றாடகம் பாவக்ஷயம், அந்தத்திலே முக்தியென்றும்

ஆத்மஞானத்திலே பிரயாசமில்லையென்றும், சுலபோபாயமென்றும், இதுவல்லாமல்:—தருமார்த்தகாமங்களை ஆசிரிக்கவேண்டாம்; அற்பபலன்களென்றும்,எந்தவித்தை மோக்ஷசாதனமோ; அந்தவித்தையை யப்பியாசிக்கவேண்டுமென்றும், எந்தக்கருமம் பந்தமல்லவோ; அந்தக்கருமத்தைப் பண்ணவேண்டுமென்றும், பந்தமாயிருக்கிற கருமங்களையெல்லாம் விட்டுவிடவேண்டுமென்றும், ஆத்மவித்தையைத் தவிர இதரவித்தைகளெல்லாஞ் சிற்பசாஸ்திரம்போலேயென்றும், இப்படி பிரகலாதர் சொல்லியிருக்கிறார். தன்னை ஈசுரன்; பரமாத்மாவென்றறிந்தால்; அதுதானிவனுக்கு ஆத்மசுத்தியென்றும், வியாக்கியவர்க்கர் வசனம். சகல நதிகளுஞ் சரஸ்வதி கங்கைகளுக்குச் சமானம். சர்வபருவதங்களும் புண்ணியக்ஷேத்திரங்கள்தானே; தன்னாத்மா சகல தீர்த்த சொரூபர். இப்படியிருக்க பாகியத் தீர்த்தயாத்திரைகளா யேன்விருதாவிலே திரிகிறீர்களென்று பாரதத்திலே துலாதாரவசனம். ஆத்மாவாகிற நதி, சமதமாதிகளாகிற தோயம், சீலமாகிற மடு, சத்தியமாகிற கரை, தயையாகிற அலை, இப்படிப்பட்ட ஆத்மதீர்த்தத்திலே; ஸ்நாம்பண்ணினாலந்தராத்மாச் சுத்தியடைவர்.

பாகியதீர்த்தங்களிற் கோடிதீர்த்தங்களிலே ஸ்நானம் பண்ணினாலும்; ஆத்மசுத்திவாராதென்றுபாரதத்திலே தீர்த்தயாத்திரையிலே தருமருக்கு ரோமரிஷி சொல்லி யிருக்கிறார். நூறு ஜன்மங் கங்காதீரச் சங்கமங்களிலே ஸ்நானம் பண்ணினாலும், நூறு ஜன்மங்களிலே விரதங்களை யாசரித்தாலும், மஹாதானங்களைப் பண்ணினாலும், ஞானவிஹீனாக விருக்கிறவனுக்கு முக்தியில்லை யென்றும், இது சர்வமத சம்மதமென்றும், ஆசாரியர் வசனம், ஜலபூரணங்

களாயிருக்கிற தீர்த்தங்களும், சிலாமயமா யிருக்கிற மூர்த்த ங்களும், பாவிகளாயிருக்கிறபேர்களைச் சிலகாலங் கழித்துப் புனிதமாகும்படி பண்ணும். ஞானிகளானால்; உடனே புனித மாகும்படி பண்ணுவார்கள். இது நிச்சயமென்று ஜலபூரண ங்களா யிருக்கிற தீர்த்தங்களையும், சிலாதி தேவதைகளை யும், ஞானிகளா யிருக்கிறபேர்களடையத்தக்கதில்லை. ஆத் மஞ்ஞானமே சகல தீர்த்தங்களென்றும், ஆத்மாவே சகல தேவதைகளென்றும், நிச்சயமாக யிருப்பார்கள். சகல பிர காசங்களும், சகல தேயசுகளும், எப்படிச் சூரியனிடத்தி லே அந்தர்ப்பூதமோ; சகல தீர்த்தங்களும், சமுத்திரத்தி னிடத்தி லெப்படி யந்தர்ப்பூதமோ; சகல மந்திரங்களும், வேதத்தினிடத்திலே யெப்படி யந்தர்ப்பூதமோ; அப்படிப் போலே சகல தேவதைகளும் பரமாத்மாவி னிடத்திலே யந்தர்ப்பூதம். பிரமஞானிகள்பிரமந்தானே; நிரம்பச்சொன் னதுபோதும். ஆத்மாவுக்கு; ஞான விஷயத்துவ முண் டோ; இல்லையோ; என்றுக்ஷேபம் வர:— சடவஸ்துவைப் போலே சித்துவஸ்துவாயிருக்கிற ஆத்மாவுக்கு; ஞானவிஷ யத்துவ மில்லை. ஆத்மாச்சடமயர் ஞான விஷயத்துவ மு ண்டென்று தார்க்கிகாள் சொல்லுவார்கள். வேதாந்திகள் ஆத்மாப் போதமயரானபடியினாலே ஆத்மப்பிரகாசத்திலே ஞானாபேக்ஷை தேவையில்லை, சூரியப் பிரகாசத்திலே வே றே சூரியாபேக்ஷை தேவையில்லை. தீபப்பிரகாசத்திலே தீபாந்தராபேக்ஷை தேவையில்லை. ஆத்மா சொப்பிரகாச சின்மயரானபடியினாலே ஆத்மப்பிரகாசத்திலே ஞானாந்த ராபேக்ஷை தேவையில்லை. ஆனபடியினாலே; சாஸ்திர விசாரத்திலே யத்தனம் பண்ணத்தேவையில்லை. ஞானசம் பாதனந்தேவையில்லையென்று சங்கைவர;--வித்தியாரண்ணி

யசுவாமிகள் ஆத்மாச் சொப்பிரகாச சின்மய ஞானபடியினு லே; சொப்பிரகாசத்திலே ஞானாந்தராபேக்ஷை தேவை யில்லை. ஞானவிஷயத்துவங் கூடாதென்றூர்கள். ஆனுல்; சாஸ்திரக்கியான மேதுக்கென்று வர:— ஆத்மாவினிடத்தி லே யிருக்கிற அவித்தைபோகிற நிமித்தியஞ்சாஸ்திர சென் னிய விர்த்திக்கியானம் அபேக்ஷிதம். அகண்டாகாரவிர்த் தியினுலே பிரமத்தினிடத்திலே யிருக்கிற அவித்தைக்கு நா சம் வருமென்று சொல்லி விர்த்தி விஷயத்துவம் வேதாந் திக ளங்கீகரித்தார்கள். நிரம்பச் சொன்னது போதும். இனி ஞானத்தினுலே மோக்ஷம் அது தானே; புருஷார்த்த மென்கிற தெப்படிக் கூடும்; தருமார்த்த காமமோக்ஷங் கள்நாலும்புருஷார்த்தமென்று பிரசித்தியாயிருக்கிறதென் று சங்கைவர:— புருஷனுக்கு அர்த்தம்சுகலக்ஷணம்.அஃத ன்ரூ; புருடார்த்த பதத்துக்குப்பொருள். அந்தச்சுகந்தரு மார்த்தகாமங்களிலே யில்லையே; தருமார்த்த காமங்களுக் கு ஆதியுமந்தமு மநித்தியத்துவமுங் கண்டிருக்கிரூமே. தருமார்த்தகாமங்கள் துக்காத்மக மன்ரூ; விசாரித்துப் பார்த்தாலவைகளிலேசுகமில்லையே; அவைகள்சுகாபாசந்தா னே. அவைகளிலேசுகபுத்திப்பிராந்திகற்பிதந்தானே. நித்தி யப்பிரமமல்லோ சுகம். அஃதன்ரூ; மோக்ஷம். அஃதேபுரு டார்த்தமென்கிறது நிச்சயந்தானே. இனி யெக்ஞாதிகளுக்கு ஞான சாதனத்துவ முண்டோ வில்லையோ வென்றுவர:— சிலபேர் யெக்ஞாதிகளுக்கு ஞானசாதனத்துவமில்லை. சிரவ ணுதிகளுக்குத்தானே ஞான சாதனத்துவமென்று சொல் லுவார்கள்.

சிலபேர் பெரியவாள் யெக்கியந் தானந் தபசுகள் நித்தி யநைமித்திய கருமங்கள் ஈசுரப்பிரீதியார்த்தமாகப் பண்ணி

ளுல் ஞானமுதிக்கு மென்று சொல்லுவர்கள். சிலபேர் பெரியவாள் நித்தியநைமித்திய கருமங்கள்யெக்கியந்தானந் தபசுகள் ஈசுரப்பிரீதியார்த்தமாகப் பண்ணினுல் ஞானவிச்சை யுதிக்குமென்று சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் இந்தப்பக்ஷங்கூடாது. எக்கியந்தானந்தபசுகள் நித்தியநைமித்திய கருமங்கள் பாவக்ஷயசாதனம். சித்தசுத்திசாதனம். பகிரங்கசாதனம். சமதமாதிகள் அந்தரங்கசாதனம். சிரவணமனனுதிகள் முக்கியசாதனம். சிரவணத்திஞலே தானே; பிரமஞானம் வரவேண்டுமென்று சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் சிரவணத்திஞலேதானே; ஞானம் வரவேண்டுங் கருமத்திஞலேதானே ஞானம் வரமாட்டாதே;யென்றுசொல்லுவார்கள். அஃதெப்படியென்ருல்? காயத்திரி, பஞ்சாக்ஷரி, எல்லாரிடத்திலுமிருக்கிறது. பொருட்டெரியாது. பொருட்டெரியவேண்டுமென்றுகோடியெக்கியந் தானந் தபசுகள் விரதங்கள் கங்காநதி ஸ்நானங்களைப் பண்ணினுலும்; அவைகட்குப்பொருட்டெரியாது. அஃதெப்படித்தெரியுமென்ருல்? பொருட்டெரிந்த மஹாத்மாக்களிடத்திலே கேட்டுக் காயத்திரிக்கும், பஞ்சாக்ஷரிக்கும், பொருட்டெரியவேண்டும். மார்க்கந்தெரிந்தவனிடத்திலே நின்றுங் கேட்டு மார்க்கந் தெரிந்துகொள்ளுகிறுப்போலே சிரவணத்திஞலேதானே; ஞானம்வரவேண்டுங் கருமத்திஞலே ஞானம் வரமாட்டாதென்றுநிச்சயம். சிலபேர் பெரியவாள் வேதாந்த சாஸ்திரத்திற்கும், பிரமத்துக்கும், பிரதிபாத்திய பிரதிபாதக சம்பந்தம். சாஸ்திரத்துக்கும், பிரமாத்ம அயிக்கியத்துவத்துக்கும், விடய விடயீபாவ சம்பந்தம். சாஸ்திரத்துக்கும், முக்திக்கும், சாதனசாத்தியபாவ சம்பந்தம். முமுக்ஷுவாய்ச் சாதனசதுஷ்டயசம்பன்னன் அதிகாரி

யென்றுஞ் சம்பந்தசதுஷ்டயஞ் சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் வேதாந்த சிரவணத்திலே மநுஷனதிகாரி. பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திராளெல்லாரு மதிகாரிகளென்றுசொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் பிராமண க்ஷத்திரிய வைசியா ளிந்த மூன்றுபேரு மதிகாரியென்று சொல்லுவார்கள். இதுவல்லாமல்:— சிலபேர் பெரியவாள் வேதாந்தசிரவணத்திலே சந்நியாசிகள் மாத்திரமே; அதிகாரி யென்று சொல்லுவார்கள். இதுவல்லாமல்:— சந்நியாசி களுக்குத்தானே; சிரவணாதிகார மென்றும், ஞானத்திலே யதிகாரமென்றும், சந்நியாசி களுக்குத்தானே; ஞானநிஷ்டையென்றும், இதராளுக்கு ஞானவதிகாரமில்லை யென்றும், சந்நியாசம்பண்ணிச் சிரவணம்பண்ணச் சொல்லியும், சந்நியாசமில்லாமல் ஞானம் வந்தாலும்; நிஷ்டை சித்திக்கிறதற்காக சந்நியாசம்பண்ணச் சொல்லியும், சந்நியாசமில்லாமல் நிஷ்டை சித்தியாதென்றும், ஆனதால்; லௌகிக கருமங்களையும், விக்ஷேபங்களையும்,வரையறவாகப்பரிகரித்துவிட்டுச் சந்நியாசி ஆச்சிரமத்தை அங்கீகரித்து அப்பால் வேதாந்த சிரவணம்பண்ணு. அப்பால்நிஷ்டையைத் தேடென்று ஆசாரியர் மதம். இந்தப்படி ஆபஸ்தம்பரும், மனுவும், வேதசாஸ்திரபுராணங்களெல்லாமும், சந்நியாசியைத்தொட்டுச் சந்நியாசியாச்சிரமத்தையே; அதிகரித்துச் சந்நியாசதருமமாக ஞானத்தைச் சொல்லுகிறது. இனிமேல் பகவானுடைய மதம்:—காமிய கருமங்களைவிட்டா லதுவே சந்நியாச மென்றும், நித்திய நைமித்திய கருமங்களைப் பண்ணி ஈசுரன் பொருட்டுப் பலத்தைக் கொடுத்தா லதுவே சந்நியாசமென்றும், பகவான் சொல்லி யிருக்கிறார். சாங்கியாளெல்லாக் கருமங்களுந் தோஷத்தோடே கூடியிருக்கிற

படியினாலே யொருகருமமும்பண்ணலாகாதென்று சொன்னார்கள். பகவான்றானே; ஞான சந்நியாசமே; சந்நியாசமென்றும், கரும சந்நியாசம்; சந்நியாசமல்ல வென்றும், சொன்னார். மீமாம்ஸாள் கருமமவசியம்பண்ணவேண்டுமென்று விதியிருக்கிற படியினாலே கருமங்களை விடலாகாதென்று சொன்னார்கள்.

பகவான்றானே; எக்கிய தான தபசுக ளெல்லாம்,பவித்திரம், பிராயச்சித்தங்கள், பாவக்ஷயசாதனங்கள், ஆனபடியினாற் பண்ணச்சொல்லி விதியிருக்கிறபடியினாலே; பலத்தைப் பரிகரித்து அவசியம் பண்ணவேண்டுமென்று சொன்னார். கருமத்தைப் பண்ணிக்கரும்பலத்தைப்பரிகரிக்க அதுவே சந்நியாசமென்று சொன்னார். மோகத்தினாலே கருமங்களை விட்டுவிட அது தாமத சந்நியாசமென்றுஞ்சொன்னார். துக்க புத்தியினாலேயும், காயக்கிலேச பயத்தினாலேயும், கருமத்தை விட்டுவிடுவது ராசதசந்நியாசமென்றுஞ் சொன்னார். அவசியங் கருமங்களைப் பண்ணி நான் பண்ணினேனென்கிற அபிமானத்தையும்,பலத்தையும்,பரிகரித்தாலது சாத்தீகசந்நியாசமென்றுஞ் சொன்னார். புண்ணியஞ் சுவர்க்கத்தைக் கொடுக்கும். பாவம் நரகத்தைக்கொடுக்கும். புண்ணியமும், பாவமுங் கூடிய மிசிரகருமம்; மநுஷலோகத்தைக் கொடுக்கும். இப்படி மூன்றுவிதமாயிருக்கிற கருமங்களுங் காமிய துராபிமானியைப் பந்திக்கும். பலவிச்சையில்லாமல், துரகங்காரமில்லாமல், ஞானியாயிருக்கிறவனை இந்த மூன்றுவிதகருமங்களும், பந்தியாதென்று பகவான் சொன்னார். துராபிமானமும், பலவிச்சையும், பரிகரித்தாலதுவே சந்நியாசமென்றுஞ் சொன்னார். ஞானமுண்டானால்; பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன், ஸ்தி

ரீக ளெல்லாருக்கும்; மோக்ஷமுண்டென்றும், ஞானுதிகார மெல்லாருக்கு முண்டென்றும், பகவான்றுனே சொன்னுர். நியாயத்திலே அருத்தசம்பாத்தியம் பண்ணிநியாயப்பிரகார மாய் நடந்து அதிதிகளைப் பூசித்துப் பிதிர்சிரார்த்தங்களைப் பண்ணிஞானியாயிருக்கிறகிரகஸ்தன்முக்தியடைவனென்று கிரகஸ்தனுக்கு ஞானவதிகாரமும், முக்திப்பிராப்தியும், உண்டென்று வியாக்கியவர்க்கர் சொன்னுர். மானமில்லாத தன்மையாதிகுணங்களோடே கூடியிருக்கிறவன்; ஞானுதி காரியென்றும், பகவான்சொன்னுர். ஈசுரபக்தன்றுனே; பிரமத்தையறிந்தால்; மோக்ஷத்தை யடைவனென்றும், பக் தன்றுனே; அதிகாரியென்றும், பகவான் சொன்னுர். யா தொருவறிவிஞலே நம்மையடைவனே; அப்படிப்பட்ட வறி வை நம்முடையபக்தனுக்கு நாந்தானே கொடுப்போமென் றுஞ் சொன்னுர். நம்முடையபக்தன் சோகம் பாவனை பண் ணினுனுல் நாந்தானே அவனுடைய வவித்தையை நாசம் பண்ணுவோமென்றுஞ் சொன்னுர். நாம் பக்தியினுலேதா னே; அடையத்தக்கவர், வேறேயொரு சாதனங்களினுலே அடையக்கூடாதென்றுஞ் சொன்னுர். யாதொருத்தரிடத்தி லே நின்று மிந்தச் சராசரப் பிரபஞ்சங்களெல்லா முண்டா யிற்றோ; அப்படிக்கொத்த பரமேஸ்வரனைச்சுகர்மங்களினு லே பூசித்தால்; ஞானசித்தியடைவனென்றும், பக்தன்று னே ஞானவதிகாரியென்றும், சொன்னுர். உபசாந்தி பகி ரிந்திரியநிக்கிரகம், தபோநியமம், சுசித்துவம், பொறுமை, ஒடுக்கம், வணக்கம், வேதசாஸ்திர சம்பத்தி, சமாதி, விக் கியானமுண்டென்கிற புத்தி, இதுகளெல்லா மெவனுக்குண் டோ; அவனே பிராமணன். இதுவேபிராமணதருமமென்று பகவான்சொன்னுர்.

பூததயை,பொறுமை, அசூயையில்லாமை,சுசித்துவம், ஆயாசமில்லாமை, மங்களவசனம், எதிர்ச்சலாப சந்துஷ்டி, நிராசை,இவைகளெல்லாம்:ஆத்மகுணங்கள்.இந்தவெட்டுக்குணமுள்ளவனே; ஞானாதிகாரியென்று கௌதமாசாரியர் சொன்னார். அக்குரோதாதி குணங்களுமெவனுக்குண்டோ; அவனே ஞானாதிகாரியென்றும், ஞானமும், அக்குரோதாதிகளும், சகல ஆச்சிரமங்களுக்கும்; சகல வர்ணங்களுக்கும்;சாதாரணமென்று ஆபஸ்தம்பர்வசனம். பிரவர்த்தமென்றும்,சுகசாதனமென்றும்,காமியகருமஞ்சொல்லப்படும். நிவர்த்தமென்றும், மோக்ஷசாதனமென்றும், நிஷ்காம கருமஞ் சொல்லப்படும். இந்தப்படிவைதீககரும மிரண்டுவிதமென்றுஞ் சொல்லப்படும். சுகசாதனகாமியகருமம்பந்தகம். பலவிச்சையில்லாமல் நித்தியநைமித்திய லக்ஷணகருமம் ஞானத்தைமுன்னிட்டுக்கொண் டிருக்குகை மோக்ஷசாதனமென்று மனுவசனம். அகிம்சை,சத்தியம், திருடாதிருத்தல், பிரமசரியம் தமம், சமம், சவுசம், தயை, வணக்கம், சந்தோஷம், ஆகப்பத்தும், இயமங்கள். இந்தக்குணங்களுள்ளவனே;சர்வத்தி ராதிகாரியென்று பதஞ்சலிரிஷிமதம். வருணன் பிருகுமஹாரிஷிக்கு ஞானோபதேசம் பண்ணினார். பிரமத்துவுநாசிகேதருக்கு ஞானோபதேசம் பண்ணினார். பிரமாவிந்திரனுக்கு ஞானோபதேசம்பண்ணினார். சனற்குமாரர் நாரதருக்கு ஞானோபதேசம் பண்ணினார். வியாக்கியவர்க்கர் மைமித்திரிக்கும், ஜனகருக்கும், ஞானோபதேசம் பண்ணினார். உத்தாலகர் சுவேதகேதுவுக் குபதேசம்பண்ணினார். ரயிக்கியர் சானசுருதியென்கிறராஜாவுக் குபதேசம்பண்ணினார். ஒருரிஷி கேயராஜாவுக் குபதேசம்பண்ணினார். பகவான் அருச்சுனனுக் குபதேசம்பண்ணினார்.சவுரி சூடாலை, சுல

யை, கார்க்கி, மைத்திரி யென்கிற ஸ்திரீகளுக்கு ஞானோ பதேசம்பண்ணினார். இவர்களெல்லாரும் ஞானசித்தாள். சூ த்திர வேடனாகிறதரும வியாதன கோமுட்டித் துலாதாரா ளிவர்கள் ஞானசித்தாள். வியாசர், வசிட்டர்,பரத்துவாசர், அத்திரி, பிருகு, குச்சரர், கௌதமர், காசிபர், ஆங்கிரீச ரிவ ர்க ளெல்லாருந் தபோஞானிகள். ஞானசித்தாள். ஆனபடி யினாலே:—ஞானஞ்சகல வர்ணங்களுக்கும்,சகல ஆச்சிரமங்க ளுக்கும்,சாதாரணந்தானே. பஞ்சசிகாவென்கிற ரிஷீசுவரர் கேசராராஜாவுக்கு ஞானோபதேசம்பண்ணினார். ஜடபரதர் சவீரராஜாவுக் குபதேசம்பண்ணினார். கபிலர் தம்முடைய மாதாவாகிய தேவபூதிக் குபதேசம் பண்ணினார். பகவான் உத்தவருக் குபதேசம்பண்ணினார். ரிபு நிதாகருக் குபதேசம் பண்ணினார். காண்டிகருக்கு கேசத்துவ ருபதேசம்பண்ணி னார். பிப்பலாதர் கபந்தினி முதலான ஆறுரிஷிகளுக் குபதே சம்பண்ணினார். வியாசர் சுகருக் குபதேசம்பண்ணினார். இ ந்தப்படிக்கு அனேகம் ரிஷிக ளனேகமிராஜாக்களுக்கு ஞா னோபதேசம்பண்ணினார்கள். பகவான்விவசுவானாகிற சூரிய னுக்குபதேசம்பண்ணினார். விவசுவான் மனுவுக் குபதேசம் பண்ணினார். மனு இட்சுவாகுக் குபதேசம்பண்ணினார். இந்த ப்படி சர்வத்திரா ஞானோபதேசஞ் சகலஜனங்களுக்கும் ரிஷிக ளுபதேசம்பண்ணியிருக்கிறார்கள்.

ஆனபடியினாலே ஞானஞ் சகலருக்குஞ் சாதாரணந் தானே. ஞானமே; சந்நியாசமென்றண்மை. ஞானம், வை ராக்கியம்,உபரதி மூன்றுமொன்றுக்கொன்றுசகாயம்.மூன் றுங்கூடவே யிருக்கும். வைராக்கிய முபரதி யிரண்டுமங் கம். ஞானம் பிரதானம். ஞானமில்லாம லுபரதியினாலே சத்தியலோகங் கிடைக்கும். ஞானமில்லாமல் வைராக்கி

யத்திறைலே சுவர்க்கங்கிடைக்கும். ஞானத்திறைலே மோக்ஷங்கிடைக்கும். ஞானப்பியாசி ஞானமுதிராமல் மரித்தானைல்; புண்ணியலோகங்களை யடைந்து தேவபோகங்களை புசித்து யோகப்பிரஷ்டனைக ராஜகுலங்களிலாகிலும், ஞானகுலங்களாகிற வியாசாதி ரிஷிகுலங்களிலாகிலும், ஞானிகள் குலங்களிலாகிலும், வந்து பிறப்பன். பிறந்து திரும்ப ஞானப்பியாசம் பண்ணிப் பூருவவாசனையினைலே ஞானத்தை யப்பியாசித்து ஞானசித்தி வந்துஅப்பால் முக்தியடைவன்.

உபரதியுடையவன், ஞானமன்றியிலே யிருக்கிறவன், சத்தியலோகமடைந்து திரும்பப்பிறப்பன். ஞானமில்லாம லுபரதியினைலேதானே முக்தியில்லை. ஞானத்திறைலேதானேமுக்தி. ஞானநிஷ்டையெவனுக்குண்டோ; அவன்பிராமணனைலும்,சண்டாளனைலும், அவன்நமக்குக்குருவென்று ஆசாரியசுவாமிகள்மநுடாபஞ்சகத்திலேசொல்லியிருக்கிறார்கள். ஞானந்தேவதைகளுக்கும்,ரிஷிகளுக்கும்,மநுடாளுக்கும், சகலருக்கும், சாதாரணந்தானே. ஞானதிகாரஞ் சூத்திராளுக்குமுண்டென்று நிச்சயம்.கருமம்; இரண்டுவிதம். லௌகீக கருமமென்றும், வைதீக கருமமென்றும், சொல்லப்படும். அதில், வைதீககருமஞ் சுருதியுக்தமாகிய யெக்கியாதி கருமம். ஸமிருதியுத்தமாகிய சந்தியாவந்தனைதி கருமமென் றிரண்டுவிதம். அந்தக்கருமமஞ்சுவிதம். அதாவது? நித்தியம்,நைமித்தியம்,காமியம்,பிராயச்சித்தம், நிஷித்தமெனப்படும். நிஷித்தம் பாவமானதிறைலேநரகங்களைக்கொடுக்கும். காமியம்சுவர்க்காதிகளைக்கொடுக்கும். பிராயச்சித்தம்பாவங்களைப்போக்கும். நித்தியம் ஸ்நானசந்தியாவந்தனைதிகள்.நைமித்தியம் பிள்ளைபிறந்தால் சாதககரும

ம்,நாமகரணமுதலானது. அது சாத்திகமிராசதந்தாமதமெ
ன்று மூன்றுவிதம்.மிராசத தாமதங்களிரண்டும்;பந்தங்கள்.
சாத்திகமாகியநித்தியநைமித்திய மாத்திரம்பாவக்ஷயத்தை
ப்பண்ணிச் சித்தசுத்தியைக் கொடுக்கும். சித்தசுத்தியினாலே
நித்தியாநித்தியவஸ்துவிவேகம் வரும். நித்தியாநித்தியவஸ்
து விவேகத்தினாலே இகமுத்திரார்த்த பலபோக விராகம்
வரும்.இகமுத்திரார்த்த பலபோகவிராகத்தினாலே சமாதி
சட்கசம்பத்திவரும். சமாதிசட்கத்தினாலேமுமுக்ஷுத்துவம்
வரும். அந்த மோக்ஷவிச்சையினாலே சற்குருலாபம் வரும்.
சற்குருலாபத்தினாலே சிரவணம் வரும். சிரவணத்தினாலே
மனனம் வரும். மனனத்தினாலே நிதித்தியாசனம் வரும்.
அந்தப்பாவனாசமாதியினாலே சாக்ஷாத்காரலக்ஷண ஞானம்
வரும். ஞானத்தினாலே மோக்ஷமென்று சிலபேர் பெரிய
வாள் சொல்லுவார்கள். சிரவணந்தானே;ஞானசாதன மெ
ன்றுண்மை நிச்சயம். சாஸ்திரம் லோகோப காரார்த்தந்
தானே.குருசிஷியவுபதேச ஆசாரங்களைப் பார்த்தாற்சகலஜ
னங்களுக்கும்; ஞானவதிகாரமுண்டென்றுண்மை நிச்சயம்.
சிலபேர் பெரியவாள் பிராமணன், பிரமசாரி, கிரகஸ்தன்,
வானப்பிரஸ்தன், சந்நியாசிஆகியவெல்லாரு மதிகாரியென்
று சொல்லுவார்கள்.ஸ்திரீகளுக்கும்,சூத்திராளுக்கும், புரா
ணாதிகளினாலேயும், ஸ்மிருதிகளினாலேயும், ஞானசம்பாத
னமென்றும், ஞானத்தினாலே முக்தியென்றும், சொல்லுவா
ர்கள்.வேதாந்தசிரவணத்தினாலே சாதனசதுஷ்டய சம்பன்
னன் அதிகாரியென்று பாஷியம். வைஷ்ணவாள் கரும
காண்டமும், ஞானகாண்டமும், இரண்டுமொரு சாஸ்திரந்
தானே; இரண்டிலேயு மதிகாரி யொருத்தன்றானே; என்
று சொல்லுவார்கள்.

வேதாந்திகள் வைஷ்ணவ பக்ஷங் கூடாது. கருமகாண்டத்திலே; கருமியதிகாரி. சாதனரூபமாகிய சற்கருமம் விஷயம். பிரயோஜனஞ்சுவர்க்கம். இந்தக்கருமகாண்டத்திலே யத்தியாச முள்ளவனே; அதிகாரி. அந்தவத்தியாசமாவ தேதென்றுவர:—கருமசாஸ்திர மெல்லா மத்தியாசமூலம். அத்தியாசமாவது? பிரமை. அஃதெப்படியென்றுவர:—ஸ்தூலதேகத்திலே நானென்கிற வபிமானம் பிரதமவத்தியாசம். அப்பால்; நான்பிராமணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திர னென்கிற இரண்டாமத்தியாசம். நான் பிரமசாரி, நான் கிரகஸ்தன், நான் வானப்பிரஸ்தன், நான் சந்நியாசி, நான் புருஷன், நான் ஸ்திரீ, இது மூன்றுமத்தியாசம். இந்த வத்தியாச முள்ளவனைத் தொட்டுக்கொண்டு சகலகருமசாஸ்திரங்களுங் கருமகாண்டமும் பிரவர்த்தித்து. இந்தவத்தியாசங்க ளெவனுக்கிருக்கிறதோ வவனே; கருமவதிகாரி. இந்த வத்தியாசங்களொந்த ஞானிக்கில்லையோ; அவன் கரும வதிகாரியல்லை. அவனுக்கொரு கருமமும் பண்ணத் தேவையில்லை. அவன் முக்தாத்மாத்தானே. இந்த வத்தியாசங்கள்தானே கருமகாண்டத்துக்கு மூலம். அத்தியாசந்தானே கருமகாண்டத்திலே யதிகாரமென்று பாஷியம்,

ஞானகாண்டத்திலே:—முமுக்ஷு அதிகாரி. பிரமஞானம் விடயம். மோக்ஷம் பலம். ஆனபடியினாலே கருமகாண்ட ஞானகாண்டங்களுக்கு; அதிகாரி, விடயம், பிரயோஜனம், பேதமிருக்கிறபடியினாலே; இரண்டு சாஸ்திரங்களும் பின்னந்தானே. ஞானமார்க்க மென்றுங் கருமமார்க்கமென்றுங் காசிராமேசுர மார்க்கம்போலே யத்தியந்தம் பின்னங்கள்தானே. சாதனசதுஷ்டய சம்பன்னனே யதி

காரியென் றிங்கு சொன்னோம். அந்தச் சாதனசதுஷ்டய சம்பத்தியாவதேதென்றால்? நித்தியாநித்திய வஸ்துவிவேகம், இகமுத்திரார்த் தபலபோக விராகம், சமாதி சட்கசம்பத்தி, முமுக்ஷுத்துவம், ஆகியவிது சாதனசதுஷ்டயசம்பத்தி. நித்தியாநித்திய வஸ்துவிவேகமாவ தேதென்றால்? பிரமநித்தியம் பிரபஞ்ச மநித்திய மென்கிற விவேகம். இகமுத்திரார்த்த பலபோகவிராகமாவ தேதென்றால்? மநுஷலோகத்திலே யுள்ளசுகந்தாதி சந்தனஸ்திரீ போகாதி விடயபோகங்களெல்லா மெப்படி யநித்தியமோ; அப்படிப் போலே பரலோகாதி சுவர்க்கலோகத்திலே சுகந்தாதி சந்தனஸ்திரீ போகாதி விடயபோகங்க ளெல்லாங் கருமசெ ன்னிய மானபடியினாலே அநித்தியந்தானே.

ஆனதால்:— இகலோக விடயபோக விச்சையிலே நின்றும், பரலோக விடயபோக விச்சையிலேநின்றும், வாந் தியசன மலமூத்திரத்தின்பேரிலே விச்சையில்லாததுபோல வைராக்கியம் வரவேண்டுமென்று சொன்னது சிதந்தானே. விடயங்களிலே சுகமில்லாதபடியினாலே வைராக்கியம் அவசியம் வேண்டும். விஷத்தோடே கூடியிருக்கிற தேன் போல விஷயசுகமெல்லாந் துக்கத்தோடே கூடினதுதானே. விஷயங்கள், ஆதியுடனேயு மந்தத்துடனேயுங் கூடியிருக்கிறபடியினாலே துக்கவேதுக்கள்தானே. விஷயலாபத்துக்கு முன்னுந் துக்கந்தானே. அதுலபித்தாலு மிரக்ஷிக்கிறதுந் துக்கந்தானே. திரும்ப விஷயநாசமுந் துக்கந்தானே. விஷயங்கள் நசுவரமானபடியினாலே துக்கவேதுக்கள்தானே. ஸ்திரீதேகாதிவிடயங்களை விசாரித்துப் பார்த்தாலதுகளிலேசுகமுண்டோவில்லையே. துக்கத்தைத்தானே சுகமென்று பிரமிக்கிறான். ஆனபடியினாலே விடயங்கள்சுகா

பாசந்தானே. போகஞ்சுகமானால்;விகாரமில்லாதபோ தந் தப்போகத்திலே ருசிகாணுமே; போகித்தபிற்பாடு மதி லே ருசிகாணுமே; ஆனதாற் பிரவிருத்தியுங் காணுமே; தேகாதிவஸ்துக்களைத்தேகத்தில் பிரத்தியேகமாய்விசாரித் துப் பார்த்தா லெதிலே ருசி யெதிலே சுகந் தேகத்திலே சுகபுத்தி பிராந்திதானே. விடயங்களிலே சுகபுத்தி பிராந்தி மூலந்தானே. தாகித்தால் ஜலபானம் பண்ணுகிறான். பசித் தா லன்னம் புசிக்கிறான். காமவிகாரம் வந்தால் ஸ்திரீயுட னே போகிக்கிறான். தாகமில்லாதேபோனாற் ஜலபானம் பண்ணவில்லை. பசியில்லாதேபோனா லன்னபோசனமில்லை. காமவிகாரமில்லாவிட்டால் ஸ்திரீபோகம் பண்ணவில்லை. ஆனபடியினாலே வியாதிகளுக்குப் பரிகாரத்தைச் சுகமென் று பிரமிக்கிறான். ஸ்திரீபோகஞ் சுகமானா லெப்போதுஞ் சற்கரை தித்திப்புப்போ லெல்லாருக்கு மெப்போதுஞ் சுகமாகத் தோற்றவேண்டும். விகாரமில்லாதபோ திலே சுகபுத்தி தோற்றவில்லை. அதிலே வேண்டாமென்கிற புத்தி யும், நிவிர்த்தியும், கண்டிருக்கிறோம். அதுசுகமானா லெப் போதுஞ் சுகமாக வெல்லோருக்குந் தோற்றவேண்டும். பா லானுக்கும், விருத்தானுக்கும், ரோகிகளுக்கும், விகாரமில் லாதபேர்களுக்கும், விவேகிகளுக்கும், அதுசுகமாகத்தோற் றவில்லை. பாரி:—வாலையாயிருக்கிறபோதும், விருத்தையா யிருக்கிறபோதும், ரோகியாயிருக்கிறபோது மவளிடத்தி லே சுகங்காணுமே.

இது மாத்திரமல்ல:— விடயத்தை விசாரித்துப் பார்த்தாற்றுக்கந்தானே. ஆனபடியாற் சுகமில்லை. இந்தப் படி பக்தலகிரியும், பகவானுஞ் சொல்லி யிருக்கிறார்கள். வேதசாஸ்திர புராணங்களுஞ் சகலரிஷிகளுந் தத்துவப்பிர

கரணங்களிலே விடயங்களெல்லாந் துக்கந்தானே; சுகமில்லையென்று சொல்லியிருக்கிறார்கள். வாதம்பிடித்தவனுக்கும், வழிநடந்தவனுக்கும், குத்தப்பிடிக்க மிதிக்க விவைகளெல்லாஞ் சுகமாகத் தோற்றுகின்றன. சோம்பல்முறிக்க, போசனம்பண்ணி நித்திரைபண்ண, ஜலபானம் பண்ண, குளிர்ந்தவனுக்கு வெய்யிலக்கினியிவைகளெல்லாஞ் சுகமாய்த்தோற்றுகின்றன. சிலபேருக்குக் குளிர்ந்த காற்றும், சிலபேருக்கு நிவாதமும், சிலபேருக் குஷ்ணஜலமும், சுகமாகத்தோற்றுகிறது. சிலபேருக்குச் சுரம், கண்வலி, பல்வலி, தலைவலி, வயிற்றுவலி, இவைமுதலானரோகங்களுக் குபசாந்தியவுஷதம் பண்ணினு லந்த ரோகோபசாந்திகள் தானே; சுகமாகத் தோற்றுகின்றன. சிலபேருக்கு மச்சுவீட்டிலே படுக்க, வெளியிலே படுக்க, பனியிலே படுக்க, குளிர்ந்த சந்தனம் பூசிக்கொள்ள, குளிர்ந்த ஜலத்திலே ஸ்நானம் பண்ண, உஷ்ணஜலத்திலே ஸ்நானம்பண்ண, சிரங்குசொரிமுதலானவிவைகளெல்லாஞ் சுகமாகத்தோற்றுகின்றன. சிலபேருக்கு அவைகள் துக்கமா யிருக்கின்றன. பிரமதேவர் சுவர்ணத்திலேயும், ஸ்திரீ யினிடத்திலேயும், மோகத்தைச் சிருஷ்டித்தார். இந்த விரண்டிலேயு மாசை யற்றவன் முக்தன்றனே. அவன் ஈசுரன்றனே. ஆகாரம், நித்திரை, மைதுனங்கள், பசுக்களுக்கும், இராக மூடர்களுக்கும், சுகம்போலத்தோற்றும். விவேகிகளுக்குத் துக்கந்தானே. விவேகிகளிவைகளிலே சுகபுத்திகளை வையார்கள். இவைகள் நித்தவியாதிகள். பதினுயிர வருஷம் ஆகாரம், நித்திரை, மைதுனங்கள், பண்ணினுலும்; திருப்தி வாராது. திரும்பவுங் காமாசைகள் விருத்தியடையும். போகங்களினுலே காமத்துக்குத் திருப்தியில்லை. காஷ்டங்களினுலேயும், ஆச்சியாகுதி களி

னாலேயும், வன்னிக்கெப்படித் திருப்தியில்லையோ; நதி வருஷப் பிரவாகங்களினாலே சமுத்திரத்துக் கெப்படித் திருப்தியில்லையோ; அருத்தப் பிராப்தியினாலே ராஜாவுக்கும், தாசிகளுக்கும், திருப்தியில்லையோ; அன்னபானங்களினாலே யுதரத்துக்குத் திருப்தியில்லையோ; அப்படிப்போல லக்ஷம்வருஷம் விடயபோகப் புசிப்புகளினாலே காமாசைகளுக்குத் திருப்தி வாராது. திரும்பத் திரும்பக் காமாசைகள் விருத்தி யடைகின்றன.

எயாதியென்கிறராஜா பதினாயிரம்வருஷம் விடயபோகங்களைப் போகித்து ஆசையொழியாமல் விடயங்களை விட்டுப்போட்டுத் தபோவனத்துக்குப் போகிறவன்; போகிறபோது பூமியிலே யுள்ள தனதானியங்கள் ஸ்திரீ பசு ரத்தினங்களெல்லா விடயங்களும் ஒருத்தனாசைக்குப் போதாதென்றறிந்தொழிந்து போகக்கடவன். லக்ஷம்வருஷம் வேண்டிய விடய போகங்களைப் புசித்தாலும்; காமத்துக் குபசாந்தி வாராது. எப்படிப்போல வென்னில்? ஆச்சிய அவிசுகளை யோமம்பண்ணினா லக்கினி விருத்தியைத்தானே யடையுமுபசாந்தி யடையாதென்றறிந் துபரதியை யடையக்கடவனென்று சொல்லித் தபோவனத்துக்குப்போனான். அற்பங்களாய் நசுவரங்களாயிருக்கிற விடயங்கள் சுகமல்ல. பிரமசுகமே சுகமென்று வேதங்கள் சொல்லுகின்றன. நாரிகளுடைய தனபாரங்களைப் பார்த்து மோகத்தையடையாதே; அவைகள் மாமிசாதி விகாரங்கள், மனதினாலே யடிக்கடி விசாரி? உள்ளே யிருக்கிறது அருசியே. அந்தவஸ்துக்களை யடிக்கடி விசாரி? வெளியிலே சருமரூபாதிகளைக்கண்டு:—வஸ்திராபரணங்கள், மஞ்சட் பூச்சுக்கள், களபகஸ்தூரி குங்குமங்கள், இவைகளைக்கண்டு மோகியாதே, ஸ்தன

ங்கள் மாமிசமுடிச்சுக்கள், அவைகள் சுவர்ணகலசம்போலேயிருக்கின்றன. முகம் ரத்தஞ் சீழை சேர்ந்தது; அது சந்திரன்போலிருக்கிறது. பெருகாநின்றிருக்கிற மூத்திரத்தினாலே நனைக்கப்பட்டிருக்கிற ஜகனம்; அது யானைக்கும்பஸ்தலம்போலே யென்று கவீசுரர்கள் மெத்த ரூபங்களை வர்ணித்திருக்கிறார்கள். உற்றுப்பார்த்தால்:—உள்ளு மலபாண்டம், வெளியிலே நவத்துவாரங்களினா லடிக்கடி பெருகாநின்றிருக்கிற மலங்களோடே கூடியிருக்கிறது. பிரத்தியக்ஷமாய் மலமூத்திரப்பை. அடிக்கடி குளித் தடிக்கடி மலங்களைக் கழுவிச் சுத்தம்போலே தோற்றுகிறது. உள்ளே பார்த்தாற் சுத்தமில்லை. சுரோணித சுக்கிலங்கூடி யிந்தரூபமுண்டாயிற்றென்று ஆசாரியசுவாமிகள், பத்திரகிரி, அனேகரிஷிகள், சொல்லியிருக்கிறார்கள். ஆனதால்? விடயங்களிலே சுகமில்லைச் சுகம் பிராந்திதானே. உற்றுப்பார்த்தால் முழுதுந் துக்கந்தானே. அர்த்தங்க ளார்ச்சனையுந் துக்கந்தானே. ரக்ஷணையுந் துக்கந்தானே. நாசமுந் துக்கந்தானே. விடயார்ச்சனையுந் துக்கந்தானே. விடயரக்ஷணையும், விடயநாசமு மெல்லாமுந் துக்கந்தானே. பார்க்கப்போனால் பிரபஞ்சமெல்லாந் துக்கந்தானே. அணுமாத்திரமாகிலும் விடயஞ் சுகமல்லவென்றறிந் தடிக்கடி விசாரித்து உற்றுப்பார்த் திகலோகபோகங்களிலே நின்றும், பரலோக போகங்களிலே நின்றும், வைராக்கியம்வந்து விரக்தியடையவேண்டுமென்கிற துண்மை நிச்சயம். சமாதி சட்க சம்பத்தியாவதேதென்றால்? சமம், தமம், திதிக்ஷை, உபரதி, சிரத்தை, சமாதானம், ஆக ஆறு. இதிற் சமமாவதேதென்றால்? சிரவணாதியி லந்தக்கரணத்தை நிறுத்துகிறது. தமமாவதேதென்றால்? ஞானவிந்திரிய கருமவிந்திரிய நிக்கிரகம். திதிக்ஷையாவதேதென்

ருல்? பொறுமை. அதாவதேதென்ருல்? பிராரத்தவசமாய்
வருகிறதுவாராமற்போகாதென்று:—வந்த துக்கங்களையும்,
பிறத்தியாராலே வந்த அவமானங்களையும், சகிக்கிறது.
உபரதியாவதேதென்ருல்? சந்நியாசமும், நிஷ்காம கர்மா
நுஷ்டானமுமாம். வியவகாரலோபமுமாம். அந்தச் சந்நி
யாச மிரண்டுவிதம். அதாவதேதென்ருல்? பாகிய சந்நியாச
மென்றும், ஆந்தர சந்நியாசமென்று மிரண்டுவிதம். அதில்
பாகிய சந்நியாசமாவதேதென்ருல்? தாரபுத்திரதனாதி யீஷ
ணாத்திரயத் தியாகம். ஆந்தர சந்நியாசமாவதேதென்ருல்?
தேகேந்திரியாதிகளில் நானென்கிற மோகத்தியாகம். அது
தானே பாசபந்த சேதமென்று சொல்லப்படும். அந்தப்
பாசபந்த மெட்டுவிதம். அதாவதேதென்ருல்? அனாதி அவித்
தையா வாசனையினாலே:—நான் பிறந்தேன் வளர்ந்தேனிருக்
கிறேனென்கிற விவைமுதலானவை யாதியிலுண்டான பந்
தம். தாய் தகப்பன் பெண்டுபிள்ளை க்ஷேத்திரமுதலானதிரண்
டாம் பந்தம். வருணாச்சிரமதருமமும், அதின் கருமநிஷ்ட
யனுஷ்டான சங்கற்பமும், மூன்றும்பந்தம். கர்த்ருத்துவா
தி யகங்காரம்நாலாம்பந்தம். லட்சைகுணசங்கற்பந்தேவதா
சங்கற்பமைந்தாம்பந்தம். எக்கியம், விரதம், தபசு, தானம், நா
னாவிதமான சங்கற்ப மாரும் பந்தம். அணிமாதி அஷ்டமாசி
த்தி யேழாம்பந்தம். இயம நியமாதி அஷ்டாங்கயோகம்,
மோக்ஷாபேக்ஷ சங்கற்ப மெட்டாம்பந்தம். இப்படி நாலு
சங்கற்பாதியே பந்தபாசமென்று நிராலம்ப வுபநிடதத்
திற் சொல்லியிருக்கிறபடியினாலே:—இப்படிக்கொத்த பந்த
பாசத்தியாகமே சந்நியாசம். இனிச் சிரத்தையாவதேதென்
ருல்? குருவேதாந்த வாக்கியங்களில் விசுவாசம். சமாதான
மாவதேதென்ருல்? சித்தமேகாக்கிரமும், சிரவணாதிக் கநு

கூலமாயிருத்தலுமாம். முமுக்ஷுத்துவ மாவதேதென்றால்? மோக்ஷத்திலே விச்சை. அஃதெப்படிப்போல வென்றால்? அத்தியந்தஞ் ஜலதாகங்களோடே கூடியிருக்கிறவனுக்கு ஜலபான விச்சைபோலவும், வெய்யிலிலே யடிபட்டவனுக்கு நிழலிலேபோகவேண்டுமென்கிற விச்சைபோலவும், அக்கினி தாபத்திலே யடிபட்டவனுக்கும், தீப்பட்ட புருஷனுக்கும், ஜலத்திலேபோய் விழவேண்டுமென்கிற விச்சைபோலவும், தாபச்சுரத்தி லடிபட்டவனுக்குச் சீக்கிரஞ் சுரவிமோசனத்திலே விச்சைபோலவும், தாபத்திரயங்களோடே கூடியிருக்கிற ஜனனமரணப் பிரவாகரூபமாயிருக்கிற துக்க சமுசார சாகரத்திலே நின்றும் விடுபட்டு வெப்போ கைவல்யத்தை யடையப்போகிறோமென்கிற தீவிரவிச்சை மோக்ஷவிச்சை யென்று சொல்லுவார்கள். இப்படிக்கொத்தவ னதிகாரி. முக்தியிலே பிரமஞானஞ் சாதனம். பிரமஞானத்திலே வேதாந்த சிரவணஞ் சாதனம். வேதாந்தசிரவணங் குருவனுக்கிரகத்தினாலே யடையத்தக்கது.

குருவுபதேசமே பிரமத்துக்குச் சொரூபம். ஆனதினால்:—தத்துவஞானார்த்த லாபநிமித்தமாக ஆசாரியரருகு செல்லல்வேண்டும். ஆசாரியருடைய வுபதேசத்தினாலேதானே; பிரமஞானம் வரவேண்டும். அஃதெப்படிப்போலே யென்றால்? காந்தாரதேசத்துக்குப்போக விச்சித்து வழியறியாதவன், கிராமங்கள்தோறும் போகிற பேரையும் வருகிற பேரையும் வழியறிந்தபேரையுங் கேட்டுக்கொண் டெப்படிக் காந்தாரதேசம்போய்ச் சேருவனோ; அப்படிப்போலே அடிக்கடி குருவுபதேசத்தைக் கேட்டுக்கொண்டு பிரமசொரூபத்தை யறிந்துகொள்ளுவன். குருவுபதேசத்தினாலேதானே; பிரமஞானம் வரவேண்டும். ஆனதினாலே:—ஞானார்த்

தமாக வாசாரிய ரருகுபோகவேண்டும். ஆசாரியரிடத்தில்
போகிறபோது இஷ்டதனவஸ்துக்களை யெடுத்துக்கொண்
டுபோய்க் கொடுத் தாசாரியரைச் சாஷ்டாங்கமாக நமஸ்
காரங்களெல்லாம் பண்ணி ஆசாரியரை ஈசுரராகப் பாவித்
தீசுரராகப் பூசித் தந்திசந்தி சிசுருஷைகளெல்லாஞ் செய்
தாசாரியரைப் பிரார்த்தித் தெனக்குப் பிரமஞானத்தைக்
கடாக்ஷித் தனுக்கிரகம் பண்ணவேண்டுமென்று சொல்லிப்
பிரார்த்தித்துக் குருவாக்கிய பரிபாலனம் பண்ணிக்கொண்
டவர்க்குப் பிரீதியுண்டாகும்படி நடந்துகொண்டு குருவருகி
ற்றானே காத்துக்கொண்டிருக்கவேண்டும். ஒடுக்கவலைக்கப
க்தியுடனே லக்ஷப்பிரபுவினிடத்திலே காத்துக்கொண்டிருக்
கிறதுபோலே; காத்துக்கொண் டிருக்கவேண்டும். ஆசாரிய
ருக்கும், ஈசுரருக்கும், பேதமில்லை. ஆசாரியரே பிரமா,
ஆசாரியரே விஷ்ணு, ஆசாரியரே சிவன், ஆசாரியரேபரப்பி
ரமமென்று வேதசாஸ்திரங்களெல்லாஞ் சொல்லுகின்றன.
ஈசுரனை நன்று யுபாசித்தா லாசாரியரூபியாய் வந்து ஞா
னத்தைக் கொடுப்பாரென்று சகலவேத சாஸ்திரங்களுஞ்
சொல்லுகின்றன. ஆசாரியரும், மீசுரருமிரண்டுபேரு மேக
மென்கிற துண்மை நிச்சயம். விசாரிக்குமிடத்தி லீசுரனைக்
காட்டிலும்; ஆசாரியரே யதிகம். அஃதெப்படியென்றால்?
ஈசுரன் சகலபிராணிகளிடங்களிலேயு மந்தரியாமிரூபியாய்க்
கருமத்தை அபேக்ஷித்துக்கொண்டுதானே; கருமானுரூப
மாக ரக்ஷிப்பர்.

கருமானுசாரமாய்ப் பலத்தைக்கொடுப்பார். கருமஅபே
க்ஷையில்லாம லிவனை ரக்ஷிக்கத்தக்கதில்லை. நல்லகதி
கொடுக்கத் தக்கதுமில்லை. ஆசாரிய மூர்த்தமானால்; ஞானத்
தினாலே சிஷியனுடைய மூலாக்கியானத்தை யறுத்துக் கிரு

யையினாலே யிவனுடைய கரும பாசங்களையுஞ் சேதித்து ஜனன மரண துக்கங்களையும் நீக்கி ஞானப்பிரசாதத்தை யனுக்கிரகம் பண்ணி யுக்கிருஷ்டமோக்ஷ சாம்பிராச்சியத்தைக்கொடுத் தனர்த்தநிவிர்த்தியையும், ஆனந்தப்பிராப்தியையும், கொடுப்பார். அதுமாத்திரமல்ல:—ஈசுரன்கோபித்தால் குரு ரக்ஷிப்பர். குருகோபித்தா லீசுரன் ரக்ஷிக்கமாட்டார் ஆனதா லீசுரரைக்காட்டிலு மாசாரியரே யதிகமென்று வேதசாஸ்திரங்களெல்லாம் முறையிடுகின்றன. இதுமாத்திரமல்ல மாதா பிதாக்களைக்காட்டிலு மாசாரியரே; அதிகம். ஏனெனில்? மாதாபிதாக்கள் ஜன்ம கரும சமுசாரங்களைக் கொடுப்பார்கள். ஆசாரியர் ஜன்ம கருமங்களையு மறுத்துச் சமுசார நிவிர்த்தி பண்ணி ஞான சரீரத்தைக்கொடுத்து நித்திய முக்தி பதத்தைக்கொடுப்பார். முற்காலத்திலும்; ரிஷிகள், ராஜாக்கள், மற்றுமுள்ள, சகலருங் குருநிஷ்டையினாலேயும், குருசிசுருடையினாலேயும், சகல சித்தியுஞ் சற்கதியுமடைந்தார்கள். இதுவல்லாமல்:— சந்நியாசிகள் சகலத்தையும் பரிகரித்து குருமூர்த்தத்தைத் தானே; பரப்பிரமமாக வைத்திருக்கிறார்கள். ஆனதால்? ஆசாரியரே; பிரமமென்ற துண்மை. இந்தப்படியே வேதசாஸ்திரங்கள் சகலமு முறையிடுகின்றன.

முதலாவது சிஷியப்பிரகரண முற்றிற்று.

---

## இரண்டாவது. ஆசாரியருபதேசப்பிரகரணம்.

ஆசாரியருபதேசப் பிரகரணஞ் சொல்லுகிறோம்.

ஆசாரியராவதார்? உபதேசம்பண்ணுகிறவர். வேதாந்தங்களெல்லாம் படித்தவர். பிரம நிஷ்டர். சமதமாதிகளுடனே கூடினவர். நல்லாசாரசம்பன்னர். இப்படிப்பட்ட பிராமணன் குரு. அந்தவாசாரிய ரெட்டுவிதம். அதாவதேதென்றால்? போதககுரு. வேதககுரு. நிசிதககுரு. காமியகுரு. சூசககுரு. வாசக்குரு. காரககுரு. விகிதகுரு. இப்படிச்சிஷியனுடைய சாதகபேதத்தினாலே போதிக்கிற மார்க்கத்தை யனுசரித்துக் குருவு மெட்டு விதமாகும். சகலவர்ணங்களுக்கும், சகலவாச்சிரமங்களுக்கும், பிராமணன்றானே குருவென்று சொல்லிவேதாந்தங்களிலேகோஷிதம். வழிகேட்டுக்கொண்டழிந்திருக்கிறவன் வழிகாட்டவேண்டும். அப்படி வேதாந்தங்கள்படித் தநுபோகசம்பன்னனாக விருக்கிறவனுபதேசம் பண்ணவேண்டும். ஞாநோபாயத்தினாலே சிஷியனுடையவக்கியானக்கிரந்தியை யத்தியந்தம் போக்கிறதற்குச்சமர்த்தனாக விருக்கிறவர்குரு. சிருஷ்டிப்பிரளையங்களினாலே சிஷியனுக்கத்தொய்தப்பிரமக்கியானத்தை யுபதேசம்பண்ணுகிறதற்குச் சமர்த்தரா யிருக்கிறவர் குரு. வேதாந்தங்களுக்கு முக்கியார்த்தத்தைச் சேதித் திலக்ஷியார்த்தத்தைச்சொல்லுகிறதற்குச்சமர்த்தராயிருக்கிறவர் குரு. சிஷியனுடைய சித்தபரிபாகத்தையறிந்து சித்தானுசாரியாகச் சிஷியனுக்குபதேசம் பண்ணுகிறதற்குச் சமர்த்தராயிருக்கிறவர் குரு. இப்படிப்பட்ட வாசாரியரானவர் சிஷியனுக்கு வேதாந்தங்களினாலே யத்தொய்தப்பிரமஞானத்தை யுபதேசம் பண்ணவேண்டும்.

சிஷியரைப் பராக்குப்பாராம லேகாக்கிரசித்தனாகக் கேளென்று சொல்லி யுபதேசம் பண்ணுகிற பிரகாரம்—போதானந்த மயராய், ஏகராய், அத்தொய்தராய், பரமாத்மா வொருத்தருண்டு. அவர் மாயையோடேகூடி அநாதி ஈசுராரானார்.

சிலபேர் பெரியவாள் ஈசுரனிடத்திலே நின்று மனாதியாயிருக்கிற பிரகிருதி புருஷா ளுண்டானார்கள். பிரகிருதி மாயா அம்சம். புருஷன் பிரம அம்சம். அவருக் கனந்தசக்திக ளுண்டென்றுஞ் சிலபேர் சொல்லுவார்கள். பிரகிருதியென்றும், மாயையென்றும், சத்தித்துவயமுண்டென்றும், சிலபேர் சொல்லுவார்கள். மாயையென்றும், பிரகிருதியென்றும், இரண்டு மீசுரனுக் கொரேசத்தியென்றும், சிலபேர் சொல்லுவார்கள். சுத்தசத்துவப்பிரதானமாகவிருக்கிற பிரகிருதியே; மாயை. தமப்பிரதானமாகவிருக்கிற பிரகிருதியே; பிரகிருதி. மலினசத்துவப் பிரதானமாகவிருக்கிற பிரகிருதியே; அவித்தை. போதமயரா யநாதியாயிருக்கிற பரமாத்மாவானவர்:—அநாதியாயிருக்கிற மாயையோடேகூடி ஈசுரரானார். அந்த ஈசுரர் நிமித்தகாரணர். அவர் சர்வக்ஞத்துவாதி குணங்களுடனேகூடியிருப்பார். பரமாத்மா பிரகிருதியோடேகூடிக் கூடஸ்தராய்; உபாதானகாரணமானார். பரமாத்மா அவித்தையா வந்தக்கரணத்தோடேகூடி ஜீவனானார். அப்படிப்பட்ட பரமாத்மா நீயென் றுபதேசிக்கவேண்டும். வேதாந்தங்கள்—ஞானமே பிரமமென்றும், ஜீவனைப்பார்த்து நீயே யந்தப்பிரமமென்றும், நானே பிரமென்றும், இந்த ஜீவாத்மாவே பிரமமென் றுபதேசிக்கிறபடியினாலே; தேகேந்திரியாதி சாக்ஷியாயிருக்கிற நீயே பிரமென் றுபதேசிக்கவேண்டும். விசுவோற்பத்திக்கு முன்னே ஜீவ

னில்லை. மஹாபிரளயத்திலேயும் ஜீவனில்லை. மத்தியிலே ஸ்தூலதேக வந்தக்கரணசம்பந்தத்தினாலே ஜீவன் கற்பிதனானான். ஆனபடியினாலே ஜீவன் கற்பிதன். போதமயராயிருக்கிற வாத்மா தேகவந்தக்கரணத்தோடே கூடி ஜீவனானார். சிதாகாரராயிருக்கிற வந்தப்பரமாத்மாவே நீயென்று சொல்லி உபதேசிக்கவேண்டும். யாதொரு பரமாத்மாவானவர் நூற்பூச்சிபோலே விசுவத்தைச் சிருஷ்டித்து விசுவத்துக்குள்ளே தானானே ஜீவரூபமாய் விளையாடித் திரும்பவும் விசுவத்தை யுபசம்மாரம் பண்ணிக்கொள்ளுகிறாரோ; அந்தப்பிரமமே நீயென்று சொல்லி உபதேசிக்கவேண்டும். யாதொரு பரமாத்மாவானவர் தன்னுடைய சத்தியினாலே தேகாதிப்பிரபஞ்சத்தைச்சிருஷ்டித் ததற்குள்ளே தாந்தாமே ஜீவாத்மரூபியாகப் பிரவேசித்துக் கிரகியானவன் கிரகத்தைநிர்மாணம்பண்ணிக்கிரகத்துக்குள்ளே கிரகப்பிரவேசம் பண்ணினாற்போலவும், பக்ஷியானது கூட்டைச் சிருஷ்டித்து கூட்டுக்குள்ளே பிரவேசிக்கிறதுபோலவும், பிரவேசித்து விளையாடிக்கொண்டிருக்கிற பரமாத்மா நீதானென் றுபதேசிக்கவேண்டும். யாதொரு பரமாத்மாவானவர் பிராணவிந்திரியங்களுடனே கூடி ஜீவனென்கிறபேரை யடைந்தாரோ; அந்தப்பரமாத்மா நீயேயென்று சொல்லி யுபதேசிக்கவேண்டும்.

யாதொரு பரமாத்மாவானவர் சிருஷ்டிகர்த்தாவாய் ரக்ஷகராய்ச்சங்காரகர்த்தாவாயிருக்கிறாரோ; அந்தப்பரமாத்மா நீயென்று சொல்லி உபதேசிக்கவேண்டும். தத்தொம்பதங்களினாலேயும், லக்ஷணையினாலேயும், தேகேந்திரியாதி சாக்ஷியாயிருக்கிற நீயே பிரமமென்று சொல்லி யுபதேசிக்கவேண்டும். ஆகாசத்திற் சூரியனைப்போலே; பரமாத்மா. கட

த்தைப்போலே; தேகம். கடஜலத்தைப்போலே; அந்தக்கரணம். கடஜலத்தினுட் பிரதிவிம்ப சூரியனைப்போலே சைதன்னியப் பிரதிவிம்பம் ஜீவாத்மா வென்று சொல்லி; வேதாந்தத்திலே சொல்லப்பட்ட பரமாத்மா நீயேயென் றுபதேசிக்கவேண்டும். அக்கினிபோலே; பரமாத்மா. அதிலுண்டாகிய பொறிபோலேயும், தீபம்போலேயும், ஜீவாத்மா வென்று வேதாந்தங்களிலே பிரதிபாதிக்கப்படுகிற பரமாத்மா நீயேயென்று சொல்லி யுபதேசிக்கவேண்டும். பிரகிருதி புருஷவிவேகத்தினாலேயும், ஆத்மானாத்மா விசாரத்தினாலேயும், தொம்பதார்த்த சோதனையைப் பண்ணித் தேகேந்திரியாதிசாக்ஷியாயிருக்கிற நீயேபிரமமென் றுசொல்லியுபதேசிக்கவேண்டும். ஈக்ஷணாதிப் பிரவேசாந்த மீசுர சிருஷ்டியென்றும், ஜாக்கிர முதல்மோக்ஷபரியந்தம் ஜீவசிருஷ்டியென்றும், உபதேசிக்கவேண்டும். அந்த வுபதேசமாவதேதென்றால்? தேகமு நீயல்ல. சக்ஷுவு நீயல்ல. சுரோத்திரமு நீயல்ல. ஆக்கிராணமு நீயல்ல. சிங்ஙுவையு நீயல்ல. தொக்குவிந்திரியமு நீயல்ல. வாக்கிந்திரியமு நீயல்ல. பாத விந்திரியமு நீயல்ல. உபஸ்தவிந்திரியமு நீயல்ல. சினைகுதங்களும் நீயல்ல. பஞ்சப்பிராணன்களு நீயல்ல. மனோபுத்திசித்தமகங்காரமாகிற வந்தக்கரணமு நீயல்ல. அவித்தையாகிற பிரகிருதியு நீயல்ல. இவைகளெல்லாஞ் சடமானபடியினாலேயும், கிரியமானபடியினாலேயும், நசுவரமானபடியினாலேயும், பௌதிகமானபடியினாலேயும், விகார வஸ்துக்களானபடியினாலேயும், இவைகளெல்லாமநித்தியந்தானே.

இவைகளைக் காட்டிலும்—விலக்ஷணராய், இவைகளுக்கெல்லாஞ் சாக்ஷியாய், நானென்று விளங்கிக்கொண்டு சின்மயமாயிருக்கிற நீயே; பரமாத்மாவென் றுபதேசிக்க

வேண்டும். நித்தியன், நிருவிகற்பன், நிராகாரன், நிர்க்குணே
ன், நித்தியசுத்தன், பரிபூரணன், நிருவிசாரன், நிஷ்கிரியன்,
சச்சிதானந்த லக்ஷண பரிபூரண சுயஞ்சோதியா யிருக்
கிற நீதானே; பரமாத்மாவென் றுபதேசிக்கவேண்டும். இன்
னஞ் சொல்லுகிறோம்:—இந்த வாத்மாவானவர்; சாவில்லா
தவர், நித்தியர், சாசுவதர், புராணர், முன்னு முற்பத்தியான
வருமல்ல. இப்போது முற்பத்தி யானவருமல்ல. இனிமே
லுமுற்பத்தி யில்லை. இந்தவாத்மாவைக் கத்தியினாலேயுஞ்
சேதிக்கக் கூடாது.. வன்னியினாலேயுந் தகிக்கக் கூடாது.
தண்ணீராலேயு மழுகத்தக்கது மல்ல. வாயுவினாலேயுஞ்
சலிக்கத்தக்கதுமல்ல. இந்தவாத்மாவெங்கு மிருக்கிறவர்.
அசஞ்சலர், இரசுபாவர், அவ்வியத்தர், சிந்தையில்லாதவர்,
அவிகாரி, மஹானுயிருக்கிறவர், தேஜோமயர், விபு, விபுவா
யிருக்கிறவர், சர்வக்ஞர், சங்கமில்லாதவர், அக்ஷரர் அக
ரூபி, பயமில்லாதவர், சுரோத்திரமில்லாதவர், சுத்தர், ஸர
சில்லாதவர், ஆக்கிராணமில்லாதவர், கந்தமில்லாதவர், ஆக்கி
ராணம்பண்ணப்படாதவர், பரிசகுணரகிதர், ரூபரகிதர்,
வசனரகிதர், வசனியாதவர், ரசகுணரகிதர், ரசமறியாதவர்,
பசியில்லாதவர், தாகமில்லாதவர், தானக்கிரியாரகிதர், பாது
ரகிதர், சுழுத்தியில்லாதவர், சூக்ஷுமர், அசரீரி, காமமில்லா
தவர், அகோத்திரர், அவர்ணர், அனுச்சிரமர், மனமில்லாத
வர், அகர்மர், அக்ரோதர், அலோபி, அமோகர், மதமில்லா
தவர், அமாச்சரியர், அசங்கற்பர், பாவரகிதர், சோரரகிதர்,
மிருத்தியுரகிதர், சோகரகிதர், சுத்தராயிருக்கிறவர், நிர்க்கு
ணர், நிருவிகாரர், நித்திய சுத்தர், பரிபூரணர், தேஜோ
மயர், நாசரகிதர், ஆனந்தமயர், ஞானமயர். அகமகமெ
ன்று பிரகாசித்துக்கொண் டிருக்கிறவர், இப்படிப்பட்ட

ஆத்மாவே; நீயென் றுபதேசிக்கவேண்டும். ஞானியாயிருக்கிறபேருக் கத்தொய்த பாவனை. அஞ்ஞானிகளுக்குத் தொய்த பாவனை. ஞானிக்கு லோகமிருட்டு. அஞ்ஞானிக்குப் பிரம மிருட்டு. ஞானிக்குப் பிரமநிஷ்டை. அஞ்ஞானிக்குக் கருமநிஷ்டை. அஞ்ஞானியா யிருக்கிறவன் தேகமே நானென்று நான் கர்த்தாபோக்தாவென்கிற சிந்தையோடே கூடி யிருப்பன். ஞானியானவன் தேகேந்திரியங்க ளெல்லாம் நாமல்ல. நாமகர்த்தா வபோக்தா. நாமே; பரமாத்மாவென் றெண்ணிக்கொண்டிருப்பன். எல்லாம் பிரமமென்கிற பாவனையினாலே பிரபஞ்ச புத்திபோய்விடும்.

நாமே; பிரமமென்கிற பாவனையினாலே ஜீவனென்கிற புத்தி போய்விடும். அஃதெப்படி யென்னில்? தாருவினாற் செய்த கஜத்திலேயும், அசுவத்திலேயும், மநுஷனிலேயும், தேவதையிலேயும், தாருதிருஷ்டிபண்ணினால்; கஜதிருஷ்டியும், அசுவ மென்கிற திருஷ்டியும், மநுஷ னென்கிற திருஷ்டியும், தேவதை யென்கிற திருஷ்டியும். நசித்துப் போம். தந்து திருஷ்டி பண்ணினால்; படமென்கிற திருஷ்டியும், நசிக்கும். மிருத்துவென்கிற திருஷ்டி பண்ணினால்; கடமென்கிற புத்தி நசிக்கும். சுத்தியென்கிற புத்திபண்ணினால்; ரசிதமென்கிற புத்திநசிக்கும். ரச்சுவென்கிற திருஷ்டி பண்ணினால்; சர்ப்பமென்கிற திருஷ்டிநசிக்கும். கானலென்கிற திருஷ்டி பண்ணின் உதகமென்கிற புத்தி நசிக்கும். சுவர்ணமென்கிற திருஷ்டி பண்ணினால்; ஆபரண மென்கிற திருஷ்டி நசிக்கும். சமுத்திர மென்கிற திருஷ்டிபண்ணால்; தரங்கமென்கிற திருஷ்டி நசிக்கும். தாணுவென்கிறதிருஷ்டிபண்ணினால்; சோரனென்கிற திருஷ்டி நசிக்கும். இந்த நியாயங்கற்பிதஸ்தலங்களி லெல்லாம் பார்க்கத்தக்கது. பா

ரமார்த்த திருஷ்டியினாலே கற்பித திருஷ்டியெல்லாம் நசிக்கும். இந்தப்பிரகாரஞ் சர்வத்திராப் பிரமதிருஷ்டி பண்ணினால்; பிரபஞ்சமென்கிற திருஷ்டி நசிக்கும். ஆத்மாவினிடத்திலே பிரமதிருஷ்டி பண்ணினால்; தான் ஜீவனென்கிற திருஷ்டி நசிக்கும். சிலையென்கிற திருஷ்டி பண்ணினால்; பிரதமையிலே தேவதாபுத்தி நசிக்கும். அப்படிப்போலே ஆத்மாவினிடத்திலே சிவோக மென்கிற திருஷ்டி பண்ணினால்; ஜீவப்பிராந்தி நசிக்கும். பாரமார்த்த திருஷ்டியினாலே; சர்வத்திரா கற்பித திருஷ்டி நசிக்குமென்று வேதங்கள் சொல்லுகின்றன.

இந்தப்படி பெரியவாளும், தத்துவதிருஷ்டி யுடைத்தானபேர்களும், சிஷியாளுக்குபதேசம்பண்ணியிருக்கிறார்கள். அஞ்ஞானியா யிருக்கிறபேருக்குத் தேகத்திலேயாத்மபுத்தி. உபாசகர்களா யிருக்கிறபேருக்கு நான் ஜீவனென்கிற புத்தி. ஞானிகளாயிருக்கிறபேருக்குப் பரமாத்மாவினிடத்திலே யாத்மபுத்தி. அஞ்ஞானிகளா யிருக்கிறபேருக்கு நானே கர்த்தாவென்று ஆத்மாவினிடத்திலே கர்த்துருத்துவபாரம். ஞானிகளாயிருக்கிறபேருக்கு இந்திரியங் கரணங்கள் கர்த்தா; நான் கர்த்தாவல்லவென் றிந்திரிய கரணங்களிலே கர்த்துருத்துவபாரம். உபாசகனாயிருக்கிறபேருக் கீசுவரனொருவன் கர்த்தர்; நான் கர்த்தாவல்லவென் றீசுவரனிடத்திலே கர்த்துருத்துவபாரம். தேகந்தானென்றும், தான் கர்த்தாவென்றும், மோகத்தினாலே பெத்தனாகிறான். விவேகத்தினாலே தேகநாமல்ல; நான் பரமாத்மா. நான் கர்த்தாவுமல்ல; இந்திரியகரணங் கர்த்தாவென்றறிந்தா லுடனே முக்தனாகிறா னிதுண்மை. ஞானியா யிருக்கிறவனுக்கு விசுவம் பிரமமயம். அஞ்ஞானியாயிருக்கிறவனுக்கு விசுவம் நாமரூபமயம். ஞா

ணியாயிருக்கிறவனுக்கு விசுவம் பொய். அஞ்ஞானியாயிருக்கிறவனுக்குப் பிரமம்பொய். மரத்தின்மேலேறிச் சறுக்கி யிரண்டுகையும் விட்டவனுக்குக் கீழே விழுகிறது சித்தம்போலே; அறிவுவந்ததென்றால்? தேகேந்திரியாதிகளையும் விட்டு; மோக்ஷமடைகிறது சித்தம். ராகுவானவன் தான் சுயமகிரிசியனாக விருந்தாலுங் கிரிசியாளாயிருக்கிற சந்திரசூரியாளுடனேகூடிக் கிரிசியனாகிறானதுபோலே; பரமாத்துமாவானவர் தாஞ்சுயமகிரிசியராகவிருந்தாலுங் கிரிசியமாக விருக்கிற வந்தக்கரணத்துடனேகூடி நானென்று கிரிசிய பாவத்தை யடைந்தவர்போலே யிருக்கிறார். க்ஷீரோதகத்தை யம்சபக்ஷியானது பிரித்து க்ஷீரத்தைக்கிரகிக்கிறதுபோலேயும், எள்ளிலே யெண்ணெயைக் கிரகிக்கிறதுபோலேயும், கரும்பிலே ரசத்தைக் கிரகிக்கிறதுபோலேயும், ஆத்மானாத்மவிசாரத்தினாலே பரமாத்மாவே நானென்றெடுத்துக்கொண்டனாத்மாவாகிய தேகேந்திரியாதிகளை; நாமல்லவென்று தள்ளிவிடவேண்டும். இதே ஆத்மலாபமென்று பெரியவாள் சொல்லுவார்கள். முகமானது யெல்லாத்தையு மறியுந் தன்னை யறிகிறதற்குக் கண்ணாடியை யபேக்ஷிக்கு மதுபோலே ஆத்மாவானவ ரெல்லாத்தையு மறிவர் தன்னையறிகிறதற்கு சுத்தாந்தக்கரணத்தையும், வேதாந்தத்தையும், அபேக்ஷிப்பர். நிதியஞ்சனத்தினாலே நிதியறிகிறதுபோலவும், பூதாஞ்சனத்தினாலே பூதங்களை யறிகிறதுபோலவும், அக்ஷரதோஷமுள்ளவன் கண்ணாடியிலே யக்ஷரமறிகிறதுபோலவும், வேதாந்தங்களினாலே யாத்மாவை யறியவேண்டும். ஞானியினுடைய வாத்மா தேகேந்திரியாதிகளுடனே யொட்டத்தக்கதில்லை. அஃதெப்படியென்னில்? கடைகிறதிலே நின்று முண்டாயிருக்கிற வெண்ணெயை மோரிலே

போட்டிருந்தாலும்; அதோடேகூடத் தக்கதில்லை. தாமரையிலையும் ஜலமும் போலவும், புளியம்பழமு மோடும்போலவு மொட்டத்தக்கதில்லை. இன்னஞ் சொல்லுகிறோம்:—செம்பரத்தம் பூவினுடைய சிவப்புப் படிகத்திலே தோற்றுகிறதுபோலவும், வன்னியிடமாயிருக்கிற உஷ்ணத்துவம் ஜலத்திலே தோற்றுகிறதுபோலவும், அந்தக்கரணதருமமாகிய கர்த்துருத்துவாதி தருமங்களெல்லாஞ் சுத்தமாயிருக்கிற ஆத்மாவினிடத்திலே தோற்றுகின்றன. ஆகாசத்தினிடத்திலே கறுப்புத் தோற்றுகிறதுபோலே; அந்தக்கரண தருமமாயிருக்கிற கர்த்துருத்துவாதி சமுசார மாத்மாவினிடத்திலே தோற்றுகிறது.

சிலபேர் பெரியவாள் சகலகருமக் கூட்டங்களையும் விட்டுவிடவேண்டுமென்று சொல்லுவார்கள். மனு வியாச வசிட்டாதிகளுக்கும், சகல வர்ணங்களுக்கும், சகல வாச்சிரமங்களுக்கும், ஸ்திரீ சூத்திராதிகளுக்கும், பிரமாப்பியாசஞ் சாதாரணந்தானே. ஞானமெல்லாருக்கும் பொதுத்தானே. மோக்ஷமுமெல்லாருக்கும் பொதுத்தானேயென்று சித்தாந்தம். ஞானியானவன் ஸ்திரீபாலராதி சமுசாரத்துடனே கூடியிருந்தாலும்; ஆயிரஞ் சுதருமத்துடனே கூடியிருந்தாலு மவனை யொரு கருமமு மொட்டமாட்டாது.

ஜனகாதிகளைப்போலே ஜீவன் முக்தனாய் ஞானியாயிருக்கிறவன் ஆயிரமசுவமேதயாகம் பண்ணினாலும்; ஆகாசம்போலே யவனை யொன்றுமொட்டாது. அவன்பண்ணுகிற கருமங்களெல்லாம் லோகோபகாரந்தானே. ஞானியாயிருக்கிறவன் கருமங்களைப் பண்ணினாலும்; பலமில்லை. பண்ணாதிருந்தாலும்; பிரத்தியபாயமாகாது. அவன் பண்ணாதிருந்தால்

லோகங் கெட்டுப்போமவனுக்குத் தோஷமில்லை. ஆனாலும்; லோகோபகாரார்த்தமாகக்கருமங்களைப்பண்ணவேண்டுமென்று சொல்லிச் சித்தாந்தம். அஞ்ஞானியாயிருக்கிறவன் நானே கர்த்தாவென்றுசொல்லி யாத்மாவினிடத்திலே கருமபாரஞ் செலுத்துவன். சிலபேருபாசகாள் நமக்கந்தரியாமியாக விருக்கிற வீசுரன்றானே சகல கருமகர்த்தர்; நமக்கொன்றுந் தேவையில்லையென்றுசொல்லீசுரனிடத்திலே கருமபாரஞ் செலுத்துவாள். சூக்ஷும திருஷ்டிகளாய்த் தத்துவ விசாரங்களோடே கூடியிருக்கிற வேதாந்தஞானசம்பன்னருக்கு; நாம்பரமாத்மா, நாம்பரப்பிரமம், நாமொன்றும் பண்ணவில்லை, நமக்கொரு கருமமுமில்லை, நம்முடைய சன்னிதானத்தினாலே யந்தக்கரணஞ் சேட்டிக்கிறதென்கிற நிட்சயமிருக்கும்.

அஃதெப்படியென்றுவர:—காந்த சன்னிதானத்தினாலே ஊசி சேட்டிக்கிறதுபோலே சூரியோதய சன்னிதானத்தினாலே லோகப்பிராணிகளெல்லாம் மெய்யடிச் சேட்டிக்கிறார்களோ; சகலபூஷணபூர்த்தியாய் ரூபவதியாயிருக்கிற தாசியானவள் தன்னுடைய சன்னிதானத்தினாலே லோகங்களுக்கு பிரவிருத்தி விகார வேதுவாக வெப்படியிருக்கிறார்களோ; அப்படி யாத்மசன்னிதானத்தினாலே யந்தக்கரண தேகேந்திரியங்களெல்லாஞ் சேட்டித்துத் தந்தம் வியாபாரங்களைபண்ணுகிறதுகள்; நாமொன்றுபண்ணவில்லையென்று ஞானிகளுக் கந்தக்கரணதேகேந்திரியாதிகளிடத்திலே கருமபாரபுத்தி. சாங்கியாள் அந்தக்கரணப் பிரகிருதிக்கிச் சுதந்தரத்துவமங்கீகரித்தார்கள். வேதாந்திகளாத்மாவுக்குச் சுதந்தரமங்கிகரித்தார்கள். இந்தவாத்மாவானவர் தேகமயமாய்த் தேகத்தை நானென்றிருக்கிறபோது மநுஷாதிவிய

வகாரத்தை யடைவர். அந்தக்கரண மயராயிருக்கிறபோது ஜீவன் ஜீவனென்று சொல்லப்படுவர். பிரகிருதியுடனே கூடினாற் கூடஸ்தரென்று சொல்லப்படுவர். போதமயமாயிருக்கிற வாத்மா மாயையுடனே கூடினால் ஈசுரனென்று சொல்லப்படுவர். ஆத்மா போதமயராக விருந்தால் பரமாத்மாவென்று சொல்லப்படுவர். ஆத்மாவுக்குத் தேகசம்பந்தத்தினாலே சுகதுக்க சம்பந்தம் வந்தது. தேகசம்பந்தம் புண்ணியபாவ சம்பந்தத்தினாலே வந்தது. புண்ணியபாவ சம்பந்தம் ராகத்துவேஷாதிகளாலே வந்தது. ராகத்துவேஷங்கள் தேகாபிமானத்தினாலே வந்தது. தேகாபிமானம் மோகத்தினாலே வந்தது. மோக மவித்தையினாலே வந்தது. அவித்தையாகிறதஞ்ஞானம். இஃது அனாதி. இதற்கு நிவிர்த்தி சொல்லுகிறோம்:—தேகசம்பந்தம் போனாற் சுகதுக்கந் தீராது. புண்ணியபாவங்கள் போனாற் றேகசம்பந்தம் போம். ராகத்துவேஷங்கள்போனாற் புண்ணியபாவசம்பந்தம்போம். தேகாபிமானம் போனால் ராகத்துவேஷங்கள் போம். மோகம் போனாற் றேகாபி மானம் போம். அவித்தைபோனால் மோகசம்பந்தம் போம். அவித்தை வித்தையினாற் போகவேண்டும். பெரியவாளுக்கு நிஷ்டைசொல்லுகிறோம்:—தேகேந்திரியாதிகள் நாமல்ல, நாமே பரமாத்மா நம்முடைய சன்னிதானத்தினாலே தேகேந்திரியாதிகள் சகலகருமங்களையும் பண்ணுகுதுகள்; நாமொன்றும் பண்ணவில்லையென்கிற நிஷ்டையே சித்தாந்தம். சிஷியனுக்குச்சித்தபரிபாகமுண்டானாற் றேகேந்திரியாதி சாக்ஷியாய்ப் போதமயனாயிருக்கிற நித்திய சின்மாத்திரப்பரப்பிரமமென் றுபதேசம் பண்ணவேண்டும். சித்தசுத்தி யில்லாவிட்டால் சகுணப்பிரமத்தை யுபதேசம் பண்ணவேண்டும். சகுணப்பிரமமென்றும், நிர்க்குணப் பிர

மமென்றும், பிரமம் ரூபியென்றும், அரூபியென்றும், சவிசேஷம் நிருவிசேஷமென்றும், சகள நிஷ்களமென்றும், வியத்தமவ்வியத்தமென்றும், ஸ்தூலமென்றும், சூக்ஷுமமென்றும், மூர்த்தமென்றும், அமூர்த்தமென்றும், காரணப்பிரமமென்றும், காரியப்பிரமமென்றும், வேதாந்தங்கள் சொல்லுகின்றன. அதைச் சகுணப்பிரமமென்றும், நிர்க்குணப்பிரமமென்றுமிரண்டுவிதமா யங்கீகரித்தார்கள். நிர்க்குணம் பரமார்த்தம். சகுணங் கற்பிதம். அரூபிபரமார்த்தம். ரூபிகற்பிதம். சகுணப்பிரம முபாசிக்கத்தக்கது. நிர்க்குணப் பிரமமறியத்தக்கது. சகுணப்பிரம முபாசனை கர்த்ததந்திரம். நிர்க்குணப்பிரமஞானம் வஸ்துதந்திரம். இந்த சகுணப்பிரம வுபாசனை யாவனியாருக்கென்றால்? வெகுவிதம் ஞானசத்தனா யிருக்கிறவனுக்கு சகுணப்பிரமமான வீசுரனை யுபாசிக்கத்தக்கது. அவர் சகல காரண சமஷ்டி யுபாதிகர். பிரமம் வேதாந்தங்களினாலே யறியவேண்டும். பிரமமுண்டென்கிறதிலே பிரமாணமேது? சகல வேதாந்தங்களும் பிரமாணம். பிரமத்துக்கு லக்ஷணமேது? ஜகத்காரணம் பிரமலக்ஷணம். இது தடஸ்தலக்ஷணம். இது ஈசுரனுக்கும் லக்ஷணமாகலாம். சச்சிதானந்தலக்ஷணம் பிரமசொரூப லக்ஷணம். தடஸ்த லக்ஷணமாவதிரண்டுபேருக்கும் பொதுவாயிருக்கிறது. அஃதெப்படியென்றால்? பிரகிருதியினிடத்திலே யிருக்கிற வுபாதான காரணத்துவம் விவித விசித்திரப் பிரபஞ்சத்தை சிருஷ்டிக்கிறதிலேயீசுரனுக்கிரகக்கியானமன்றியிலேபோனாற்கூடாது. ஆனபடியினாலே; ஈசுரக்கியானத்தையுங் காரணமாகவபேக்ஷிக்குது. ஆனபடியினாலே; தடஸ்தலக்ஷணம். பிரகிருதியேவப்படுகிறபடியினாலேயும், ஈசுரன்யேவிவிக்கிறவரானபடியினாலேயும்; பிரகிருதியினிடத்திலே யிருக்கிற காரண

த்துவ மீசுரனைக் காரணமாக வபேக்ஷிக்குது. ஆனபடியினாலே; தடஸ்தலக்ஷணம் பிரகிருதி கற்பிதம். ஆனபடியினாலே; ஈசுரப்பிரமமாதாரம். ஆனபடியினாலே; அவரைவிட்டுத்தனித் திருக்கமாட்டாது. ஆனதால் பிரகிருதியினிடத்திலே யிருக்கிற காரணத்துவ மதிஷ்டானமாயிருக்கிற யீசுரப் பிரமத்தைக் காரணமாக வபேக்ஷிக்குது. இது தடஸ்தலக்ஷணம். காரணத்துவம் நிமித்த காரணராக விருக்கிற வீசுரனிடத்திலேயு முபாதானகாரணமாயிருக்கிறபிரகிருதியினிடத்திலேயுமிருக்கிறபடியினாலே; தடஸ்தலக்ஷணம். பிரகிருதியினிடத்திலே யிருக்கிற காரணத்துவந் தன்னுடைய பிரவிருத்தியிலேயும், தன்னுடைய நிவிர்த்தியிலேயு மீசுரனைக் காரணமாக அபேக்ஷிக்குது. ஆனபடியினாலே தடஸ்தலக்ஷணம் ஜகத்காரணத்துவம்.

சாகாசந்திர நியாயம்போலே தடத்தலக்ஷணமென்று வித்தியாரண்ணிய சுவாமிகள் சொல்லி யிருக்கிறார்கள். பிரமம் அனுமானத்தினாலே அறியத்தக்கதென்று தார்க்கிகாள் சொல்லுவார்கள். அஃதெப்படி யென்றால்? பூமி முதலானதும், முளை முதலானதும், கர்த்தாவோடே கூடியிருக்கும் கடமுதலானதுபோலக் காரியமானதினாலென்கிற வனுமானத்தினாலே சித்திக்கிற வீசுரனானவர் சர்வக்ஞராய், ஏகராய், கர்த்தாவாய், சித்திப்பரென்று தார்க்கிகாள்மதம். வேதாந்திகள்:—பிரமம் நிர்க்குணம் நிர்த்தருமமானபடியினாலே அடையாளவனுமானத்தினாலேயறியக் கூடாதென்பார்கள். பிரமம் வேதத்தினாலேதானேயறியத்தக்கதென்றுவேதாந்தங்கள் சொல்லுகின்றன. அஃதேதெனென்றால்? பிரமத்திலே நின்றும் வேதமுண்டாய்ச் சர்வக்ஞமானபடியினாலேயென்று வேதாந்திகள் சொல்லுவார்கள். மீமாம்ஸாள் வேதமு

ம் நித்தியந்தானே யென்று சொல்லுவார்கள். தார்க்கிகள் மதத்திலேயும், யோகிமதத்திலேயும், ஈசுரனுண்டு. சைவவைஷ்ணுவாளுக்கு மீசுரனுண்டு. இந்த வீசுரப்பிரமஞ் சகலவேதங்களினாலேயு மறியத்தக்கது. பிரம்மானது வேதத்தினாலே யறியத்தக்கது. சர்வமயமான படியினாலேயும், சகலவேதங்களும் பிரமத்தைத்தானே சொல்லுகின்றன. ஆனதால்; வேதாந்தங்கள் பிரமத்தினிடத்திலே ஞானத்தை விதிக்கிறதென்று சொல்லக்கூடாது. பிரமமுஞ் சித்தித்த வஸ்துவானபடியினாலே; விதிவிஷய மாகமாட்டாது. ஆனதால்; வேதாந்தங்கள் பிரம்மபரங்கள்தானே. வேதாந்தங்க ளுபாசனையையுஞ் சொல்லுகின்றன. ஞானகாண்டத்தையுஞ் சொல்லுகின்றன. ஆனபடியினாலே; உபாசன காண்டமு முண்டு:— ஞானகாண்டமு முண்டென்று வேதாந்திகள் சொல்லுவார்கள். சைவவைஷ்ணுவாள் வேதாந்தங்க ளுபாசனகாண்டத்தைத்தானே சொல்லுகுதுகள்; ஞானகாண்டத்தை சொல்லவில்லையென்று சொல்லுவார்கள். அதற்கு வேதாந்திகள் வேதாந்தங்களுக்கு அத்தொய்தத்திலேதானே தார்ப்பரியம்; தொய்தம் பிரத்தியக்ஷசித்தமானபடியினாலே தொய்தத்திலே தார்ப்பரிய மில்லையென்று சொல்லுவார்கள். அஃதெதினாலென்றால்? வேறேயொருபிரமாணத்தினாலே நிச்சயிக்கப்படாத தாயும், பலத்தையுடையதாயு மிருக்கிற அர்த்தத்திலே சாஸ்திரத்துக்குத் தார்ப்பரிய மென்று பெரியவாள் அங்கீகரித்தபடியினாலே; தொய்த சுருதிகளுக்கும், தொய்தப் பிரத்தியக்ஷங்களுக்கும், கற்பித வியவகாரமுங் கற்பித பேதமுந்தானே விஷயம். அபேத சுருதிகளுக்கும், ஜனகாதிகளுடைய வபேதப் பிரத்தியக்ஷத்துக்கும், பரமாத்மாவா யிருக்கிற அபேதங்

தானேவிஷயம். ஆனதாற்றெய்தச் சுருதியிலேயும், அபேதச்சுருதியிலேயும், தொய்தாத்தொய்த மிரண்டு மூண்டென்று சிலபேர் சொல்லுவார்க ளந்தப் பக்ஷங் கூடாது. வஸ் திரண்டுவிதமாகவிராதே; ஸ்தூல திருஷ்டியிலேலே சூக்ஷும விசாரமில்லை. ஆனதால்:—மந்தப்புத்திகளா யிருக்கிறபேர்களந்தப்படி சொல்லுவார்கள். யதார்த்தமாகப் பாரமார்த்திகசையிலே சகல வேதாந்தங்களுக்கும்; அபேதத்திலே தானே தார்ப்பரியம். தார்க்கீகாள்மதம் யெல்லாம் பிரமமென்கிறவேதாந்தங்களுக்குக் கடபடாதிக ளெல்லாம்பிரமமென் றுபாசிக்க வேண்டுமென்று தார்ப்பரியம். கஞ்சனூராழ்வார்மதம் வேதாந்தகளுக்கபேதத்திலே தார்ப்பரியமில்லை; அபேதத்தையுஞ் சொல்லவில்லை. ஆனல்? அபேத வுபாசனையைச் சொல்லுகிறது பேதம் பிரத்தியக்ஷ சித்தமாயிருக்கிறது.

அபேதவுபாசனைபொய்தானே. பொய்யாயிருந்தாலும்; அபேதவுபாசனை யனர்த்தமாயிருக்கிற அவித்தையாதுக்கத்தைப் பொக்கடிக்கும். அஃதெப்படிப்போலென்றால்? விஷந்தீண்டினவனுக விருக்கிறவன் அபேதமாகக்கெருடபாவனை பண்ணினு லந்தவிஷத்திலே நின்றும் விடுபடுவன். அப்படிப் போலவென்று கஞ்சனூராழ்வார் சொன்னர். மாத்துவாள் எல்லாம் பிரமமென்கிற வாக்கியத்துக் கிராசாதீனம் ராச்சியமென்கிறதுபோலே யெல்லாம் பிரமாதீனந்தானே யென்று சொல்லித் தார்ப்பரியஞ் சொல்லுவார்கள். வைஷ்ணுவாள் சைவாளெல்லாம் பிரமமென்கிறவாக்கியத்திற்கெல்லாம் பிரமசரீரம் பிரமஞ்சரீரியென்று தார்ப்பரியஞ்சொல்லுவார்கள். வேதாந்திகளெல்லாம் பிரமமென்கிற வாக்கியத்திற் கபேதந்தானே தார்ப்பரிய மென்பார்கள். இந்த

விசுவத் துக்கும், பிரமத் துக்கும், பேதமில்லை. ஜீவனு க்கும், பிரமத்துக்கும், பேதமில்லை. பிரமத்தைத் தவிர இரண்டாம் வஸ்துவில்லை யென்கிறஞானம் அபேதஞானம். இந்தவிசுவத்துக்குப் பிரமந்தானேயாதாரம். பிரமந்தானே நிமித்தகாரணம். பிரமந்தானே யுபாதான காரணம். பிரமந் தானே போக்தாவா யிருக்கிற ஜீவன். ஆனபடியினாலே; எல்லாம் பிரமந்தானே யென்கிறஞானம் அபேதஞானம். யெதெதுகாணப்படுகிறதோ;யெதெது கேட்கப்படுகிறதோ; யெல்லாம் பிரமமயந்தானே யென்கிறஞானம் அபேதஞா னம். இப்படிப்பட்ட அத்வைதக் கியானம் வேதாந்தங் களினாலே வரவேண்டு மென்பார்கள். இன்னம் சொல்லுகி றோம்; அத்தியாரோப வபவாதங்களினாலே சிஷியனுக்கு அத்வைதப் பிரமக்கியானத்தை யுபதேசம்பண்ணவேண் டும். அத்தியாரோபவபவாதங்களெதுவென்றுவர:—சிருஷ் டிப்பிரளையங்க ளுற்பத்தி நாசங்களென்றும், உபக்கிரமம் உபசங்காரங்களென்றும், சொல்லுவார்கள். சூரிய அஸ்த மானம்போலேயும், சூரிய வுதையம்போலேயும், ஜாக்கிரஞ் சுழுத்திபோலேயும், பகல் ராத்திரிபோலேயும், சிருஷ்டிப் பிரளையஞ் சொல்லுவார்கள். அஃதெப்படிப்போலென்றால்? தரங்காதிகளுக்கெல்லாஞ் சமுத்திரத்தினிடத்திலே தானே யுற்பத்தி. சமுத்திரத்தினிடத்திலேதானே லயம். அப்படிப் போல நாமரூபப் பிரபஞ்சங்களுக்கெல்லாம் பிரமத்தினிட த்திலே யுற்பத்தி. பிரமத்தினிடத்திலேதானே லயமென்று சொல்லிப் பெரியவாள் சொல்லுவார்கள். ஞானமாகிறது; அந்தக்கரணத்தினுடைய அவித்தையாமலத்தைநசிப்பித்துத் தானுங்கூடப் பிரமசொரூபத்திலே தேற்றுங்கொட்டையை ப்போலே யிருக்கும். கர்ப்பூரவன்னியானது; கர்ப்பூரத்தை

புண்பதுபோலே யந்தக்கரணத்திலே யுதித்திருக்கிற ஞானமானது; அந்தக்கரண மலங்களையெல்லா மூண்டுவிடும். ஞானமானது; ஆத்மாவை மோக்ஷராச்சியத்துக்குப் பட்டத்தையுடையவனாகப் பண்ணும்.

இரண்டாவது ஆசாரியருபதேசப்பிரகரணம் முற்றிற்று.

---

## மூன்றாவது. அத்தியாரோபப் பிரகரணம்.

---

இனிமேலத்தியாரோபசிருஷ்டியை விஸ்தாரமாகச் சொல்லுகிறோம்.

தார்க்கிகாள்:—ஈசுரன் நிமித்தகாரணம், பரமாணுக்களுபாதானகாரணம், காலாதிஷ்டாதிகளுஞ்சகாகாரிகாரணம், ஜீவனீசுரனைக்காட்டிலும் பின்னம், ஜீவாளு மொன்றுக்கொன்று பின்னுள், சுகதுக்காதிகள் நானாவிதமாயிருக்கையினாலே ஜீவன் சரீரந்தோறும் பின்னன்; பிருதுவி அப்புத் தேயு, வாயு நாலுங் காரியபூதங்கள், நித்தியம், விபு, திரவியம், நவத்திரவியம், அவைகளியாதென்றால்? பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா, மனசு, ஆகத்திரவியமொன்பது. குணங்களிருபத்துநான்கு அவைகள் யாவையெனில்? ரூபம், ரசம், கந்தம், பரிசம், சங்கியா, பரிமாணு, பிரத்தகுவா, சம்யோகா, விபாக, பரத்துவா, அபரத்துவா, குருத்துவ, திரவத்துவா, சிநேக, சத்த, புத்தி, சுக, துக்க, இச்சா, துவேஷா, பிரயத்தன, தரும, அதரும, சமுஸ்கார, ஆகக் குணமிருபத்துநான்கும்; நவத் திரவியகுணங்கள். ஈசுரர்:—சர்வக்ஞர், அரூபி, விபு. ஜீவர்களும் விபு,

நித்தியர்கள். ஈசுரனுக்கு ஜீவபோகார்த்தம், பூதசிருஷ்டியிலே பிரவிருத்திசிருஷ்டி காலம்வந்தமட்டிலேதானே; பிராணிகளுடைய வதிட்ட வசத்தினாலே ஈசுரருக்குச் சிருஷ்டிக்கிற விச்சையுண்டாம். அந்த விச்சையினாலே விரண்டு பரமாணுக்கள் கூடி யொரு திவேணுகம் பிறக்கும். மூன்று திவேணுகங்கூடி யொரு திரிவேணுகம் பிறக்கும். நாலு திரிவேணுகங்கூடிச் சதுரணுகம் பிறக்கும். இந்தப்படி கிரமத்திலே ஸ்தூலமும், அதிலுமதிகமான ஸ்தூலதருமமும், அதிலுமதிகமான ஸ்தூலதருமமும், அதிலுமதிகமான மஹாப்பிருதுவி பிறக்கும். இப்படித் தார்க்கிகாள் சிருஷ்டிபிறக்கிற கிரிஷக சொல்லுவார்கள். அவர்கள் மதத்திலே சொல்லுகிறது:— ஆத்மா சடமயர், அந்தக்கரணத்தோடேகூடி ஞானமுடையராயிருக்கிறார், சேதனர், நானென்கிற ஞானத்துக்குவிஷயர், புத்தியாதி யட்டகுணகர், புத்தியாதிகளாகிற தேதென்றால்? புத்தி, சுக, துக்க, இச்சா, துவேஷா, பிரயத்தன, தரும, அதரும, சமுஸ்கார, ஆக வொன்பது மாத்மாவுக்குக் குணமென்று மாத்மாச் சடமயர், ஞானசிரயர், கர்த்தா, போக்தாவென்றுஞ் சொல்லுவார்கள்.

பிதாவினிடத்திலே யுண்டான புத்திரன் போலவென்றவர்கள் மதம். இஃது:— ஆரம்பவாதமான பேதவாதம். தர்க்க மதத்தை வேதவிருத்த மென்றும், பரமாணுவுக்கு ஜகத்காரணத்துவம் வேதங்களிலோரிடத்திலேயுஞ் சொல்லியிருக்கவில்லை யென்றும், தர்க்க மதத்தையவைதிக மென்றும், வியாசாசாரியர் தூஷித்திருக்கிறார். சாங்கியன்மதம்:— பால்தானே தயிரானாற் போலப் பிரகிருதி தானே விசுவமாகப் பரிணமித்ததென்று சிருஷ்டி சொல்லப்படும். இது பரிணாமவாதம். இது வேத விருத்தாமனபடியினாலே:—இந்

தப்பக்ஷங் கூடாது. வேதாந்திகள் சிருஷ்டிசொல்லுகிறோம்:— ரச்சு சர்ப்பம்போலேயும், சுத்திரசிதம் போலேயும், கானற்சலம்போலேயும், தமகுணத்தோடே கூடியிருக்கிற பிரமம்:— விவர்த்தவுபாதானப் பிரமமென்று தார்ப்பரியம். இது விவர்த்தவாதம். சிருஷ்டிக்கு முன்னே பிரமமே:— யேகமாய், அத்துவிதமாக விருந்தது. அந்த அத்துவிதமாவது பிரமமொன்று தானே; இரண்டாம் வஸ்து வில்லை. இதற்கர்த்தம் சுஜாதீயபேதமுமில்லை. விஜாதீய பேதமுமில்லை. ஸ்வகதபேதமுமில்லை. அஃதெப்படியென்றுவர:— சூரியன்றானே ஜலசூரியன் போலவும், சந்திரன்றானே ஜலசந்திரன்போலவும், முகந்தானே கண்ணாடியிற் பிரதிமுகம்போலவும், பிரமந்தானே யவித்தையாவந்தக்காரணத்தோடே கூடி ஜீவனானர்; பிரமத்தைத் தவிர வேறே ஜீவனில்லை. ஆனபடியினாலே:— பிரமத்துக்கும், ஜீவனுக்கும், பேதமில்லை. இது சுஜாதீயபேத மில்லாமலிருக்கிறது. இனிமேல் விஜாதீயபேதரகித மெப்படியென்றுவர:— சுவர்ணத்திலே குண்டலாதிகளெல்லாங் கற்பிதம், மிருத்திகையினிடத்திலே கடாதிகளெல்லாங் கற்பிதம், இரும்பினிடத்திலே யாயுதாதிகளெல்லாங் கற்பிதம், தந்துவிலேபடாதிகளெல்லாங் கற்பிதம், சமுத்திரத்திலே தரங்காதிகளெல்லாங் கற்பிதம், கானலினிடத்திலே ஜலங்கற்பிதம், சுத்தியிலே ரசிதங் கற்பிதம், அப்படிப்போலே வுபாதானமாயிருக்கிற பிரமத்திலே பிரபஞ்சங் கற்பிதம். ஆனபடியினாலே; கற்பிதங்கள் காரண அதிஷ்டானத்தைக் காட்டிலுமன்னியமல்ல. ஆகையினாலே; நாமரூபப் பிரபஞ்சங் கற்பிதம். பிரபஞ்ச வியவகாரமும் கற்பிதம், ஜீவனுங் கற்பிதம், ஜீவசமுசாரவியவகாரமுங் கற்பிதம், தேகமுங் கற்பிதமென்று பெரியவாள் சொல்லு

வார்கள். நாமரூபப்பிரபஞ்ச மெப்படிக்கற்பித மென்றால்?
மாதா பிதா விரண்டுபேருங் கூடி யுண்டான குமாரனுக்கு
நாமகரணம் பண்ணுகிறார்களே; அது தவிரப் பிரமசாரி
யென்றும், கிரகஸ்த னென்றும், வானப்பிரஸ்த னென்
றும், சந்நியாசி யென்றும், வித்துவானென்றும், உபாத்தி
யாரென்றும், சிரவுதியென்றும், தீக்ஷிதரென்றும், சோம
யாசி யதிராதிரிவாச பெயரென்றும், சுயம்பாகி யென்றும்,
மந்திரவாதி வயித்தியனென்றும். இவைமுதலாய்க் கிரியா
கற்பிதமாயிருக்கிற நாம வியவகாரங்களும், லோகத்திலே
கண்டிருக்கிறோம். இதுவல்லாமல்:—பாதாதிகேசபரியந்தம்
அவையவங்களிலேயுற்றுப்பார்த்தாற்பெயரைக்காணோமே.
இதுவல்லாமல்:—பாதாதிகேசபரியந்தம் பார்க்குமிடத்திற்
ரோக்காதிகள்தவிரப் பாதாதி வஸ்துக்களையுங் காணோமே.
பாதாதி கேசங்களிலே ரூபமென்கிற சரீரவஸ்துவையுங்
காணோமே.

இந்தப்படி கிரகமென்கிற விடத்திலே திரணகாட்ட
த்தைத் தவிரக் கிரகமென்கிற வஸ்துவைக்காணோமே. இர
த்தினக் கம்பளமென்கிற விடத்திலே விசித்திர தந்துகள்
தவிர ரத்தினக்கம்பளத்தைக்காணோமே. பல்லாக்கு வென்
கிற விடத்திலே பட்டுநூற்கயிறு தந்தங்கள் கொம்பு விவை
களைத்தவிர பல்லாக்கைக் காணோமே. தந்து படத்தலத்தி
லேயும், கடமென்கிற தலத்திலேயும், சுத்திரசிதத்தலத்தி
லேயும், ரச்சுசர்ப்பத்தலத்திலேயும், கானற்ஜலமென்கிற
தலத்திலேயும், ஆபரணமென்கிறதலத்திலேயும், அலையெ
ன்கிறதலத்திலேயும், ஸ்தாணு புருஷனென்கிற தலத்திலே
யும், இந்தவியாயந்தானே கண்டிருக்கிறோம். ஆனபடியினாலே
சொப்பனப் பிரபஞ்சம்போலே ஜாக்கிரநாமரூபப் பிரபஞ்ச

ங் கற்பிதந்தானே. பிரபஞ்சவியவகாரமுங் கற்பிதந்தானே. அஃதெப்படியென்னில்? கஜமும்பொய் ஓடுதலும்பொய் யென்கிற நியாயம்போலே:—வியவகார மெல்லாங் கற்பிதந்தானே. இன்னஞ்சொல்லுகிறோம்; தேவதத்தன்றானே தன் பிள்ளையைக் குறித்துத் தோப்பனாகவும், பிதாவைக்குறித்துப்புத்திரனாகவும், தம்பியைக் குறித்துத் தமையனாகவும், தமயனைக்குறித்துத் தம்பியாகவும், மாமனைக்குறித்து மருமகனாகவும், மருமகனைக்குறித்து மாமனாராகவும், மாமனாரைக்குறித்து மாப்பிள்ளையாகவும், மாப்பிள்ளையைக் குறித்து மாமனாராகவும், சிஷியனைக்குறித்து வாசாரியராகவும், ஆசாரியரைக்குறித்து சிஷியனாகவும், எஜமானைக்குறித்து ஏவலாளாகவும், ஏவலாளைக்குறித்து எஜமானாகவும், பாரியைக்குறித்துப் பதியாகவும், பேரனைக்குறித்துப் பாட்டனாகவும், பாட்டனைக்குறித்துப் பேரனாகவும், இவை முதலான வனந்த வியவகாரங்களொருதேவதத்தனிடத்திலே கற்பிதங்களாகக் கண்டிருக்கிறோம். ஆனதால் பிரபஞ்ச வியவகாரங்களெல்லாஞ் சொப்பன வியவகாரம்போலே கற்பிதந்தானே. இன்னஞ்சொல்லுகிறோம்; பரமாத்மாத்தானே விசுவகாரணர். சுத்தியினிடத்திலே ரசிதங் கற்பிதம்போலே பரமாத்மாவினிடத்திலே விசுவம் மாயையினாலே கற்பிதம். சுத்தியிலே கற்பித ரசிதம்போலே பிரபஞ்சம் பரமாத்மாவைக்காட்டிலும் பின்னமன்று. சுத்தியிலேகற்பிதரசிதஞ்சுத்தியைக் காட்டிலும் அபின்னம்போலே பரமாத்மாவினிடத்திற்கற்பிதவிசுவம் அவ்வாத்மாவைக்காட்டிலும் அபின்னந்தானே. விசுவோற்பத்திக்குமுன்னேபரமாத்மாவேகமாயிருந்தார். அஃதெப்படியென்னில்? கற்பித ரசிதோற்பத்திக்கு முன்னே சுத்திமாத்திரமா யிருந்தாற்போல்; — மாயை

யோடே கூடியிருக்கிற பரமாத்மாத்தானே; பிரபஞ்சமாக த்தோற்றுகிருர். இது விவர்த்தவாதம். இன்னஞ்சொல்லு கிறோம்; பரமாத்மாத்தானே ஜீவனுயிருக்கிருர். ஸ்தாணு தானே புருஷனுயிருக்கிறதுபோ லிருக்கப்பட்ட கற்பித ஜீவன் பரமாத்மாவைக் காட்டிலும்பின்னமன்று. ஸதாணு வைக்காட்டிலுங் கற்பிதபுருஷனெப்படிப்பின்னமல்லவோ; அப்படிப்போலே பரமாத்மாவைக்காட்டிலும் கற்பிதஜீவன் அபின்னந்தானே. ஜீவப்பிரமத்துக்குமுன்னேயும், ஜீவவுபா தியுடனே கூடுகிறதுக்கு முன்னேயும், பரமாத்மா வேகரா யிருக்கிறரே; அப்போது ஜீவனில்லையே.

அஃதெப்படியென்னில்? கற்பிதபுருஷனைக்காட்டிலுந் ஸ்தாணு அன்னியந்தானே; பிராந்திக்குமுன்னே கற்பித புரு ஷனில்லையே. அப்போதுஸ்தாணுமாத்திரமா யிருக்கிறதே; ஆகாய சூரியனிடத்திலே ஜலசூரியன் கற்பிதன். கற்பித ஜலசூரியனுகாயசூரியனைக்காட்டிலும் பின்னமன்றே; ஆகா யசூரியனுனல்கற்பித ஜலசூரியனைக்காட்டிலும் விலக்ஷணர் தானே. கடஜலமில்லாதபோது ஆகாய சூரியன் மாத்திர மாகத்தானே யிருக்கிருரே; அப்படிப்போலே ஜிவன் கற்பி தன். கற்பிதங்களெல்லா மதிஷ்டானத்தைக் காட்டிலும் பி ன்னமல்ல அதிஷ்டானமோவென்ருல்? ஆரோபஜீவனைக்கா ட்டிலு மன்னியந்தானே; ஆரோபமில்லாதபோ தாத்மாத் தானே யிருக்கிருர். பரமார்த்த ஞானத்தினுலே கற்பித வி சுவதிருஷ்டியும், கற்பித ஜீவதிருஷ்டியும், நசித்துப்போம். சர்வத்திர காரண பரமார்த்த திருஷ்டியினுலே கற்பிதகா ரியதிருஷ்டிகளெல்லா நசித்துப்போ மீதுண்மை. இனி ஜீவ னெப்படிக்கற்பிதமென்ருல்? ரச்சுசர்ப்பம்போலேயும், ஸ்தா ணுபுருஷன்போலேயும், ஜலசூரியன்போலேயும், ஜலசந்தி

ரன்போலேயும், ஜலாகாசம்போலேயும், ஜலமுகம்போலே யும், கற்பிதந்தானே. அஃதெப்படியென்றால்? சைதன்னிய மாத்திரம் ஜீவனல்ல. அந்தக்கரணமாத்திரம் ஜீவனல்ல. ஆனால்:—சித்து அம்சமும், அந்தக்கரண விர்த்தியுங் கூடி ஜீவனானான். அந்த ஜீவன் சமுசாரி. அந்தக்கரணத்திலே பிரதிபலித்திருக்கிற சைதன்னியம் ஜீவன். அந்தக்கரணத்தி னாலே மறைக்கப்பட்டிருக்கிற சைதன்னியம் ஜீவன். இவ ன் விக்ஞானமயனென்று வியாசர் மதம். அவித்தையோ டே கூடியிருக்கிற சைதன்னியம் ஜீவன். அவித்தையிலே பி ரதிபலித்திருக்கிற சைதன்னியம் ஜீவன். அவித்தையினாலே யாவரிக்கப்பட்டசைதன்னியம் ஜீவன். அவர்தான் கூடஸ்தர். அவர் தான்;பாரமார்த்திக ஜீவன், விக்ஞானமயர், வியவகா ரிகஜீவனென்றுபாஷியக்காரர்மதம். விக்ஞானமயர் ஜீவன். கூடஸ்தர்தானே ஆனந்தமயர். அவ்வியத்தோபாதிக ரவர் தானே; பரமாத்மாவென்று சூத்திரக்காரர் மதம். விஷ் ணுவினிடத்திலே தாசாதிபாவம்போலேயும், கருணனிடத் திலே தேர்பாகத் தன்மைபோலேயும், ராஜபுத்திரனிடத்தி லே வேடபாவம்போலேயும், தசமனிடத்திலே தசமனல்ல வென்கிற பாவம்போலேயும், ஜீவபாவம் பிரமத்தினிடத்தி லேகற்பிதம். அவித்தையினாலே ரச்சுவினிடத்திலே சர்ப்பபா வம் கற்பிதம். அவித்தையினாலே ஸ்தாணுவினிடத்திலே புரு ஷபாவம் கற்பிதம்போலே, பரமாத்மாவினிடத்திலே யவி த்தையினாலே ஜீவபாவங் கற்பிதந்தானேயென்று பாஷியக் காரர் மதம். இனி ஜீவசமுசாரங் கற்பிதமெப்படியென் னிற் சமுசாரமாவது? புத்திரதாராதி சம்பந்தலக்ஷணம். இன்னம் ஜனனமரணப்பிரவாகாதி சம்பந்தலக்ஷணம். இந் தஉபயவிதசமுசாரமுங் கற்பிதந்தானே.

அஃதெப்படியென்னில்? ஒரு கிரகத்திலே பிதாவென்றும், புத்திரனென்றும், பாரியென்றும், தம்பியென்றும், தமையனென்றும், பேரனென்றும், பாட்டனென்றும், அம்மானென்றும், மருமகனென்றும், தங்கையென்றும், தமக்கையென்றும், தாயென்றும், சிறியதாயாரென்றும், அத்தையென்றும், மாமியென்றும், பசுக்களென்றும், ஆடுகளென்றும், ஆளடிமை யென்று மொருகிரகத்தி லெல்லாருங்கன்மானுசாரமாக வந்துகூடி ரமித்துக்கொண் டிருக்கிறார்கள். அவாளவாள் தன் தன் கருமவேதுவாக வந்திருக்கிறார்கள். தன் தன் கருமத்தினாலே சஞ்சரிக்கிறார்கள். தன் தன் கருமங்களைத்தானே புசிக்கிறார்கள். அஃதெப்படியென்றால்? இராத்திரி காலத்தி லொருவிருக்ஷத்திற் பக்ஷிக்கூட்டம்போலவும், சந்தைக் கூட்டம்போலவும், கலியாணத்திலும் திருநாளிலும்வந்து கூடுகிறஜனக்கூட்டம்போலவுமொரு கிரகத்திலே கருமானுசாரமாகப் புத்திரதாராதிகளெல்லாம் வந்து கூடியிருக்கிறார்கள். தன்கருமங்களைப் புசித்துக் கருமக்ஷயமான மட்டிலே; தானே தன் கருமங்களைத் தழீஇ தன்கருமங்களினாலே; இழுக்கப்பட்டுப்பரலோகத்தை யடைகிறார்கள். ஆனா லெத்தன்மைத்ததாய்த் தென்றால்? புத்திரபாரிகளெல்லாருந் தன்கருமங்களினாலேவந்து, தன் கருமங்களினாலே சஞ்சரித்துத் தன் கருமங்களைப்புசித்துத் தன்கருமங்களினாலே பரலோகத்துக்குப் போகிறார்கள். கடன் சம்பந்தத்தால்:— பசுஸ்திரீ, பிள்ளைகள், வீடுகளித்தியாதி ரூபமாக வந்து கடன்தீர்ந்தாற் சமஸ்தமுநாசத்தை யடைகின்றன. இதிலே துக்கமென்னவென்று சுலோகமிருக்கிறபடியினாலே போகிறபோது கிரமமில்லாமல் அவரவர்கருமப்படி பரலோகத்துக்குப்போவார்கள். சமுசா

ரவிசித்திரமனைத்தும் கருமகற்பிதந்தானே. ஏ! பிராந்தா? வுனக்குஸ்திரீயார், புத்திரனார், அதி விசித்திரமா யிருக்கிற சமுசாரமியாதுநீயாருக்குயார், நீதான்யார், நீதான்யெங்கே யிருந்து வந்தாய்; ஆதலால்:—தத்துவத்தைச்சிந்தனைபண்ணு வென்று ஆசாரியசுவாமிகள் வசனமிருக்கிற படியினாலே; சொப்பனசமுசாரம்போலே ஜாக்கிரசமுசாரமுங் கற்பிதந் தானே. ஜனனமரணப்பிரபஞ்சலக்ஷணமாயிருக்கிற சமுசார முமுபாதி கற்பிதந்தானே. ஆத்மா அசங்கரென்றும், அசமு சாரியென்றும், அவிகாரியென்றும், நிர்க்குணரென்றும், நிஷ் க்கிரியரென்றும், வேதசாஸ்திரங்கள் கோஷிக்கின்றன. ஆனபடியினாலே; ஆத்மாவினிடத்திலே ஜீவபாவமும், சமு சாரமும், அந்தக்கரணோபாதி கற்பிதம். ஜலசூரியனிடத்தி லேயும், ஜலசந்திரனிடத்திலேயும், ஜலாகாயத்தினிடத்திலே யும், ஜலமுகத்தினிடத்திலேயும், இருக்கிற அலைச்சலெப்படி ஜலோபாதியதிஷ்டானத்தினிடத்திற்கற்பிதமோ; அப்படிப் போலே:—இந்திரியவந்தக்கரணோபாதி கற்பித சமுசாரமா த்மாவினிடத்திலேயேத்தப்படுகிறது. மேகமோடுகிறபோது சந்திரன்நட்சத்திரஞ் சீக்கிரகதியாக வோடுகிறது போலே எப்படித்தோற்றுகிறதோ; அப்படிப்போலே:—இந்திரிய வி யவகாரங்களாத்மாவினிடத்திலே, தோற்றுகிறது. இன்னஞ் சொல்லுகிறோம்; புத்தியிருந்தாற் ஜாக்கிர சொப்பனங்களி லே ராகத்துவேஷாதிகள் சகல கிரிகைகளுங் கண்டிருக்கி றோம். சுழுத்தியிலே புத்தியில்லாதபோது ராகத்துவேஷா திகளுமில்லை. ஒருகருமங்களுமில்லை. ஆனபடியினாலே; ராக த்துவேஷாதிகளும், சகல கருமங்களும், புத்திதருமந்தா னே. அதுமாத்திரமல்ல:— ராகத்துவேஷாதிகள் புத்தி தருமமென்று வேதங்களுஞ் சொல்லுகின்றன.

ஆனபடியினாலே; புத்திதானே கர்த்தா. ஞானவிந்திரியங்கருமவிந்திரியங்களுடனே கூடியிருக்கிற வந்தக் கரணந்தானே; சகலகிரியா கூட்டங்களுடனே கூடியிருக்கிறது. இதுமாத்திரமல்ல:— சொப்பனத்திலே புத்திதானே சகல சொப்பனப்பிரபஞ்ச வியவகாரமெல்லா நிருவகிக்கிறது. மானத பூசையிலே; தான்றனே சகலவியவகாரமுங் கற்பிதமாக பண்ணுகிறது. மனோராச்சியத்திலேயும்; சகலநிருவாகமும் புத்திதானே பண்ணுகிறது. பாகியவிந்திரியங்களெல்லாஞ் சகாகாரி அந்தக்கரணந்தானே பிரதானம். பாகியவிந்திரியங்களுடனே கூடியிருக்கிற வந்தக் கரணந்தானே கர்த்தா.

பூருவம் பாகிய விந்திரியங்களினாலே யநுபவித்தபதார்த்தங்களையெல்லா மேகாந்தத்திலே யிருந்துகொண்டு ஸ்மரிக்கிறான். ஆனதால்? அந்தக்கரணந்தானே; சகலகர்த்தா. சகலபோக்தா. சகல சமுசாரி. அந்தக்கரண சம்பந்தத்தினாலே; ஆத்மா கர்த்தாப்போலவும், போக்தாப்போலவும், ஜீவன்போலவும், சமுசாரிபோலவும், வியவகாரிபோலவும், அவிவேகிகளுக்குத் தோற்றுகிறார். ஜலத்தினுடைய வலச்சல ஜலசூரியனிடத்திலே தோற்றுகிறதுபோல வந்தக்கரண சமுசார மாத்மாவினிடத்திலே தோற்றுகிறதென்று சாஸ்திரங்கள் கோஷிக்கின்றன.

ஆனதால்:— ஆத்மாவினிடத்திற் சமுசாரம் ரத்தப்படிகம், நீலஸ்படிகம், ரத்தஜலம், நீலஜலம், பரிமளஜலம், உஷ்ணஜலம், இத்தியாதிகளைப்போலே கற்பிதந்தானே. அப்படிப்பட்ட கற்பிதபுத்தி யதார்த்தக் கியானத்தினால் நசித்துப்போம். இனித்தேகம் கற்பிதமெப்படியென்றால்? தேகம், அநிர்வசநீயம். அஃதெப்படிபோலே யென்னில்? புசிக்கிற அ

ன்னபானங்கள் சுக்கில சுரோணிதமாய்ப் பரிணமித்துக் கெற்ப கோளகத்திலே இரண்டுங்கூடிப் பிண்டமாய்க் கர சரணாதி யவையவங்கள் முளைத்துச் சேதனனாய்ப் பத்து மாதங் கெற்பத்திலிருந்து வெளியிலே வந்து, வாலியயவ்வன கௌமார வார்த்திக அவத்தைகளுடனே கூடுகிறது, பார்க்கிறது, கேட்கிறது, வசனிக்கிறது, கொடுக்கிறது, வாங்கிறது, போகிறது, வருகிறது, இருக்கிறது, எழுந்திரிக்கிறது, படுக்கிறது, அன்னபானங்களைப் புசிக்கிறது சகல வியவகாரங்களையும் பண்ணுகிறது, இவைகளெல்லா மெப்படி நடக்கிறதென்றால்; பிரதியுத்தர மூகபாவந்தானே. அநிர்வசநீயந்தானே. இந்தத்தேகத்திலே:—மூன்னூத்தறுப தெலும்பு, எழுபத்தீராயிர நாடி, மூன்றரைக்கோடிரோமம், ஆறு துவக்கு, அஸ்தி, மாமிசம், உதிரம், மேதசு, மச்சை, சுனுயு, மூத்திரபுரிச சங்காத மிந்தச் சரீரம். இவைகளெல்லாங்கூடி யெப்படிக் கரசரணாதியவயவமாய்ச்சரீரமாயிருக்கிறது; இந்தச்சரீரஞ் சகல சமுசாரங்களையும், சகல வியவகாரங்களையு மெப்படிப் பண்ணுகிறதென்று கேட்டாற் பிரதியுத்தர மாச்சரியந்தானே. ஆனதால்:—தேகாதிப் பிரபஞ்சம் விசாரிக்குமிடத்திற் கற்பிதம் அன்றியி லநிர்வசநீயந்தானே. விசுவப் பிரபஞ்சத்துக்கும், பிரமத்துக்கும், பேதமில்லை. இது விஜாதீகபேதரகிதம். இரண்டாம் பிரமமில்லை. ஒன்றே பிரமமானபடியினாலே ஸ்வகதபேதமில்லை. இப்படி பேதத்திரய சூனியமா யன்னியவஸ்துவில்லாதபடியினாலே பிரமமத்தொய்தமென்று சொல்லப்படும். பிரமமனந்தமென்று சொல்லப்படும். அதாவது? காலத்தினாலேயும், தேசத்தினாலேயும், வஸ்துவினாலேயும், பரிச்சேதரகித மிதற்கர்த்தம். பிரமம் நித்தியமானபடியினாலேயும், காலத்தைகடந்

திருக்கிற படியினாலேயும், இன்னகாலத்திலே பிரமமில்லையென்கிற அபாவங்கிடையாது. பிரமம் விபுமானபடியினாலே:—இன்னதேசத்திலே யில்லையென்கிற விதிரேகங்கிடையாது. பிரமஞ் சகல உபாதான காரணமானபடியினாலே இன்னவஸ்துப் பிரமமல்லவென்கிறவிதிரேகங் கிடையாது. ஆனபடியினாலே :— பிரமம் பரிச்சேதத்திரய சூனியம். இதை யானந்தமென்று சொல்லப்படும். அப்போதுபிரமமே கமாயிருக்கு மிரண்டாம் வஸ்துவில்லை. அப்போதொரு பூதங்களுமில்லை. ஒரு பிராணிகளுமில்லை. அண்டமுமில்லை. புவனங்களுமில்லை. சூரிய சந்திராளுமில்லை. பூமி யந்திரிக்ஷ சுவர்க்கமுமில்லை. ஸ்தூலமுமில்லை. சூக்ஷ்மமுமில்லை. காரணதேகமான மாயை யவ்வியத்தமுமில்லை.

பிரமத்தைத்தவிர வேறே வஸ்துவுமில்லை. பிரமமாத்திரம் மேகமாயிருந்தது. அப்போது சகலபிராணிகளும், சகல பிரபஞ்சங்களும், ஆலவிரையி லாலமரம் லயித்திருந்தாற் போலவும், அரசவிரையி லரசமரம் லயித்திருந்தாற்போலவும், அந்தந்தப் பீசங்களிலே யந்தந்த விருக்ஷம் லயித்திருந்தாற்போலவும், அப்புவிலே உப்புப்போலவும், சகலமுஞ் சூக்ஷ்மப்பிரமத்தினிடத்திலே லயித்திருக்கும். அப்போது பிரமம் நித்தியமாய், நிருவிகற்பமாய், நிராகாரமாய், நிர்க்குணமாய், சுத்தபரிபூரணமாய், ஆனந்தமாய், ரக்ஷிக்கத்தக்கதாய், சித்தாய், முக்கிய ரசமாய், சத்திய ஞானானந்த லக்ஷணமாய், சுயஞ்சோதியாய், சுகாகாரமாய், போதரூபமாகத்தானே யிருந்தது. சைவ வைஷ்ணுவாள், சூரியமண்டலமுஞ் சூரிய கிரணம் போலவும், சந்திரமண்டலமுஞ் சந்திரகிரணம்போலவும், தீபமுந் தீபப் பிரவைபோலவும், மணியு மணிப்பிரவைபோலவும், பரமாத்மா ஜீவாத்மா யிரு

க்கிறார். அவரை:—ஞானமயர், ஞானகுணகரென்றுஞ் சொல்லுவார்கள். இப்படி மந்தப்புத்தியினாலே சொல்லுவார்கள். நிர்க்குணச்சுருதிவிரோதத்தினாலே யந்தபக்ஷம்போயிற்று. அப்பாற் பிரமம் நிஷ்பிரபஞ்சமாய் வெகுகாலமிருந்தது. சிருஷ்டிகாலம் வந்தமட்டிலேதானே; பரப்பிரமத்தினிடத்திலே நின்றும்மாயை யுண்டாயிற்று. அப்படிப்பட்ட மாயையுடனே பரபிரமங்கூடி ஈசுரனானார். ஈசுரர் சர்வக்ஞத்துவாதிகுணங்களுடனே கூடினவர். அப்படிப்பட்ட வீசுரரானவர் தாமேகாங்கியா யிருந்துகொண்டு சிருஷ்டிகாலம் வந்தமட்டிலேதானே சுயவிச்சையினாலே விசுவப்பிரபஞ்சத்தை சிருஷ்டிக்க வேண்டுமென் றிச்சித்தார் தாந்தானே பிரபஞ்சரூபியாய், வெகுரூபமாய், விளையாடவேண்டுமென் றிச்சித்தார். பிரமந்தானே நிமித்தோபாதானம். அனந்தசத்திகளோடே கூடியிருக்கிற பரமேசுரரானவர்:—தம்மிடத்திலே நின்றும் பிரகிருதி புருஷாளென்று சொல்லுகிற விரண்டு தத்துவங்களைச் சிருஷ்டித்தார்.

மூன்றாவது அத்தியாரோகப்பிரகரணம்

முற்றிற்று.

---

## நான்காவது. பிரகிருதிசிருஷ்டிப்பிரகரணம்.

---:o:---

இனிப்பிரகிருதி சிருஷ்டி சொல்லுகிறோம்.

அந்தப் பிரகிருதிதானே; இருபத்துநாலுதத்துவ மாயிற்று. புருஷனிருபத்தைந்தாந் தத்துவமென்று வேதாந்தங்கள் சொல்லுகின்றன. பிரகிருதி மாயா அம்சம். புருஷன் பிரம அம்சம்;— போதமயன். சிலபேர் பெரியவாள் சுத்த

சத்துவப் பிரதானமாக விருக்கிற பிரகிருதி தானே; மாயை
யென்று சொல்லுவார்கள். மலினசத்துவப்பிரதானமாகவிரு
க்கிற பிரகிருதிதானே; அவித்தையென்றுசொல்லுவார்கள்.
தமப்பிரதானமாக விருக்கிற பிரகிருதிதானே பிரகிருதி
யென்று சொல்லுவார்கள். பிரமந்தானே; மாயை யுடனே
கூடி நிமித்தகாரணமான வீசுரராஞ்ரென்றும், பிரமந்தா
னே; பிரகிருதியுடனேகூடி யுபாதானகாரணமா யிருக்கிற
கூடஸ்தராறெரன்றும், பிரமந்தானே; அவித்தையா
வந்தக்கரணத்துடனேகூடிப் போக்தாவான ஜீவனென
ரென்றுஞ் சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் மா
யை வேறே, பிரகிருதி வேறே, இரண்டுக்கும் பேதமுண்டு;
மாயோபாதிக னீசுரர், பிரகிருதி ஜீவோ பாதியென்று
சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் பிரகிருதி யீசுரோ
பாதியென்றும், அந்தக்கரணம் ஜீவோபாதி யென்றுஞ்
சொல்லுவார்கள். பரமேசுரரானவர்:—விசுவோற்பத்திநிமி
த்தியம் பிரகிருதி புருஷாளை யொன்றாய்க் கூட்டவேண்டு
மென்று நினைத்தார். ஸ்திரீபுருஷாள்கூடிப்பிரசவோற்பத்தி
போலவும், பீசங்களும் பூமியுங்கூடிப் பயிருற்பத்திபோல
வும், பிரகிருதி புருஷாள்கூடி விசுவோற்பத்தியிலே; கார
ணம். ஸையோகமாவ தத்தியாசசம்பந்தம். பிரகிருதி புருஷ
பிரிவு:—விசுவசங்காரத்திலே காரணம். பிரகிருதி புருஷ
ஸையோகமென்றும், ஆத்மானாத்ம ஸையோகமென்றும், சிற்
சடஸையோகமென்றும், பெரியவாள் சொல்லுவார்கள்.
ஸைவவைஷ்ணுவாள் பக்ஷம்:—ஈசுரன் வேறே, பிரகிருதி
புருஷாள் வேறே, ஈசுரனுக்குப் பிரகிருதிபுருஷாளிரண்டும்
விசுவசிருஷ்டி லீலையிலே யுபகரணசாதனம். புருஷனுட
னேகூடியிருக்கிற பிரகிருதியினிடத்திலேநின்றும் மகதத்து

வமென்கிற தத்துவாந்தர முண்டாயிற்று. அந்த மகதத்து வம்:—அந்தக்கரண சமஷ்டிரூபம். இரணிய கற்பவுபாதி. அவர்தானே; ஜீவசமஷ்டிரூபர். இரணியகற்பர். அந்தக்கர ணசமஷ்டிரூபி. மகதத்துவத்திலே நின்று மகங்காரதத்துவ முண்டாயிற்று. அகங்காரம் மூன்றுவிதம்.வைகரி,தைசதம், பூதாதி,அதைத்தானே:—சாத்தீக அகங்காரம், ராசத அக ங்காரம், தாமத அகங்காரமென்று சொல்லுவார்கள். சாத் திக வகங்காரத்திலே நின்றும் ஞானேந்திரியங்களுந் தேவ தைகளு முண்டானார்கள். ராசத அகங்காரத்திலே நின்றுங் கருமேந்திரியங்களுஞ் சகலவியாபாரங்களு முண்டாயிற்று. பூதாதி தாமத வகங்காரத்திலே நின்றுஞ் சத்ததன்மாத் திரை யுண்டாயிற்று.

நான்காவது பிரகிருதிசிருஷ்டிப்பிரகரணம்

முற்றிற்று.

---

## ஐந்தாவது. பூதசிருஷ்டிப்பிரகரணம்.

—:o:—

பூதசிருஷ்டிப்பிரகரணஞ் சொல்லுகிறோம்.

சிலபேர் பெரியவாள்:—ஆத்மாவினிடத்திலே நின்று மாகாசமுண்டாயிற்று, ஆகாசத்திலே நின்றும், வாயுவுண் டாயிற்று, வாயுவிலே நின்றுந் தேயு, தேயுவிலே நின்றும் அப்பு, அப்புவிலேநின்றும் பிருதுவி, பிருதுவியிலே நின்று மோஷதிகள், ஓஷதியிலேநின்று மன்னம், அன்னத்திலே நின்றும், ஜீவானுண்டானார்களென்றுஞ் சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள்:—பிரமத்தினிடத்திலே நின்றும் தேயு வுண்டாயிற்று, தேயுவிலேநின்றும் அப்பு, அப்புவிலே நின்

றும் பிருதுவி, பிருதுவிலே நின்று மன்னம், அன்னத்திலே நின்றும் பிராணிகளுண்டானார்களென்றுஞ் சொல்லுவார்கள். ஸ்மிருதிபுராணங்கள் வேதத்தினுடைய பொருளைச் சொல்லுகிறபடியினாலே; வேதங்களையும், ஸ்மிருதிபுராணங்களையும், மொன்றாகக்கூட்டி யவிரோதமாக அர்த்தஞ் சொல்லுகிறோம். பூதாதியாயிருக்கிற தாமதவகங்காரத்திலே நின்றும்; சத்ததன்மாத்திரையுண்டாயிற்று, தன்மாத்திரை, மஹாபூத சூக்ஷ்மவவத்தை, சத்த தன்மாத்திரத்திலே நின்று மாகாசமுண்டாயிற்று, ஆகாசத்துக்குச் சத்தங் குணம். ஆகாசத்திலே நின்றும் பரிசதன்மாத்திரை யுண்டாயிற்று, பரிசதன்மாத்திரையிலே நின்றும் வாயுவுண்டாயிற்று, வாயுவுக்குப்பரிசங்குணம். வாயுவிலேநின்றும் ரூபதன்மாத்திரையுண்டாயிற்று, ரூபதன்மாத்திரையிலே நின்றுந் தேயு வுண்டாயிற்று, தேயுவுக்கு ரூபங் குணம். தேயுவிலே நின்றும் ரசதன்மாத்திரை யுண்டாயிற்று, ரசதன்மாத்திரையிலே நின்றும் அப்புவுண்டாயிற்று, அப்புவுக்கு ரசங் குணம். அப்புவிலே நின்றும் கந்ததன்மாத்திரை யுண்டாயிற்று, கந்ததன்மாத்திரையிலே நின்றும் பிருதுவியுண்டாயிற்று, பிருதுவிக்குக் கந்தங் குணம். தன்மாத்திரைகளைப் பீசாக்ஷரங்களென்றுஞ் சிலபேர் சொல்லுவார்கள். இந்தப்படி பரமேசுரரானவர் சூக்ஷ்மபஞ்ச மஹாபூதங்களைச் சிருஷ்டித்தார்.

பிரகிருதியானது திரிகுணாத்மகம்; சைதன்னியத்துடனே கூடியிருக்கும். மகதத்துவந் திரிகுணாத்மகம்; சைதன்னியத்துடனே கூடியிருக்கும். அகங்காரதத்துவம் திரிகுணாத்மகம்; சைதன்னியத்துடனே கூடியிருக்கும். ஆகாசதத்துவம் திரிகுணாத்மகம் ; சைதன்னியத்துடனே கூடியிருக்கும்.

வாயுவுதத்துவந்திரிகுணாத்மகம்;சைதன்னியத்துடனே கூடியிருக்கும். தேயுவுதத்துவந் திரிகுணாத்மகம்; சைதன்னியத்துடனே கூடியிருக்கும். அப்புதத்துவந் திரிகுணாத்மகம்; சைதன்னியத்துடனே கூடியிருக்கும். பிருதுவிதத்துவந் திரிகுணாத்மகம்; சைதன்னியத்துடனே கூடியிருக்கும். பூருவபூருவதத்துவ முத்திரோத்திர தத்துவத்துடனே கூடியிருக்கும். உத்திரோத்தர தத்துவங்கள் பூருவ பூருவ தத்துவங்களுடனே கூடியிருக்கும். ஆனபடியினாலே:—ஆகாசத்துக்குச் சப்தங் குணம். வாயுவுக்கு சப்தம், பரிச மாகக் குணமிரண்டு, தேயுவுக்குச் சப்தம்,பரிசம், ரூப மாககுணமூன்று, அப்புவிக்குச் சப்தம், பரிசம், ரூபம், ரச மாகக்குண நான்கு, பிருதுவிக்குச் சப்தம், பரிசம், ரூபம், ரசம், கந்த மாகக்குணமைந்து. ஆகாசமிடங்கொடுக்கும். வாயுவுசலனப்படும். தேயு வுஷ்ணப்பிரகாசம். அப்பு சீதத்திரவத்திரவியம். பிருதுவிகடினத்திரவியம். அக்கினியினுடைய சன்னிதானத்திலே யரக்குருகிறதுபோலவும், வெண்ணெயுருகிறதுபோலவும், மண்ணினுண்டாகிறவனை யுருகிறதுபோலவும், ஈயமுருகிறதுபோலவும், புருஷசன்னிதானத்திலே;பிரகிருதி விகாரப்படும். சப்தமாவது:—தொனியாத்மகம், வர்ணாத்மகமென்று விரண்டுவித மாகாசத்துக்குக் குணம். சுடுகை, குளிர்மை, சீதோஷ்ணதொந்த மாகப் பரிசமூன்று விதம் வாயுவுக்குக் குணம். வெளுப்பு, கறுப்பு, சிவப்பு, பச்சை, மஞ்சளாக ரூபமஞ்சுவிதம் தேயுவுக்குக் குணம். தித்திப்பு, புளிப்பு, துவர்ப்பு, கைப்பு, கார்ப்பு, உவர்ப் பாக ரசமாறுவிதமாகவிருக்கு மப்புவின் குணம். பரிமளந்துற்கந்தமென்று கந்தமிரண்டுவிதம் பிருதுவிக்குக் குணம். இத்தப்படிபரமேசுரரானவர் குணசிருஷ்டியைப் பண்ணினார். சிலபேர் பெரிய

வாள்:—பஞ்சமஹா பூதங்கள்தானே; பிரகிருதியென்று
சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் பிருதுவி, அப்பு,
தேயு விந்த மூன்றுந்தானே பிரகிருதியென்று சொல்லு
வார்கள். சிலபேர் பெரியவா ளாத்மாத்தானே சகலத்துக்
கும் பிரகிருதியென்று சொல்லுவார்கள். பிரகிருதியாவது?
உபாதானகாரணம். சிருஷ்டி திதி சங்காரகர்த்தா வாத்மா
த்தானே. ஆனபடியினாலே அபின்ன நிமித்தோபாதான மாத்
மாவென்றும் பெரியவாள் சொல்லுவார்கள். சிலபேர் பெரி
யவா ளாகாசாதி:—சாத்திகாங்கிசத்திலேநின்றும் ஞானேந்
திரியங்களுந் தேவதைகளு முண்டானார்கள். ஆகாசாதிகளு
டையராசாங்கிசத்திலேநின்றுங் கருமேந்திரியங்களுஞ் சகல
வியாபாரங்களு முண்டாயிற்று. அஃதெப்படியென்றால்?
ஆகாசத்தினுடைய சாத்திகாங்கிசத்திலே நின்றுஞ் சுரோத்
திரேந்திரிய முண்டாயிற்று:—சப்தம் விஷயம். வாயுவினு
டைய சாத்திகாங்கிசத்திலே நின்றுந் தொக்கிந்திரிய முண்
டாயிற்று:—பரிசம் விஷயம். தேயுவினுடைய சாத்திகாங்கி
சத்திலே நின்றுஞ் சக்ஷு வுண்டாயிற்று:—ரூபம் விஷயம்.
அப்புவினுடைய சாத்திகாங்கிசத்திலே நின்றும் ரசவிந்திரி
முண்டாயிற்று:— ரசம் விஷயம். பிருதுவினுடைய சாத்தி
யாங்கிசத்திலே நின்று மாக்கிராண விந்திரிய முண்டா
யிற்று:—கந்தம் விஷயம். ஆகாசத்தினுடைய ரசாங்கிசத்தி
லேநின்றும் வாக்கிந்திரிய முண்டாயிற்று:—வசனம் விஷய
ம். வாயுவினுடைய ரசாங்கிசத்திலே நின்றும் பாதவிந்திரிய
முண்டாயிற்று:— கமனா கமனம் விஷயம். தேயுவினுடை
ய ரசாங்கிசத்திலே நின்றும் அஸ்தவிந்திரிய முண்டாயி
ற்று:—தானாதானவிஷயம். அப்புவினுடைய ரசாங்கிசத்தி
லே நின்றும் சிசினவிந்திரிய முண்டாயிற்று:—ஆனந்தம்

விஷயம். பிருதுவியினுடையரசாங்கிசத்திலே நின்றுங்குதே ந்திரியமுண்டாயிற்று:—விசர்க்கம் விஷயம். இந்தப்படிகரு மேந்திரியங்களும் வியாபாரங்களு முண்டாயிற்று:—ஆகா சத்துடனே கூடியிருக்கிற வாயுவுதத்துவத்திலே நின்றும் சாத்திகாங்கிசத்திலே மனதுண்டாயிற்று:— சலனாத்மகம். தேயுவினுடைய சாத்திகாங்கிசத்திலே நின்றும் புத்தியுண் டாயிற்று:—நிச்சயாத்மகம். அப்புவினுடைய சாத்திகாங்கிச த்திலேநின்றுஞ் சித்தமுண்டாயிற்று:—தாரணாத்மகம். பிரு துவியினுடைய சாத்திகாங்கிசத்திலேநின்றும் அகங்காரத்து வமுண்டாயிற்று:—அபிமானாத்மகமென்றுபேர். சிலபெரிய வாள்:—பிருதுவியிலே நின்று மனதும், அப்புவிலே நின்று பிராணனும், தேயுவிலே நின்று வாக்கிந்திரியமு முண்டாயி ற்றென்றுசொல்லுவார்கள். சிலபேர் புராணிகாள்:—பிரமா, விஷ்ணு, ருத்திரர், ஈசுரர், சதாசிவர், ஆகிய பஞ்சவதி தே வதைகள் பஞ்சமஹாபூதங்களுக்கு ஐந்து பீசாக்ஷரங்களு ஃமந்துவர்ணங்களுமாக வுண்டாயிற்றென்று சொல்லுவார் கள். அதாவது? ஹ○ ய○ ரி○ வ○ ஹ யிந்தவைந்தும்பீசாக்ஷ ரம். வெளுப்பு ஆகாசம். புகைவர்ணம் வாயுவு. சிவப்புதேயு. பொன்னிறமப்பு. நீலவர்ணம் பிருதுவி. சிலபேரப்பைவெளு ப்பென்றும், ஆகாசத்தைக் கறுப்பென்றும், பிருதுவியைப் பொன்னிறமென்றுஞ் சொல்லுவார்கள்.

பரமாத்துமாவானவர்:—ஐந்து பஞ்சபூதங்களோடே யாரும்பூதமாய்க் கலந்து, சித்தனுடைய ரசகுளிகையோ டே கூடின லோகந்தானே பொன்னாகிறதுபோலே; தாந் தானே விசுவப்பிரபஞ்சமானார், உருச்சமைக்கிற கன்னா னவன்:—மண்ணினாலே கருவுருபமாய்ப்பிடித் துள்ளே மெழுகு கட்டி மேற்செம்மை யுருக்கிவிட்டு விம்ப முண்டு

பண்ணுகிறதுபோல; ஈசுரனானவர் தேகக்குகையைப் பிடித்து மனதாகிற மெழுகை யுள்ளேவிட்டுத் தம்முடைய அம்ச சைதன்னிய ஆத்மாவாகிய தாம்பிரத்தை யந்தக்கரணத்துக் குள்ளே பாய்ச்சி ஜீவனானார். தேகமும், மனதும், சைதன்னியமுங்கூடி ஜீவனானார். இந்தப்படி பரமேசுரனுடைய சிருஷ்டி. பரமேசுரனானவ ரிந்தப்படி பஞ்சமஹாபூதங்களை யுஞ்சிருஷ்டித்து விந்த வைந்துகளை யுமொன்றாகச்சேர்த்து அண்டத்தையும்விசுவத்தையுஞ்சிருஷ்டிக்கவேண்டுமென்று நினைத்தார்.

ஐந்தாவது பூதசிருஷ்டிப் பிரகரணம்
முற்றிற்று.

---

## ஆறாவது. அண்டசிருஷ்டிப்பிரகரணம்.

---

பஞ்சமஹாபூதங்களொன்றுக்கொன்று சேராதபடியினாலே விரோதம் பரிகரிக்க வேண்டிப் பஞ்சீகரணம் பண்ணினார். பஞ்சீகரணமாவது? ஆகாசாதி பஞ்சபூதங்களை யிரண்டு கூறாகப் பிரித்துப் பாதியைத் தனிப்பிறம்பாய் வைத்து மற்றப்பாதியை நாலுபங்கு பண்ணி அதைத் தன் அம்சத்துடனே கூட்டாம லிதர பூதாம்சங்களுடனே கூட்டவே யது பஞ்சீகரண மென்று பேர். இதுவிஸ்தாரமெத்தவுமுண்டாயிருக்கிற படியினாலே; இப்போ சங்கிரகமாகச்சொன்னோம். பரமேசுரரானவ ரிப்படிப் பஞ்சீகரணம்பண்ணி விரோதம்பரிகரித்துப் பஞ்சமஹா பூதங்களையொன்றாகத்தானே சேர்த்துப் பஞ்சீகிருதமா யிருக்கிற பஞ்சமஹா பூதங்களிலேநின்றும் அண்டத்தைச் சிருஷ்டித்து

வண்டத்துக்குள்ளே தாந்தாமே யிரணியகற்ப ரூபியாய்ப் பிரவேசித் திந்த விசுவத்தைச் சிருஷ்டித்தார். இன்னஞ் சொல்லுகிறோம்; பரமேசுரரானவர் முன்னே யப்புவைச் சிருஷ்டித்தார். அப்புவுக்குள்ளே தன்னுடைய வீரியத்தை விசர்ச்சனம் பண்ணினார். அந்த வீரியசத்தியிலே நின்று மண்டமுண்டாயிற்று. அந்தவண்டம் பொன்மய மாயிரஞ்சூரியப் பிரகாசமா யிருக்கும் குக்கிடாவண்டம்போலவும், அத்திக்காய் போலவு மிருக்கும். அப்படிக்கொத்த அண்டத்தை பரமேசுரரானவர் மஹாஜலமத்தியிலே நிறுத்தினார். சமுத்திரமத்தியிலே ஓடம் நிறுத்தினாற்போலே நிறுத்தினாரென்றும், அப்படிக்கொத்தவண்டத்திலே தாந்தானே இரணியகற்பரூபியாய் பிரவேசித்தாரென்றும், மனுவசனம்.

ஆறுவது அண்டசிருஷ்டிப்பிரகரண முற்றிற்று.

---

## ஏழாவது. விசுவசிருஷ்டிப்பிரகரணம்.

---:o:---

### விசுவசிருஷ்டி சொல்லுகிறோம்.

அண்டத்தைச் சிருஷ்டித்து அண்டத்துக்குள்ளே பரமேசுரர் தாமே இரணியகற்பரூபியாகப் பிரவேசித் திந்த விசுவப் பிரபஞ்சமெல்லாஞ் சிருஷ்டித்தார். தம்முடையசரீரங்களிலே நின்றுஞ் சகல பிரபஞ்சங்களையுஞ் சிருஷ்டித்தார். ஆதியிலே பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசங்களைச் சிருஷ்டித்தார். பதினாலுலோகம் புவனங்களையுஞ் சிருஷ்டித்தார். சத்ததீவுகளையுஞ் சிருஷ்டித்தார். சத்தசமுத்திரங்களையுஞ் சிருஷ்டித்தார். மஹாமேருமுதலான பருவதங்களை

யுங் கங்கைமுதலான நதிகளையுஞ் சிருஷ்டித்தார். பூமியந் திரஞ் சுவர்க்கங்களையுஞ் சிருஷ்டித்தார்.

மஹாலோகம், ஜனலோகம், தபோலோகம், சத்திய லோகம், முதலான புண்ணிய லோகங்களை யெல்லாஞ் சிருஷ்டித்தார். நாகலோகத்தையுஞ் சிருஷ்டித்தார். அதல, விதல, சுதல, ரசாதல, தராதல, மஹாதல, பாதாள, இந்தக் கீளேழு லோகமுஞ் சிருஷ்டித்தார். சூரிய சந்திராதிகளை முன்கற்பம்போலே யெல்லாஞ் சிருஷ்டித்தார். இந்திராதி லோகபாலாளை யெல்லாஞ்சிருஷ்டித்தார். அவாளவாளுக்கு ஸ்தான பலங்களை யெல்லாம் பூருவகற்பம்போலே சிருஷ்டித்தார். அதிகாரங்களை யெல்லாம் சிருட்டித்தார். இந்திரனுக்கு சுவர்க்காதி காரமும், யமனுக்குநரகாதிகாரமுஞ்சிருஷ்டித்தார். தேவதைகள், கந்தருவாள், கின்னராள், கிம்புருஷாள், சித்தாள், வித்தியாதராள், நாகாள், எக்ஷாள்முதலாகிய தேவதைகளையுஞ் சிருஷ்டித்தார். அசுராள், ராக்ஷதாள், பிசாசா ளிவர்களை யெல்லாஞ் சிருஷ்டித்தார். மனுஷாள், பசு, பக்ஷி முதலாகிய மிருகங்களையுஞ் சிருஷ்டித்தார். பிராமண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திராள் முதலான வர்ணங்களையுஞ் சிருஷ்டித்தார். பிரமதேவர்; தம்முடைய முகத்திலே நின்றும் பிராமணாளைச் சிருஷ்டித்தார். புயத்திலே நின்றுஞ் க்ஷத்திரியாளைச் சிருஷ்டித்தார். தம்முடைய துடையிலே நின்றும் வைசியாளைச் சிருஷ்டித்தார். தம்முடைய பாதங்களிலே நின்றுஞ் சூத்திராளைச் சிருஷ்டித்தார்.

தம்முடைய பாரிசங்களிலே நின்றும் பிருதுவியைச் சிருஷ்டித்தார். தம்முடைய நாபியிலே நின்று மந்தரிக்ஷத்தைச் சிருஷ்டித்தார். தம்முடைய சிரசிலே நின்றுஞ்

சுவர்க்கத்தை சிருஷ்டித்தார். தம்முடைய காதுகளிலே நின்றுந் திக்குகளைச் சிருஷ்டித்தார். தம்முடைய முகத்தி லே நின்று யிந்திரனையு மக்கினியையுஞ் சிருஷ்டித்தார். தம்முடைய கண்களிலே நின்றும் சூரியனையும், பிராணனி லே நின்றும் வாயுவையும், மனதிலே நின்றும் சந்திரனை யும், தம்முடைய சுக்கிலத்திலே நின்றும் அப்புவையும், சி ருஷ்டித்தார். தம்முடைய சிரசிலே நின்று மாகாசத்தை யும், இருதயத்திலே நின்றும் மனதையுஞ் சிருஷ்டித்தார். தம்முடையரோமங்களிலே நின்றும் மரம், செடி, கொடி, கல்பக விருக்ஷ முதலானதுகளையுஞ் சிருஷ்டித்தார். முன் சொன்ன நாலுவர்ணங்களையுஞ் சிருஷ்டித் தவர்களுக் கவரவர் தருமங்களையுஞ் சிருஷ்டித்தார். பிராமணனுக்கு யாகம்பண்ணுகிறதும், யாகம்பண்ணுவித்தாலாகிய தருமங் களையும், சந்தியாதி நியானுதி தருமங்களையும், அக்கினி ஹோத்திராதி தருமங்களையுஞ் சிருஷ்டித்தார். க்ஷத்திரியா ளுக்குப் பிரஜைகளை ரக்ஷித்து பரிபாலனம் பண்ணுகிறது முதலான தருமங்களெல்லாஞ் சிருஷ்டித்தார். வைசியாளு க்கு வெள்ளாண்மை, கோவை ரக்ஷிக்கிறது, வாணிப முத லான தருமங்களெல்லாஞ் சிருஷ்டித்தார். சூத்திராளுக்கு சிசுருடை முதலான தருமங்களெல்லாஞ் சிருஷ்டித்தார்.

பிரமசாரி, கிரகஸ்தன், வானப்பிரஸ்தன், சந்நியாசி, நாலாச்சிரமமுஞ் சிருஷ்டித்தார். அவர்களுக் கவரவர் தரு மங்களையுஞ் சிருஷ்டித்தார். பிரமசாரிக்கி:— வேதாத்தி யானம், பிரமசரியங், குருகிரகத்திலே வாசம், பிக்ஷைக் குச் சஞ்சரித்தல் முதலானதெல்லாஞ் சிருஷ்டித்தார். கிரகஸ்தனுக்கு:— விவாகம், பிள்ளைகளை யுண்டாக்குதல், அதிதி பூசை, தேவதைகள், பிதிர்க்க ளிவர்களுக்குத்

திருப்தி பண்ணுதல், ஓமம் பண்ணுதல், அக்கினிஹோத்திராதிக ளிவைகளெல்லா மவனுடைய தருமமாகச் சிருஷ்டித்தார். வானப் பிரஸ்தனுக்கு:—வனவாசம், காய், கிழங்குமுதலானது பக்ஷிக்கிறது, திரிகாலஸ்நானம், சடைதரிக்கிறது, பிரமசரிய மோதுதல் முதலானதெல்லா மவனுடைய தருமமாச்சிருஷ்டித்தார். ஸ்திரீயோடுகூடிய வானப்பிரஸ்தாள்:—ஸ்திரீ இல்லாதவானப்பிரஸ்தா ளிரண்டுவிதம். சந்நியாசிகளுக்குச் சகல தருமங்களையும் விட்டுவிட,காஷாயந் தண்டங்களைத் தரிக்க, வேதாந்தத்தினாலே பிரமவிசாரம்பண்ண, பிக்ஷாசனம், பிரமசரியம், மடவாச மிதுமுதலான தெல்லாஞ் சந்நியாசிகள் தருமமாக சிருஷ்டித்தார்.

பிராமணனுக் கிந்த நாலாச்சிரமுஞ் சிருஷ்டித்தார். க்ஷத்திரியனுக்கு மூன்றாச்சிரமும், வைசியனுக் கிரண்டாச்சிரமமும், சூத்திரனுக் கோராச்சிரமு மிந்தப்படிசிருஷ்டித்தார். ஸ்திரீகளுக்கும், சூத்திராளுக்கும்; சிசுருடை தருமமாகச் சிருஷ்டித்தார். வேதசாஸ்திர புராணங்களையுஞ் சிருஷ்டித்தார். எக்கியம், தானம், தபசுகளையெல்லாஞ் சிருஷ்டித்தார். அவரவர்களுக்கவரவர் தருமத்திலேசிரத்தையை சிருஷ்டித்தார். அண்டசம், சுவேதசம், முற்பிச்சம், சராயுசம், மானசிக மிந்த வைந்துவகைப் பிராணிகளையுஞ் சிருஷ்டித்தார். அண்டசம் முட்டையிலே யுண்டான பக்ஷி சர்ப்பாதிகள். சுவேதசம் வேர்வையிலே யுண்டான கிருமி முதலானதுகள். உற்பிச்சம் விருக்ஷாதி பூண்டுகள். சராயுசம் பையிலே யுண்டான மனுஷாதிகள், தேவதைகள், ரிஷிகள், மானசாள். இந்தப்படிக்குச் சகலபிராணிகளையும், சகலபூதங்களையும், சிருஷ்டித்துத் தாந்தானே சகல பூதங்க ளிடங்களிலேயும் ஜீவரூபியாய்ப்பிரவேசித்தார். கிரகியானவன் கிர

கத்திலே பிரவேசித்தாற்போலவும், பக்ஷியானது கூட்டுக்குள்ளே பிரவேசித்தாற்போலவும், பிரவேசித்தார். தாந்தானே விசுவரூபியாய், அனந்தரூபியாயினார். பரமேசுரரானவர்:—மாயாவியானவன்மாயையினாலேயனந்தரூபங்களையெடுத்தாற் போலவும், வேஷதாரியானவ னனேகம் வேஷங்களை யெடுத்தாற்போலவும், அனந்த சத்திகளுடனே கூடியிருக்கிற பரமேசுரரானவ ரனந்தகோடி ரூபங்களையெடுத்து விளையாடிக்கொண்டிருக்கிறார்.

இந்த விசுவப்பிரபஞ்சத்துக்கு பரமேசுரன்றானே யாதாரம். சிருஷ்டிகர்த்தாவும், ரக்ஷிக்கிறகர்த்தாவும், சம்மாரகர்த்தாவும்; அப்பரமேஸ்வரன்றானே. சிருஷ்டிக்கப்படுகிற வஸ்துக்களு மவர்தாமே ரக்ஷிக்கப்படுகிற வஸ்துக்களும், அவர்தாமே. சங்கரிக்கப்படுகிற வஸ்துக்களும் அவர்தாமே. இந்தப்பிரபஞ்சத்துக் கவர்தாமே மாயையோடேகூடி ஈசுரராய் நிமித்தகாரணம், இந்தப்பிரபஞ்சத்துக்குப் பிரகிருதியோடேகூடிக் கூடஸ்தரா யுபாதானகாரணம். அவர்தாமே யவித்தையா வந்தக்கரணங்களோடேகூடி ஜீவனானார். சூரியன்றானே ஜலசூரியன்போலவும், சந்திரன்றானே ஜலசந்திரன்போலவும்,முகந்தானே கண்ணாடியிலேயும்,ஜலத்திலேயும், பிரதிமுகம்போலவும், வன்னிதானே பொறிபோலவும், மஹாகாசந்தானே கடாகாசம்போலவும், வாயுவுதானே பிராணன்போலவும், பிரமந்தானே:—மாயையோடேகூடி ஈசுரனாகவும், அவித்தையா வந்தக்கரணங்களோடேகூடி ஜீவனாக யிருந்துகொண்டு விளையாடுகிறார். மிருத்துத் தானே கடம்போலவும், தந்து தானே படம்போலவும், சுத்திதானே ரசிதம்போலவும். ரச்சுத்தானே சர்ப்பம்போலவும், சுவர்ணந்தானே ஆபரணம்போலவும், கானல்

தானே ஜலம்போலவும், சமுத்திரந்தானே தரங்கம்போல வும், கூடஸ்தப்பிரமந்தானே விசுவமயம். எதுவெது காணப் படுகிறதோ, எதுவெது கேட்கப்படுகிறதோ, அதுவெல்லாம் பிரமமயந்தானே. சரமசரமெல்லாம், பிரமமயந்தானே. ஸ்தூ லம், சூக்ஷுமம், வியத்தம், அவ்வியத்தம், மூர்த்தம், அமூர் த்தம், காரணம், காரியம், சாதனம், சாத்தியம், ஆகிய வெ ல்லாம் பிரமமயந்தானே. பிரமத்தைத்தவிர வேறேவஸ்து வில்லை. பிரபஞ்சத்திலே:— அஸ்தி பாதிப் பிரிய மூன்றும் பிரமரூபம். நாமரூப மிரண்டும் மாயாரூபம். அவ்வைந்து நாமங்களும், பிரமத்தினாலே கற்பிதம். குழந்தைகள் விளை யாடுகிறதுபோலவும், ராஜாக்கள் சொக்கட்டான் சதுர ங்கம் விளையாடுகிறதுபோலவும், கேளிக்கை கூத்துப்பார்க் கிறதுபோலவும், ஈசுரனுக்குப் பூதசிருஷ்டியெல்லாம் விளை யாட்டுத்தானே பிரயோஜனம். ஈசுரனுக்குப் பூதசிருஷ்டி ஜீவபோகார்த்தமென்று தார்க்கிகாள் சொல்லுவார்கள்.

சைவ வைஷ்ணுவாள் ஜீவனைக் குறித்துப் போகார்த் தம், ஈசுரனைக்குறித்து லீலார்த்தம், பூதசிருஷ்டியென்று அங்கிகரித்தார்கள். வேதாந்திக ளீசுரனுக்கு லீலார்த்தந் தானே பூதசிருஷ்டியென் றங்கிகரித்தார்கள். லோகவிய வகாரதிசையிலே; துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனர் ஈசுர ன்றானே. இதனாலே சமவின்மையுந் தயையின்மையு மில்லை. அவரவர் கருமானுசாரமாக நடப்பிப்பர். மாதாவானவள் சொன்னபடி கேட்டாற் சீராட்டுவாள், துஷ்டத்தனம்பண் ணினால் நிக்கிரகம் பண்ணுவாள். அப்படிப்போலவும்; பிதா வானவர் புத்திரானைச் சிக்ஷைபண்ணுவர்; சீராட்டுவர். அப் படிப்போலே பரமேசுரன் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபால னம் பண்ணுவர். அவரவர் கருமானுசாரங்களாகக் கருமபல

ன்களைக் கொடுப்பர். புண்ணியவான்களைச் சுவர்க்கத்திலே சுகிகளாகவும், பாவிகளை நரகத்திலே துக்கிகளாகவும், புண்ணியபாவ மிசிரராயிருக்கிறபேரை, மனுஷலோகத்திலே சுகதுக்கிகளாகப்பண்ணி நடப்பிப்பர். சாத்திகாளுக்குத் தேவலோகம், ராசதாளுக்கு மனுஷலோகம், தாமதாளுக்கு அதோகதி, இந்தப்படி பலத்தைக் கொடுப்பர். தாமதாளுக்கெஞ்சியிருக்கிற பாவத்துக்கு:— தாபர ஜன்மங்களையும், பசு பக்ஷி ஜன்மங்களையும், சண்டாளாதி ஜன்மங்களையும், கொடுத்துக் கருமானுசாரியாகச் சுகதுக்கபலன்களைக் கொடுப்பர். பரமேசுரனுக் கிதனாலே சமயின்மையுந் தயையின்மையுமில்லை. ஆனதால் அவரவர் கருமானுசாரமாக அவரவர்களுக்குப் பலங்களைக் கொடுப்பர். ஈசுரன்றானே அந்தரியாமியா யிருந்துகொண் டந்தந்தக் கருமானுசாரமாகப் பூருவகருமப்படிக்குத் திரும்பவுங் கருமங்களிலே பிரேரிப்பர். சாத்திகாளைச் சாத்திக கருமங்களிலேயும், ராசதாளை ராசத கருமங்களிலேயும், தாமதாளைத் தாமதகருமங்களிலேயும், இந்தப்படி பூருவகருமப்படிக்கிப் பிரேரிப்பர். மீமாம்ஸாள்:—ஈசுரனேயில்லை கருமமே பலதாதாவென்று சொல்லுவார்கள். அந்தப்படி சாங்கியாளும்:—ஈசுரனில்லையென்று சொல்லுவார்கள். அதுகூடாது; முன்சொன்ன தருமமுடைய அப்பரமேசுரனைத்; தன்னுடைய தருமத்தினாலே பூசித்து, எக்கிய தான தபசுகளினாலே பூசித்து, நித்திய நைமித்திய கருமங்களினாலே பூசித்துப், பூசாதோத்திராதிகளினாலே யவரை பிரீதிபண்ணிவித்து, அவைகளாலவர் சந்துஷ்டரானால்; சகலகாமியங்களையுமடைவன். தருமார்த்தகாமபலன்களற்பபலன்கள். மோக்ஷந்தானே மஹாபலம். ஆனபடியினாலே மஹாபலமோக்ஷம் வேண்டுமென்று சுய

மே பரமேசுரனைப் பிரார்த்திக்கவேண்டும். அவாந்திர பலன்களா யிருக்கிற தருமார்த்தகாமங்கள் தானேசித்திக்கும்.

அஃதெப்படியானால்? பழம்வேண்டுமென்று மாமரம்,வாழைமரம்,பலாமரம்,இவைகளை வைத்துப்பயிராக்கினால்;காயிலைபுஷ்ப மவாந்திரமாகச் சித்திக்கிறதுபோலவும், கங்காஸ்நான முக்கியபலத்துக்குப் போகிறவனுக் கிதர நதிகளுடைய ஸ்நானங்களெல்லா மவாந்திரமாகச் சித்திக்கிறது போலவும், அற்ப பலமாயிருக்கிற தர்மார்த்தகாமங்கள் முக்கியமாயிருக்கிற முக்திபலத்தை யிச்சிக்கிறவனுக் கவாந்திரபலமாகச் சித்திக்கும். பிரமஞானமாகிற தேன்பாகைப் புசித்தால்; அவித்தையாரோகம்போய் முக்தியாகிற புஷ்டியையடைவன். ஈசுரனுக்கு மாயையுண்டோ வில்லையோவென்றுவர:—தார்க்கிகா ளீசுரன் அரூபி, மாயாரகிதனென்று சொல்லுவார்கள். சிலபேர்வேதாந்திக ளீசுரனுக்கு அனந்த சத்திகளுண்டென்று சொல்லுவார்கள். சிலபேர் மாயையென்றும், பிரகிருதியென்றும், இரண்டு சத்திகளுண்டென்று சொல்லுவார்கள். சிலபேர் மாயையென்றும், பிரகிருதியென்றும், இரண்டு மொன்றுதானே; ஆனபடியாற் பரமேசுரனுக் கொரேசத்தியென்றுஞ் சொல்லுவார்கள். அப்படிக்கொத்த பரமேசுரர்:—தாமே காமதேனு, கற்பகவிருக்ஷம், சிந்தாமணிபோலே யிஷ்டவஸ்துக்களைக்கொடுப்பார். அவரை மஹாபலமாயிருக்கிற முக்தியைத்தானே கொடுக்கச்சொல்லிப் பிரார்த்தித்தாற் கேட்டவரங்களைக் கொடுப்பார்.விடயங்களிலே சுகமில்லை.சவுக்கிய போசனங்களிலேயும்,ஜலபானங்களிலேயும்,கந்தகஸ்தூரிசுகந்தாதி திரவியந்தரிக்கிறதிலேயும், ஸ்திரீபோகாதிகளிலேயும்; ஆகியவிவை

களிலேசுகசவுக்கியமில்லை. இவைகளின்சுகம்பிராந்திதானே. இவைகளெல்லாம் வியாதிகளுக் குபசமனந்தானே. பசிரோகத்துக் கன்னம், தாகரோகத்துக்கு ஜலபானம், காமரோகத்துக்கு ஸ்திரீபோகம், உபசமனம். அற்பவிஷயபோகங்களிலே சுகமில்லை. வழிநடந்தவனுக்கு:—மிதிக்கிறது, குத்துகிறது, பிடிக்கிறது, இவைகளெல்லாம் சுகமாய்த் தோற்றுகின்றதுபோலே; விஷயங்களிலே சுகமில்லை. வியாதிக் குபசமனந்தானே சுகம்போலே தோற்றுகிறது. விஷயசம்பாதனமுந் துக்கம். ரக்ஷிக்கிறதுந் துக்கம். நாசமுந் துக்கந்தானே. ஸ்திரீபாலராதி சமுசார சம்பாதனமுந் துக்கம். ரக்ஷிக்கிறதுந் துக்கம். நாசமுந் துக்கந்தானே. ஆனதால்? விஷயபோகங்களெல்லாந் துக்கந்தானே: பிராந்திதானே. பிரமந்தானே சுகம். பிரமந்தானே சவுக்கியம். பிரமசாயுச்சியந்தானே முக்தி. அந்தமுக்தி ஞானத்தினாலே யடையத்தக்கது. ஞானம்:—வேதாந்த சிரவணத்தினாலேயும் குருகடாக்ஷத்தினாலேயும், வரத்தக்கது. தேகேந்திரியாதிகளெல்லா நாமல்ல; நமக்கு ஜீவத்துவங் கற்பிதந்தானே. நாந்தானே பரப்பிரமமென்கிற நிச்சயமே மோக்ஷசாதனம். அந்தவறிவே மோக்ஷம். ஞானிகளா யிருக்கிறபேர்களுக்கு:— எதுவெது காணப்படுகிறதோ, எதுவெது கேட்கப்படுகிறதோ, எதுவெது சொல்லப்படுகிறதோ, ஆகிய சகலமும் பிரமமயந்தானே யென்று நிஷ்டை. நெல்லிக்காயைத்தின்று ஜலமாதுரியத்தை யறிகிறதுபோலே:—வேதாந்தசிரவணத்தினாலேயும், குருவுபதேசத்தினாலேயும், பிரமத்தைக் கேட்டறிந்து பிரமசவுக்கியத்தை யநுபவிக்கவேண்டும்.

ஏழாவது விசுவசிருஷ்டிப்பிரகரண முற்றிற்று.

---

# எட்டாவது. அதிகாரிப்பிரகரணம்.

---:o:---

## அதிகாரிப்பிரகரணஞ் சொல்லுகிறோம்.

புண்ணியபாவங்களிலே மனுஷன்றானே யதிகாரி. சுவர்க்கத்திலேயும், நரகத்திலேயும், மனுஷன்றானேயதிகாரி. ஞானத்திலேயும், மோக்ஷத்திலேயும், மனுஷன்றானே யதிகாரி. சாங்கியயோகங்களிலேயும் மனுஷன்றானே யதிகாரி. பசுபக்ஷிமிருகாதிக்கெல்லாம்புண்ணியபாவங்களைச்சொல்லவுந்தெரியாது, கேட்கவுந்தெரியாது; சுவர்க்க நரகங்களிலேயு மதிகாரமில்லை. வேதசாஸ்திர புராணங்களிலேயும், எக்கியந் தானந் தபசுகளிலேயும், அதிகாரமில்லை. நித்திய நைமித்திய கருமங்களிலேயு மதிகாரமில்லை. பசு பக்ஷி மிருகாதிகளுக்கு:—இங்கேதானே யடிக்கடி பிறக்கவுஞ் சாகவு மதிகாரம். பரலோகத்திலே கமனு கமனமு மில்லை. தேவதைகளுக்கும், ரிஷிகளுக்கும், ஞானதிகார முண்டென்று பெரியவாள் சொல்லுவார்கள். ஜனகாதிகளெல்லாரும் ஞானயோகிகள். இந்திராதி தேவதைகளெல்லாரும் ஞானகரும யோகிகள். வியாசவசிட்டாதிக ளெல்லாருஞ் சித்தகருமயோகிகள். மனுஷாள் கருமயோகிகள். ஞானத்திலேயும், கருமத்திலேயும், சுவர்க்கத்திலேயும், மோக்ஷத்திலேயும், மனுஷன்றானே யதிகாரி. இந்தப் பரதபூமிதானே; கருமபூமி. இதரபூமிகளெல்லாம் போக பூமிகள். மனுஷனுக்குத்தானே; சொல்லுகிறதற்கும், கேட்கிறதற்குந் தெரியு மதிகாரமுண்டு. நல்ல கண்ணாடியிலேயும், தெளிந்த ஜலத்திலேயும், முகத்தைப்பார்த்தால் முகம் நன்றாய்த் தெரிகிறதுபோல, மனுஷனுக்குப் பிரமக்ஞானம் நன்றாய்த்

தெரியவரு மதிகாரமுண்டு. சந்திரமண்டலத்திலேயும்,பிதிர் லோகத்திலேயும், பிரமவிசாரத்துக்குக் கூடினற் சொப்ப னக்ஞானம்போலே போய்விடும். நரகத்திலே துக்கபா குள்ளியத்தினலே; கேட்கவுந்தெரியாது, சொல்லவுந்தெரி யாது. சுவர்க்கத்திலே கூத்தும், பாட்டும், சங்கீதமு மதிக மானபடியினலே; அலையெறிகிற ஜலத்திலே நிழற்பார்த்தா ப்போலே சித்தமலைந்துபோய்விடும். வேதாந்தசிரவணத்தி னலே:—அறிவிலே புத்திவாராது. நிழலுக்கும், வெய்யிலுக் கும், பேதந்தெரிகிறதுபோலப் பிரமலோகத்திலே நன்ருக அறிவுதெரியும். சொல்லுகிறதற்குங் கேட்கிறதற்கு மதிகார முண்டு. பிரமலோகத்திலே போகிறதாற்கதிகாரமானல்? மனுஷலோகத்திலேதானே மனுஷனக விருக்கிறவன் பிர மவிசாரம் பண்ணிப் பிரமவுபாசனை பண்ணிப் பிரமவுபாசக னக விருந்தா லவனுக்குப் பிரமலோகத்திலே போகிறதற் கதிகாரமானபடியினலே; ஞானதிகார வுபாசனையிலே யதி காரம் மனுஷனுக்குத்தானே. அப்படிப்பட்ட பிரமக்ஞா னம் வேதாந்த சிரவணத்தினலேயும், குருகடாக்ஷத்தின லேயும், வரவேண்டும்.வேதாந்த சிரவணத்தினலே மனுஷ னதிகாரியென்று சிலபேர் சொல்லுவார்கள். சிலபேர் பிர ம,க்ஷத்திரிய, வைசியா ளதிகாரியென்று சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் பிராமண ளதிகாரியென்று சொல்லு வார்கள். சிலபேர் பெரியவாள் சந்நியாசி யதிகாரியென்று சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் ஸ்திரீ சூத்திராளு க்கு ஞானதிகாரமுண்டு முக்தியுமுண்டென்று சொல்லு வார்கள். ஸ்திரீ சூத்திராளுக்குப் புராணதிகளினலேயும், ஸ்மிருதிகளினலேயும், ஞானசம்பாதனமென்று சொல்லு வார்கள். சிலபேர் பெரியவாள் சாதனசதுஷ்டய சம்பன்ன

னாக விருக்கிறவ னதிகாரியென்று பாஷியவிருதயம். ஆயிரம்பேரிலே யொருத்தன் சிரவணம்பண்ணுவன். இப்படிச் சிரவணம் பண்ணுகிறபேரிலே யாயிரத்திலே யொருத்தனறிந்துகொள்ளுவன். இப்படி யாயிரத்திலே யொருத்தன் மனனம்பண்ணுவன். இப்படி யாயிரத்திலே யொருவன் அநுபவ சம்பன்னனாக விருப்பன். ஆசாரிய ராயிரத்திலே யொருவர் கிடையாது. சிரவணம்பண்ணி ஞானம்வந்து கைவல்லியத்தை யடையவேண்டும். மனுஷ ஜன்மமெடுத் தாத்மாவை யறியாமற்போனா லவன் மனுஷ ஜன்மம் போனபிறகு கருமபரம்பரையும், ஜன்மபரம்பரையுந்தானே யடைவன். மனுஷஜன்மத்திலே ஞானமில்லாதேபோனால்; அநித்திய லோகத்தைத்தானே யடைவன். மனுஷ ஜன்மமெடுத்து ஞானமன்றியிலே போனா லவன் பசுவென்றுசொல்லப்படும். வெகுஜன்மங்களெடுத்து,வெகுபிரயாசப்பட்டுப்,புண்ணியவசத்தினாலேயும், தெய்வயோகத்தினாலேயும், மனுஷஜன்மத்தை யடைந்து ஞானஞ் சம்பாதித்தால்; பிரயாசஸாபல்லியம். ஜன்மஸாபல்லியம். அல்லவென்றால்? நஷ்டந்தானே. அஃதெப்படிப் போலவென்றால்? ஒவ்வொரு பணமா யொவ்வொரு காசாய், வெகுபணஞ் சம்பாதித்தவனுக்குச் சற்பாத்திரங்களிலே கொடுத்துத் தானும் புசித்தாற் ஸபலம். அல்லவென்றால்? நஷ்டந்தானே. மனுஷஜன்மத்தையெடுத்தும்; ஞானஞ் சம்பாதியாமற்போனாலவன்றான், குருடு, செவுடு, ஊமையென்று சொல்லுவார்கள். மனுஷஜன்மமெடுத்து அஞ்ஞானியா யிருந்தானானா லவன்றான் தன்னைக் கொன்றவன். அவன்றா னாத்மசோரன். மனுஷஜன்மமெடுத் ததனால் முக்தியெப்படி; பந்தமெப்படி வந்தது? நாமெங்கேயிருந்து வந்தோமென்று விசாரிக்கவே

ண்டும். இப்படி விசாரித்தா லதுவே, தவசென்று சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் திரவியத்தைச் சற்பாத்திரங்களிலே கொடுக்கிற தானத்தைத் தவசென்று சொல்லுவார்கள். சிலபேர் நியமத்தைத்தானே தவமென்று சொல்லுவார்கள். சிலபே ருபவாசத்தைத்தானே தவமென்று சொல்லுவார்கள். சிலபேர் பிரமவிசாரத்தைத்தானே தவமென்று சொல்லுவார்கள். இந்தச்சமுசாரம் மஹாவிசித்திரம். ஸ்திரீயார், புத்திரனார், தம்பியார், தமையனார், தகப்பனார், தாயாரார், தானார், தானெங்கேயிருந்து வந்தோமென்று விசாரித்துப் பார்த்தாலொன்றுமில்லை. கூடவந்தபேருமில்லை. கூட வருகிறபேருமில்லை. மாயாமோகத்தையென்னவென்று சொல்லப்போகிறோம். சந்தைக் கூட்டம் போலேயும், பொழுதுவிழுகிறநேரம் நானாதேசத்துப் பக்ஷிகளெல்லா மொருவிருக்ஷத்திலே கூட்டங்கூடியிருந் துதையமானவேளையிலே யந்தவிருக்ஷத்தைவிட்டுக் கருமவசத்தினாலேதங்களுடைய விச்சையினாலே போய்விடுகிற பக்ஷிகள் போலேயும், ஒருகிரகத்திலே:— தாய்தகப்பன், அண்ணன் தம்பி, பெண்சாதிபிள்ளை யென்று ரொணானுபந்தப்படியே கூடியிருக்கிறார்கள். ரொணம்க்ஷயமானா லிந்தச்சமுசாரமெல்லாமெங்கேயோ மறைந்து போய்விடுகின்றன. வழிநடக்கிறபே ரிரண்டுபேர்கூடிச் சிறிதுதூர மொன்றாகப் போவார்க ளப்பா லிடையிலே பிரிந்துபோவார்கள். பிரவாகத்திலே யிரண்டுகாட்டங்க ளொன்றாய்க்கூடிவந்து திரும்பப் பிரிந்துபோம். அதுபோலே புத்திரமித்திராதிசமுசாரக்கூட்டுறவும், பிரிச்சலும், இப்படியாகவே யிருக்கும். எதெதுபிறந்துதோணுகிறதோ அதுவெல்லாமிறந்துபோகிறதுதானே. நிலவாஞ்சை யோகமெல்லாம் பிரிச்சிலோடேகூடினதென்

கிறது நிலவரம். உயர்ந்ததெல்லாந் தாழும். நீர்க்குமிழி போலே:—இந்தச்சரீரம். மாதாபிதாக்களுடைய சுக்கிலசுரோணிதத்தினாலேயுண்டானது. பிதாவினுடையவிந்துமாதாவினுடைய கெற்பகோளகையிலேவிழுந்து மாதாவினுடைய சுரோணிதத்துடனேகலந்து திரண் டுருவாயடைவிலேயுருப்பும், காலும், கையுமுண்டாய் ஜீவனாய் வெளியிலேவந்து சிசுவாய்க் கௌமாரம், வார்த்திகமென்றுவெகுவேசங்களோடேகூடிப் பார்க்கக், கேட்கச் சொல்லக் கொடுக்க, வாங்கப் போக, வரப், பக்ஷிக்கப், பானம் பண்ணிச் சிந்திக்கத், தியானம் பண்ண, இவைகளெல்லா மந்தவிந்துதானே நடப்பிக்கிறது. இதைப்பார்க்க விந்திரசால முண்டோ வில்லை. இன்னஞ் சொல்லுகிறோம்; இந்தத்தேகத்திலே:—முன்னூற்றறுபதெலும்பு, எழுபத்திராயிரம் நரம்பு, மூன்றரைக்கோடி ரோமம், ஆறுதொக்கு, சத்ததாது, துவக்கு, அஸ்தி, மாமிசம், உதிரம், மேதை, மச்சை, சனுயு, மூத்திரம், மலம், கிருமி, இவைகளுடைய கூட்டுறவும்; மலமூத்திரப்பை, பஞ்சபூதங்களுடைய சங்காதம். இந்தத் தேகமாவது? பொய். நாளைக்கிருக்குமென்று நிலவரமில்லாதது. ஈசுரனுடைய மாயையையொருத்தராலேயு மளவிடக்கூடாது. ஈசுரன் பொம்மையாட்டுகிற சூத்திரதாரிபோலே தேகவெந்திரத்தைப்பிராணனாகிற சூத்திரத்தினாலே மாயையாகிற திரைக்குள்ளே யிருந்துகொண்டு ஆட்டிவிக்கிறா ரிந்த மாயாமோகத்தை யென்னென்று சொல்லப் போகிறோம். வெகுவித பாவங்களினாலே எண்பத்துநாலுலக்ஷம் ஜன்மத்தையு மெடுத்துப் புண்ணியவசத்தினாலேயும், தெய்வாதீனத்தினாலேயும், உத்தம மனுஷஜன்மத்தை யடைந்து, அதிலேயும் புருஷஜன்மமாக வித்தியாவிவேகத்துடனே கூடியிருந்தாலும்; பிரம

விசாரம்பண்ணி யாத்மஞானஞ் சம்பாதியாமல்: வித்தியா கெறுவம், ஐசொரியகெறுவம், நல்லகுலம், நல்ல சவுந்திரிய மென்கிற கெறுவபருவதத்தி லேறிச் சமுசாரமாகிற குழியிலே; குருடனானவன் கிணத்திலே விழுந்தாற்போலே விழுகிறான். சிலபேர் மூடாள்; பாவமாகிற கல்லோடத்தி லேறி நரகக்குழியிலே விழுந்து போகிறார்கள். சிலபேர் கருமமாகிய வோட்டைத்தோணியிலேறி நடுவாந்திரத்திலே சமுசாரசமுத்திரத்திலே மூழ்கிப்போகிறார்கள்.

சிலபேர்பெரியவாள் ஞானமாகிற நல்லவோடத்திலேறி யாயாசமில்லாமற் சமுசாரமாகிய சமுத்திரத்தைக் கடந்து அக்கரையாகியமுக்திபதத்தை யடைவார்கள். ஆற்றுமணலை யெண்ணினாலுமெண்ணலாம், ஆகாசத்திலேயிருக்கிற நட்சத்திரங்களையெண்ணினாலு மெண்ணலாம், சமுத்திரஜலத்தை யளந்தாலுமளக்கலாம், ஜீவனெடுத்த ஜன்மங்களை யெண்ணக் கூடாது. சம்பாதித்தபண்டபதார்த்தங்களெல்லாங்கிரகத்திலேதானேயிருக்கும். பந்துஜனங்களெல்லாம் மயானபரியந்தம் வருவார்கள். அப்பாற் றானேகாங்கியாய்ப் போவன். செய்த புண்ணியபாவங் கூடவருமிதுவே நிச்சயம். அசனார்க்குக் கையிலே பலகாரம், கட்டமுதுகொண்டுபோகிறவன் சுகமேபோவான். சும்மாவே போகிறவன் பசிதாகங்களுடனே யுலைந்துபோவா னெப்படிப்போல; மனுஷலோகத்திலே தானே யன்னதானம், ஜலதானம், பலதானம், இவைமுதலான தானங்களைக் கொடுத்திருக்கிறவனுக்குப் பரலோகத்திலேயும், இவைகளெல்லா மாகாரமாக வந்து லபிக்கும். இங்கேதானே கொடுத்திருக்க வேண்டும். கொடாதே யிருந்தவனுக்கு யிந்தலோகத்திலேயு மொன்றும் லபியாது. அந்தப் பரலோகத்திலேயு மொன்றும் லபியாது. ஆனபடி

யினாலே யுண்டாயிருக்கிறவ னிராவும், பகலும், கொடுக்க வேண்டும். இவ னிருக்கிறபோதுங் கூடவேயிருந்துவிருப் பன். எழுந்திருந்தாலும்,படுத்தாலும்,அசலூருக்குப்போனா லும், புசித்தாலும், ஒருத்தனுடனே வார்த்தை சொன்னாலு ம், மிருத்துவானவன் பிரியாமலிருப்பன். இதுவன்றியிலே யென்னேரமும் பிடரியிலே யிருந்துகொண் டெப்போ சம யமென்று பார்த்துக்கொண்டிருப்பன்.

சமயம் வந்தமட்டிலே பாம்பு தவளையைப் பிடித்தாற் போலக் கொண்டுபோவன். ஆனதால்? தனக்கு நன்மை தா ன்றானே சீக்கிரஞ் சம்பாதித்துக்கொள்ளவேண்டும்.சமுசா ரம் துக்கபாகுள்ளியந்தானே. செல்வம்:—சம்பாதித்தலுந் துக்கம். ரக்ஷணையுந் துக்கம். நாசமுந் துக்கம்.அன்றியிற்று பத்திரயங்களுடனே கூடினது. அடிக்கடி மரிக்கிறது மடிக் கடிஜனிக்கிறது மடிக்கடி மாதாவினுடைய கெற்கோளகை யிலேவந்திருக்கிறதுமேசமுசாரம். ஆதியாத்மீகம்; சுராதிக ள். ஆதிபவுதிகம்;சுவர்க்காதிகள். ஆதிதெய்வீகம்;பெருமழை பெருங்காற்று, இடி, இவைமுதலான வுபத்திரமான துக்கங் களோடே கூடியிருக்கும். சமுசார சமுத்திர மித்தன்மைத் தா மாகையாலிவை துக்கமயமாகத்தானே யிருக்கும். சுகம் லேசமுமில்லை. விடயங்களெல்லாந் துக்கந்தானே.பிரமமே சுகம். விடய சுகாபாசங்களைத் தூரத்திலே விட்டுப்போ ட்டுப் பிரமசுகத்தைத் தேடவேண்டும். பிரமசுகத்திலே ஞானஞ் சாதனம். ஞானத்திலே வேதாந்தசிரவணஞ் சாத னம். வேதாந்தசிரவணத்திலே மனுஷன்றானே யதிகாரி யென்று வேதாந்தங்களெல்லாமுறையிடுகின்றன. இராவும், பகலும், வேதாந்த சிரவணம்பண்ணவேண்டும். அதினாலே

யாத்மா வறியப்படுவார். ஆத்மாவை யறிந்தாற் பிரமசாயுச் சிய முக்தியென்று வேதாந்தங்கள் கோஷிக்கின்றன.

எட்டாவது அதிகாரிப்பிரகரணம் முற்றிற்று.

---

## ஒன்பதாவது. ஸ்தானப்பிரகரணம்.

---

ஸ்தானப்பிரகரணஞ் சொல்லுகிறோம்.

பிராமணனாய்ச் சுதருமசீலனாய்க் கிரகஸ்தனாக யிருக்கிறவனுக்குத் தசப்பிரமாக்களுடைய லோகம். வானப்பிரஸ்தனாய்ச் சுதருமத்தோடே கூடியிருக்கிற பேருக்குச் சத்தரிஷிகள் லோகம். நைஷ்டிகப் பிரமசாரிகளுக்கும், சந்நியாசிகளுக்கும், பிரமலோகம். ஞானிகளாய் வேதாந்திகளாயிருக்கிறபேர்களுக்கு மோக்ஷம். எக்கிய சீலாளாயிருக்கிற பேர்களுக்கும், க்ஷத்திரியாளாய்ச் சுதருமசீலாளாயிருக்கிற பேருக்கும், இந்திரஸ்தானம். விஷ்ணுபக்தாளுக்குவிஷ்ணு லோகம். சிவபக்தாளுக்கு சிவலோகம். தபசிகளா யிருக்கிறபேருக்குத் தபோலோகம். எக்கியசீலாளா யிருக்கிறபேருக்குத் தவலோகம். சூரியவுபாசகாளாயிருக்கிறபேருக்கு ஆதித்தலோகம். வைசியாளாய்ச் சுதருமசீலாளாயிருக்கிற பேருக்குத் தேவலோகம். சூத்திராளாய்ச் சுதருமசீலாளா யிருக்கிறபேருக்கு கந்தருவ சுவர்க்கலோகம். அந்த அந்த வர்ணஸ்திரீகளாய்ச் சுதரும சீலிகளா யிருக்கிறபேருக்கு அவரவர் பத்தாவினுடைய லோகம். புண்ணிய சீலாளாயிருக்கிறபேருக்குத் தேவலோகமென்று பொதுவசனம். எக்கியதான, தபசீலாளாய்ப் புண்ணியசீலாளாய்ச் சுவர்க்காமிகளாக விருக்கிறபேர்கள் தக்ஷிணாயனத்திலே யிறந்து அவா

வர்கள் செய்த யாகமார்க்கத்தினாலே சந்திரமண்டலத்தைப் பேதித்துக்கொண்டு சுவர்க்கத்தை யடைந்து சுவர்க்கபோகங்களை யநுபவித்துத் திரும்ப மனுஷலோகத்திலே வருவார்கள். பிரமவுபாசனையே கூடியிருக்கிற பேர்களுத்தராயணத்திலே யிறந்து வுபாசனை மார்க்கத்தினாலே பிரமலோகத்தை யடைவார்கள். அவர்களுக்குப் புனராவிர்த்தியில்லை. மனுஷலோகத்திலே திரும்ப வருதலுமில்லை.

ஒன்பதாவது ஸ்தானப்பிரகரண முற்றிற்று.

---

## பத்தாவது. விதேகமுக்திப்பிரகரணம்.

:o:

பூரணக்ஞானிகளாய் நிஸ்காமாளாய்ப் பூரணப்பிரமமாக விருக்கிற பேருக்கு இவ்விடத்திலே தானேமுக்தி. அவர்களுக்குப் பிராணன் போய்க் கருமவசத்தினாலே இன்னொரு தேகமெடுக்கிறதில்லை. லோகாந்திரங்களிலே போக்குவரத்துமில்லை. பூரணப்பிரமமாகத்தானேயிருப்பார்கள். பிராரத்தங்களைப் புசித்துத் தேகேந்திரியாதிகள் நஷ்டமாய்ப் போனபிறகு; வாயு வாயுவோடே கூடினாற்போலவும், ஜோதி ஜோதியுடனே கூடினாற்போலவும், ஜலஞ் ஜலத்துடனே கூடினாற்போலவும், ஆகாயம் ஆகாயத்துடனே கூடினாற்போலவும், கங்காநதிகளெல்லாஞ் சமுத்திரத்துடனே கூடினாற்போலவும், கல்லாற்றிலேபோய்க் கூடினதெல்லாஞ் சிலையாய்ப் போனாற்போலவும், ஞானியினுடைய வாத்மாப் பிரமசாயுச்சியத்தை யடைந்து ஞானி பூரணாகாயம்போலே பூரணப் பிரமமாகத்தானே யிருப்பன்: சின்மாத்திர மாகத்தானே யிருப்பன். சிலபேர் பெரிய

வர்ள் ஈசுரசாயுச்சியத்தை யடைந்து ஈசுரனாகத்தானே யிருப்பனென்று சொல்லுவார்கள். இது விதேக கைவல்லிய முக்தி. சைவவைஷ்ணுவா ளீசுரனுக் கவித்தையில்லைச் ஜீவனுக் கவித்தையுண்டு, பிரமவுபாசனையினாலே ஜீவனுக் கவித்தைநீங்கும். அவித்தைநீங்கினா லீசுரன்போலே யிருப் பன். இது சாமீபமுக்தியென் றங்கீகரித்தார்கள்.

பத்தாவது விதேகமுக்திப்பிரகரணம்

முற்றிற்று.

---

## பதினோராவது. ஜீவன்முக்திப்பிரகரணம்.

:o:

ஜீவன்முக்திப்பிரகரணஞ் சொல்லுகிறோம்.

பிராணனிருக்கச்சேதானே; பிரமவித்தையினாலே யவி த்தையிலே நின்றும், விடுபட்டது ஜீவன் முக்தியென்று சொல்லுவார்கள். ஞானியினுடைய ஜீவனை ஜீவன்முக்தி யென்று சொல்லுவார்கள். ஞானியாயிருக்கிறவனை ஜீவன் முக்தனென்று சொல்லுவார்கள். சகல ஜீவாத்மாக்களுக் குள்ளே மனுஷன் சிரேஷ்டன், மனுஷாளுக்குள்ளே பிராம ணன் சிரேஷ்டன். பிராமணாளுக்குள்ளே வித்துவாமிஷன் சிரேஷ்டன். வித்துவாமிஷாளுக்குள்ளே கருமகருத்தாவா யிருக்கிறவன் சிரேஷ்டன். கரும கருத்தாக்களுக்குள்ளே தவசி சிரேஷ்டன். தவசிகளுக்குள்ளேயோகி சிரேஷ்டன். யோகிகளைக்காட்டிலும் ஞானி சர்வசிரேஷ்டன். ஞானியா யிருக்கிறவனெந்தவமிஷத்திலே, எந்தகுலத்திலே ஜனிக்கி றானோ; அந்தக்குல வமிஷமெல்லாங் கரையேறுமென்று சொல்லிச் சகலவேதாந்த சம்மதம், ஞானியா யிருக்கிறவ

னெந்தத்தேசத்திலே, எந்தக்கிராமத்திலே யிருக்கிறானோ; அவடமெல்லாங், காசி, குருக்ஷேத்திரமென்று சொல்லு வார்கள். ஞானியாக விருக்கிறவனைப் பாவிகள்கண்டா லுட னே புனிதாளாவார்கள். சிலாமயமாய்த்தாம்பிரமயமா யிரு க்கிறதேவதைகள், கங்காதி தீர்த்தங்கள், பாவியாக விருக் கிறவனைச் சிலகாலத்துக்குப் பிறகு புனிதனாகப் பண்ணும். ஞானிகளாக விருக்கிறபேர் பாவிகளைக்கண்டா லுடனே புனிதனாகப் பண்ணுவார்கள். ஞானியாய்ப் பெரியவாளா யிரு க்கிற மகாத்மாக்களைக்கண்டா லவர்களை; ஈசுரனைகப் பா வித் தீசுரனைகப் பூசிக்கவேண்டும். ஞானிக ளீசுர ரவதார மென்று மீசுர மூர்த்தியென்றுஞ் சாக்ஷாதீசுரன் றானேயெ ன்றும், வேதாந்தசம்மதம். ஞானியாயிருக்கிறபேர்கள் கை யிலே பிக்ஷாமாத்திரம், ஒருகாசாகிலு மொரு சங்குதீர்த்த மாகிலுங் கொடுத்தா லனந்தமேருவா யிருக்குமென்று பெ ரியவாள் சொல்லுவார்கள். ஞானியா யிருக்கிறவன் புசித் தால்; மூன்றுலோகமும் புசித்ததாகவிருக்கும். ஞானியா யி ருக்கிறவன் திருப்தியடைந்தாற் சகலபிராணிகளுந் திருப்தி யடையும். ஞானியாயிருக்கிறவன் சந்துஷ்டனானாற் சகல லோகமுஞ் சந்துஷ்டியாகுமென்று சகலவேதாந்தமும், மனுவாதிசுருதிகளும்,சொல்லுகின்றன. ஞானிகளாயிருக்கி றபேருக்குப்பிராரத்தகருமங்கள் நிகழ்கால வநுபவத்தினா லே நாசம். இலவம்பஞ்சிலே நெருப்புப்பற்றினாற் போல வும், காஷ்டங்களை சொற்பாக்கினி தகிக்கிறதுபோலவும், சகல சஞ்சித கருமங்களும் ஞானக்கினியினாலே தகனமாய்ப் போம்.

ஞானிகளுக்கு; ஆகாமிய கரும சம்பந்தமில்லவேயில் லை. புளியம்பழமு மோடும்போலவும், தாமரையிலையுந்

தண்ணீரும் போலவும், பின்னைப்பூச்சியும் சேறும்போல வும், கருமத்துடக்குகள் ஞானிகளுக்குக் காட்டாது. ஞானி யாயிருக்கிறவனுக்குப் புண்ணியபாவ லக்ஷணமாயிருக்கிற வாகாமிய கருமமெப்படிப்போமென்றால்? ஞானியாயிருக் கிறவனுக்கு; மித்துருவென்றுஞ் சத்துருவென்றுமிரண்டு புத்திராளுண் டிவர்களிற் சிசுருஷை முதலானது செய்து மித்துரு புண்ணியத்தைக் கொள்வன். தூஷிக்கிறதுமுதலா னவை செய்து சத்துரு பாவத்தைக் கொள்வன். ஞானியா யிருக்கிறவனுடைய கருமத்தினாலே சித்தியாகிற பரப் பிரம சாயுச்சியத்தையடைவன். தேகேந்திரியாதிகளெல்லா ம் நாமல்ல: தேகேந்திரியாதிக்கிச் சாக்ஷியாய்ப் போதமய னயிருக்கிற தானே பரமாத்மாவென்றும், எதெது காணப் படுகிறதோ; எதெதுகேட்கப்படுகிறதோ; அவைகளெல்லாம் பிரமமயந்தானே யென்கிற நிஷ்டையுமுள்ளவனே ஞானி. சிலபேர் சூரியன்றானே சமஸ்த தேவதாசொரூபி, சிலபே ரக்கினிதானே சமஸ்த தேவதாசொரூபி, சிலபேர் பிராம ணன்தானே சமஸ்த தேவதாசொரூபி, சிலவேதங்கள் அப் புத்தானே சமஸ்த தேவதாசொரூபி, சிலவேதங்க ளிருதய ந்தானே சகலசொரூபி, இருதயத்திலேதானே வீசுரரிருக் கிறாரென்று சொல்லுகின்றன. சகல வேதங்களும், எல்லாம் பிரமந்தானேயென்று கோஷிக்கின்றன. சிலமூடாளாயிருக் கிறபேர்கோயில்களிலேயும், குளங்களிலேயும், சிலாதி தாம் பிராதி விக்கிரகங்களிலேயும், ஈசுரரிருக்கிறாரென்று பார்ப் பார்கள். அவர்க ளத்தியந்த மூடாள்தானே. கிரகத்துக்குள் ளே புதைத்திருக்கிற நிதியை யறியாமலதின்மேலே சஞ்ச ரித்துக்கொண்டு தாரித்திர பிக்ஷகாளாயிருக்கிறபே ரெப்ப டியோ; அப்படிப்போலத் தேகத்துக்குள்ளே யிருதயத்தி

லாத்மாவாய்த்தானகவிருக்கிறபிரமானந்தநிதியையறியாம ல் வெகிர்முகாளாய்க் கோயில் முதலியவைகளிலே ஈசுரதி ருஷ்டியைப் பண்ணுகிறார்கள். அவர்களத்தியந்த மூடாள். கண்ணில்லாதவனுக்குச் சூரியன்றெரியாது கண்ணுள்ளவ னுக்குச் சூரியன்றெரியும். அப்படிப்போல வஞ்ஞானிக்காத் மப்பிரமந் தெரியாது. ஞானியாயிருக்கிறவனுக் காத்மப்பிர மம் விளங்கும்.

பரமேசுரரானவ ராதியிலே சகல லோகங்களிலேயும் ஞானிகளாகச் சிருஷ்டித்தார்விருத்தியில்லாமற் போயிற்று அப்பால் மிதுனமாகிய ஸ்திரீ புருஷாளையும், அவித்தையா மோகத்தையும், இந்திரியங்களையும் வெகிர்முகங்களாகச் சிருஷ்டித்தார். ஆனபடியினாலே; சகலலோகங்களும் வெகி ர்முகாளாக விஷய நாட்டமுடையவர்களாக வொன்று க்கொன்று சேர்க்கையாய்க்கூடி விருத்தியடைந் தந்தர்மு கத்தைவிட்டுச் சகல ஜனங்களும் விஷயநிஷ்டாளானார் கள். லக்ஷத்திலே யொருத்தன், கோடியிலே யொருத்தன், முமூக்ஷுவாயிருக்கிற ஞானி; வெகிர்முகமாகிற விஷய நிஷ்டையைவிட் டிந்திரியநிக்கிரகம்பண்ணி யந்தர்முகமாகிற பி ரமநிஷ்டையை யடைந்துமுக்தியடைவனென்று கடவல்லியு பநிடதத்திற் சொல்லியிருக்கிறது சிலபேர்மாதாவேமுந்தின தெய்வம், சிலபேர் பிதாவேமுந்தினதெய்வம், சிலபேர் யதிதி யேமுந்தினதெய்வமென்றுசொல்லுவார்கள். அதிலுமாசாரி யரே சமஸ்ததேவசொரூபியென்றுசகலவேதங்களுஞ்சொல் லுகின்றன. தைத்திரியவுபநிடதத்திலேயுஞ் சொல்லியிருக்கி றது. மாதாபிதாக்கள் ஜன்மத்தைக்கொடுப்பார்கள். அதிதி சு வர்க்கத்தைக்கொடுப்பன். ஆசாரியரானவ ரறிவைக்கொடுத் துச் சகல ஜன்ம கருமங்களையு மொழித்து மோக்ஷ சாம்பி

ராச்சியத்திலே பட்டாபிஷேகம் பண்ணிப் பிரமசாயுச்சிய த்தை யடையப்பண்ணுவர். ஆனபடியினாலே; ஆசாரியரே யதிகம். சமஸ்த்த தேவதா சொரூபி, திரிமூர்த்தி சொரூபி. குருப்பிரசாத்தினாலே; வேதாந்த சிரவணம்பண்ணித் தேகேந்திரியாதிக ளெல்லாமனாத்மா; நஸ்வரம், ஆனபடியினாலே; தேகேந்திரியாதி சாக்ஷியாய்ச் சின்மயனாக விருக்கிற தானே பரமாத்மாவென்று யாதொருத்த னறிகிறானோ வவனே ஞானியென்று ஞானிலக்ஷணஞ் சொல்லுவார்கள்.

யாதொருத்த னிகலோக பரலோக விஷய விச்சை யைத் தகித்துச் சமதமாதிகளுடனே கூட முமுக்ஷுவாய் வேதாந்த சிரவணத்தினாலே தேகேந்திரியாதிக ளெல்லா மனாத்மாவென்று தள்ளிப்போட்டுத் தேகேந்திரியாதி சாக்ஷி யாய்ச் சின்மாத்திரமாயிருக்குகிறதுதானே பரப்பிரமமென் று யாதொருத்த னறிகிறானோ வவனே பிரமவித்து. இப்படி யறிந்து பூரணப்பிரமமாக விருந்துகொண்டு தேகேந்திரி யாதிகளாத்மசன்னிதானத்தினாலேசகலகிருத்தியங்களையும் பண்ணுகிறது நாமொன்றும் பண்ணவில்லை நாமசங்கோதா னை சின்மாத்திரப் பிரமமயனென்கிறநிஷ்டையுடனே கூட லோகோபகாரார்த்தமாகத் தேகேந்திரியாதி திருஷ்டியி னாலே நித்திய, நைமித்திகமாகிய, சற்கருமங்களெல்லாம் பண்ணிக்கொண்டு ஞானசந்நியாசியா யிருக்கிறானோ வவ னே ஞானியென்று சொல்லுவார்கள். பகவான் வாக்கியம்:— யாதொரு மனுஷன் குருப்பிரசாதத்தினாலேயும், வேதாந்த சிரவணத்தினாலேயும், இந்திரிய சம்பந்தமாயிருக்கிற தேகம் நாமல்லக் கரணசாக்ஷியா யறிவுமயனா யிருக்கிறதுதா னே பரமாத்மாவென் றறிந்துகொண்டு கரணவிந்திரியங் களதானே சிற்சன்னிதானத்தினாலே சகல கருமங்களையும்

பண்ணுகிறது நாமொன்றும் பண்ணவில்லையென்று பூரண ப்பிரமமாக விருந்துகொண்டு மானமின்மை முதலிய ஞான குணங்களோடே கூடிக்கொண்டு லோகோபகாரார்த்தமாக வர்ணாச்சிரம தருமங்களை யிந்திரிய திருஷ்டியாய் இந்திரியங்கள்தானே பண்ணுகிறதென்று யாதொருத்த னாசரிக்கிறானோ வவனே ஞானி. யாதொருத்த னக்குரோதாதி ஞான குணங்களோடே கூடி வேதாந்த சிரவணத்தினாலே வாக்குமனோதேகங்கள் நாமல்லத் தற்சாக்ஷியாய்ப் பிரக்ஞானமயனா யிருக்கிறதுதானே பரமாத்மாவென் றறிகிறானோ வவனே பிரமவித்து. இப்படிப் பூரணசிதாகாசப் பிரமமா யிருந்துகொண்டு லோகோபகாரார்த்தமாக வாக்குமனோதேகங்கள் பண்ணுகிறது; நாம்பண்ண வில்லையென் றசங்கனா யிருந்துகொண்டு நித்திய,நைமித்திக,கருமங்களை, யாதொருத்த னாசரிக்கிறானோ;அவனே ஞானி: ஞானசந்நியாசியென்றுஞ் சொல்லப்படுவன். யாதொருத்தனுவன் தனயயாதி யட்டவித குணங்களுடனே கூடி வேதாந்த சிரவணத்தினாலேயும், குருப்பிரசாதத்தினாலேயும், தேகேந்திரியாதிகள், மனது, புத்தி, இவைகளெல்லாம்நாமல்ல: தேகேந்திரிய மனோபுத்திசாக்ஷியாய்ச்சிதாகாசனாயிருக்கிறதானே பரமாத்மாவென் றந்துகொண் டநுபவநிஷ்டையையடைந்து தேகேந்திரியங்களோடேகூடியிருக்கிற மனோபுத்திலக்ஷணமான வந்தக்கரணந்தானே சகலகிருத்தியங்களையு மாத்மசன்னிதானத்தினாலே பண்ணுகிறது; நாமொன்றும் பண்ணவில்லை யென்கிற வசங்காநுசந்தானத்துடனேகூடி லோகோபகாரார்த்தமாக வெக்கிய தான தபசுகளை யாசரிக்கிறவன்போலே யிருக்கிறானோ; அவனே சந்நியாசி. அவனே ஞானி. ஞானமில்லாமற் கருமத்தியாகியா யிருக்கிறவன்

சந்நியாசியு மல்ல, ஞானியுமல்ல, அவனுக்கு முக்தியுமில்லை. ஞானமில்லாமற் கருமத்தைப் பண்ணாதிருந்தாலும், கருமத்தைப்பண்ணிப் பலத்தை யிச்சித்தாலும், அவன் பந்தகமான சமுசாரத்தைத்தானே யடைவன். பூரணக்ஞானியாயிருந்துகொண்டு ஆயிரங்கருமசாலங்களை யாசரித்துக்கொண்டிருந்தாலு மவன் சந்நியாசிதானே. அவன் ஞானபலமாகிய பிரமசாயுச்சியத்தை யடைவன. ஞானமே சந்நியாசமென்று சகல வேதாந்தங்களுடைய சித்தாந்தம். யாதொருத்தன் லோகவாசனையும்விட்டு, சாஸ்திரவாசனையும்விட்டு, தேகவாசனையும் பரித்தியாகம் பண்ணி யந்தர்முகனாய்ப் பிரமநிஷ்டனாக விருக்கிறானோ; சமதமாதிகளுடனேகூடி யிருக்கிறானோ; அவனே ஞானி. யாதொருத்தன் வர்ணாச்சிரமதருமங்களுடனேயும், சமதமாதிகளுடனேயுங்கூடி, வேதாந்தக்ஞானசம்பன்னனாக வந்தர்முகனாய்ப் பிரமநிஷ்டனாக விருக்கிறானோ; அவனே ஞானி. யாதொருத்த னிகலோகவாசைகளையும் விட்டுப், பரலோக விஷயவாசைகளையும் விட்டு, வேதாந்தசிரவணத்தினாலே ஞானானுபநிஷ்டையுடனேயும், ஆத்மாவினிடத்திலே சந்தோஷத்துடனேயும், கூடியிருக்கிறானோ; அவனே ஞானி. யாதொருஞானியானவன் பிரமநிஷ்டையோடேகூடி துக்கங்கள் வந்தபோது துக்கமன்றியிலே; சுகங்கள் வந்தபோதுசுகமன்றியிலே; ஆசை, பயம், குரோத, லோப, மோகமில்லாதவனாகத் தானேபிரமமென்கிற நிச்சயத்தோடேகூடினவன் ஞானி. நல்லமனதோடேகூடினவன், மித்துரு, சத்துரு, வுதாசீனன், மத்தியஸ்தன், பந்து, துவேஷி, புண்ணியவான், பாவி, இவர்களை யெல்லாம் பிரமமென்று பார்க்கிறவன்ஞானி. வித்தைகளோடேகூடியிருக்கிற பிராமணன், பசு, யானை, சுவர்ணம், சுத்தி

ரன், மனுஷன், சண்டாளன், இவர்களை யெல்லாம் பிரமமென்று பார்க்கிறவன் ஞானி. பிரமநிஷ்டனாய், மோகசூனியனாய், நானே பிரமமென்றும், சகலமும் பிரமமென்றும், நிச்சயத்தோடேகூடிச், சுகம்வந்தாற் சந்தோஷமில்லாமற் றுக்கம் வந்தால் விசனமன்றியிலே யிருக்கிறவன் ஞானி. யாதொருத்தன் ஆத்மக்ஞானத்தோடே கூட ஆத்மானந்த சந்துஷ்டனா யந்தர்முகனாய்ப் பிரமநிஷ்டனாக விருக்கிறானோ; அவனே பிரமவித்து. யாதொருத்தன் சிரவணத்தினாலே யறிவுசம்பாதித்து மனனத்தினாலே சகல சமுசயமும் போய் அசங்கபாவனையினாலே சகல கரும்பந்தங்களும் போய்ச் சமதமாதிகளுடனேயும்; பிரமநிஷ்டையுடனேயுங் கூடி, யாதொருத்த னிருக்கிறானோ, அவனே ஞானி.

உபவாசங்களிருந்தால் விஷயங்களிலே பிரவிருத்தி போம். ஆசையொழியாது. பிரமத்தைக்கண்டாற்சகலவாசையுமொழியுமானபடியினாலே பிரமத்தையறிந்து சகலவாசைகளுமொழிந்து பிரமநிஷ்டையோடே யிருக்கிறானோ; அவனே ஞானி. ஆமையானது ஜனங்களைக்கண்டாற் றன்னவையவங்களையுள்ளே சுருக்கிக்கொள்ளுமோ; அப்படிப்போலே ஞானியானவன் விஷயங்களைக்கண்டா லிந்திரியங்களை யடக்கியந்தர்முகனாய்ப் பிரமநிஷ்டையோடே கூடியிருக்கிறானோ; அவனேஞானி. சகலகாமியங்களையும்விட் டாசையொழிந்து நானெனதென்கிற மோகமில்லாம லாத்மஞானியா யாதொருத்தன் சஞ்சரிக்கிறானோ; அவனேஞானி. சுயசனம் பரஜனமென்கிற பிராந்தி யில்லாமற் கனகங்களையு மோடுகளையுஞ் சமமாய்ப்பார்த்துச் சகல ஸ்திரீகளிடங்களிலேயும் மாதுருதிருஷ்டியோடேகூட வாத்மஞானியா யாதொரு

த்தனிருக்கிறானோ; அவனே ஞானி. ஆயிரம் ஸ்திரீபோகங்களு டனேயும், ஆயிரங்கருமங்களோடேயுங் கூடியிருந்தாலும்; நானென்கிற வகங்கார வாண்மையற்று: ஆத்மக்ஞானியா யறிவோடே யாதொருத்த னிருக்கிறானோ; அவனே ஞானி. கூடியுங் கூடாமலும், பண்ணியும் பண்ணாமலும், அறிந்து மறியாமலும், அநுபவித்து மநுபவியாமலுமிருந்துகொண்டு ஞானத்தோடேகூடி யாதொருத்த னிருக்கிறானோ; அவனே ஞானி. தேகேந்திரியாதிகளிலே நானென்கிற மோகமன்றி யிலேயும், அந்தக்கரண தருமமாகவிருக்கிற கிருத்தியங்க ளிலேயும், நான் கர்த்தாவென்கிற மோகமன்றியிலே பூரண மாயிருக்கிற வறிவோடேகூடி யாதொருத்தனிருக்கிறானோ; அவனே ஞானி. விசுவத்திலே கண்ணிருந்தாலுங் கண்ணில் லாதவனாய், காதிருந்தாலுங் காதுகேளாதவனாய், மனோ வாக்குகளிருந்தாலுமவைகளில்லாதவனாய்ப், பிரமநிஷ்டை யோடேகூடி யாதொருத்த னிருக்கிறானோ; அவனே ஞானி. லோகசாஸ்திரங்களைப் படித்து, லோகங்களைப் பார்த்து, கேட்டு, சிந்தித்து, அதினாலே முக்தனல்ல. யாதொரு வறிவு னாலேயும், நிஷ்டையினாலேயும், முக்தனாகிறானோ; அவனே ஞானி. யாதொருத்தனுடைய வறிவு கருமபந்தத்தின் பொ ருட்டாகவில்லையோ; யாதொருத்தனுடையவறிவு முக்தியின் பொருட்டாகிறதோ; அவனே பூரணமாயிருக்கிறவறிவுள்ள ஞானி. லோகமெல்லா மியாதொரு வஸ்துவைப் பார்க்கவி ல்லையோ; அந்தவஸ்துவை யாதொருத்த னறிகிறானோ; லோகவிஷய நிஷ்டையைத் தள்ளிப் பிரமநிஷ்டனா யா தொருத்த னிருக்கிறானோ; அவனே ஞானி. யாதொரு ஞான மன்றியிலே யிருக்கிறவன் சூத்திரனோ; யாதொரு ஞானத் தினாலே பிராமணனோ; அப்படிப்பட்ட வாத்மக்ஞான

முள்ளவனே ஞானியென்று சொல்லுவார்கள். யாதொரு ஞானியானவன் சூரியனைப்போலே சகலவிஷயத்திலேயு மிருக்கிற நெகிழ்ச்சியாதியைக் கிரகிக்கிறானே; வாயுவை ப்போலே யெங்குஞ்சஞ்சரிக்கிறானே; அக்கினியைப்போலே சர்வ பக்ஷணனாக விருக்கிறானே; ஆகாசம்போலே தானே யெங்கும் பூரணனாக விருக்கிறானே; அப்படிப்பட்டவனே ஞானி. யாதொருத்தன் சொந்தஸ்திரீயோடேகூடி ரமித்துக் கொண்டும், தன்னுடைய தருமத்தை நடப்பித்துக்கொண் டும, பரஸ்திரீகளை மாதாவைப்போலே பார்த்துக்கொண் டும், பரதனங்களை யோடுபோலே பார்த்துக்கொண்டும், பிரமநிஷ்டனாக ஞானகுணங்களோடேகூடி யிருக்கிறானே; அவனே ஞானி. யாதொருத்த னிந்திரியங்கள்தானே சகல வியாபாரங்களையும் பண்ணுகிறது நாமொன்று பண்ணவி ல்லை நாம்பரப்பிரம மென்கிற பாவனையோடேகூடப் பிரம நிஷ்டனாக விருக்கிறானே; அவனே ஞானி.

யாதொருத்தன் வாக்கு, மனது, தேகங்களே கர்த் தா நாம் பரமாத்மா நாமொன்றும் பண்ணவில்லையென்கிற பாவனையோடே யெக்கிய தான தபசுகளை லோகோபகா ரார்த்தமாக நடப்பிவித்துக்கொண்டு பிரமநிஷ்டனாகவிருக் கிறானே; அவனே ஞானி. ஜீவன்முக்தன்; சரீரத்தைத் தேரா கவும், இந்திரியங்களைக் குதிரையாகவும், மனதைக் கயிறாக வும், புத்தியைச் சாரதியாகவும், விஷயங்களைத் தேசங்களா கவும், பரமாத்மாவாகிற தன்னைத் தேராளியாகவும், அறி ந்து பாவித்து ஞானகுணங்களோடேகூட ஞானியா யா தொருத்த னிருக்கிறானே; அவன் பிரமபதத்தைத்தானே யடைவன்: அவன் முக்தனானே. யாதொருத்தன் சரீரத் தைச் சிவாலயமாகவும், இருதயகமலத்தைக் கெற்பகிரக

மாகவும், அதில் மனதைச் சிவலிங்கமாகவும், மனோபாதிக ரா யிருக்கிற ஜீவனைச் சிவனாகமறிந்து; அக்ஞான மாகிற நிர்மாலியத்தைப் பரிகரித்துச் சோகம்பாவனையினாலே பூசித்து; இந்தப்படி நிரந்தரபூசையோடேகூட ஜீவபாவத்தை விட்டுச் சிவனாக விருந்துகொண்டு ஞானகுணங்களோடேகூட ஞானியா யிருந்து தேகாந்தத்திலே சிவசாயுச்சியத்தை யடைவானே; அவனே ஜீவன்முக்தன். யாதாமொருத்தன் சரீரமாகிற கிரகத்திலே யிருதயகமலமாகிற சயனக்கிரகத்திலே புத்தியாகிற ஸதிரீயோடேகூடி யிந்திரியங்களாகிற பரிவாரங்களோடேகூடப் பரமாத்மாவாகிறதான் கிரகத்துக்குடையவனாகவு மறிந்து பாவித்தவன் ஞானகுணங்களோடேகூட ஞானியாய்ப் பிரமசாயுச்சியத்தையடைவன்; அவனே ஜீவன்முக்தன். யாதாமொருத்தன் சரீரமாகிற விருக்ஷத்தி லிருதயக்குகையாகிற கூட்டிலே ஜீவீசுரர்ளாகிற விரண்டு பக்ஷிகளுண்டு; அதில் விக்ஞானமயன் ஜீவன். ஆனந்தமயரீசுரர். அந்த வீசுரனிடத்திலே விக்ஞானமயராகிய ஜீவன்; முகங் கண்ணாடியிலே பிரதிவிம்ப முகம்போலேயும், சூரியன் ஜலசூரியன்போலேயும், கற்பிதரானதால்; ஈசுரன்றானே இந்த ஜீவன். ஆனதா லன்னியமல்ல. அவனே நானாகிய பரமாத்மாவென் றறிந்து பாவித்துக்கொண்டு ஞானகுணங்களோடேகூட ஞானியா யீசுரசாயுச்சியத்தைத்தானே யடைவனே; அவனே ஜீவன்முக்தன். யாதாமொருத்தன் சரீரமாகிற பிரமபுரத்திலே நவத்துவாரவாசலுடனே கூடியிருக்கிற பட்டணத்திலே யிருதயகமலமாகிற அரண்மனையி லாத்மாவாகிற ராசா;வித்தையாகிற ஸ்திரீயோடேகூடி யிந்திரியங்களாகிற பரிவார ஜனங்கள்சூழ மனதாகிற சிங்காதனத்தின்பேரிலே யிருந்துகொ

ண்டு பரமாத்மா ஜீவனென்கிறபெயரோடேகூடி விஷயங்களாகிற ராச்சியபரிபாலனம் பண்ணி விளையாடிக்கொண்டிருக்கிறார். அந்தப்பரமாத்மாவே தானென்றறிந்துபாவித்து ஞானகுணங்களோடேகூட ஞானியாய்ப் பிரமசாயுச்சியத்தைதானே யடைவனே; அவனே ஜீவன்முக்தன். யாதொருத்தன் சரீரமாகிற கடத்திலே யந்தக்கரணமாகிற ஜலத்திற் சூரியன் ஜலசூரியன்போலே பரமாத்மாப் பிரதிவிம்பித்து ஜீவனுனார். அந்தக்கரணத்திலே பரமாத்மாவினுடைய பிரதிவிம்பம் ஜீவனென்றறிந்து பாவித்து நானே பரமாத்மாவென் றறிந்து ஞானகுணங்களோடேகூட ஞானியாய்ப் பிரமசாயுச்சியத்தைத்தானே யடைவனே; அவனே ஜீவன்முக்தன். யாதொருத்தன் மனதாகிய குதிரைமேலே பரமாத்மாவேறி ஜீவனென்கிற பேரையடைந் திகலோக பரலோகங்களாகிற ஜகங்களிலே விஷயாநுபவ மார்க்கங்களிலே சவாரிபண்ணிக் குதிரையுந் தானுமிளைப்புடனே கூடவந் திருதயகமலமாகிற அசுவாலயத்திலே குதிரையுங் கட்டித் தாமுஞ் சுகமாய்த் தூங்குகிறார்.

அவரே சுழுத்தியானந்தமயர். அவரே விக்ஞானமயர். அவரே பரமாத்மாவென்று மிந்தக்கற்பனை வவத்தாபேதங்களெல்லா மவருடைய விளையாட்டென்றுந் தானே பரமாத்மாவென்று மறிந்து ஞானகுணங்களோடேகூட ஞானியாய்ப் பிரமசாயுச்சியத்தை யடைவனே; அவனே ஜீவன்முத்தன். யாதாமொருத்தன் சூரியனும், சூரியகிரணமும், போலே பிரம அம்சம் ஜீவனென்றும், மேகம்போலே அவித்தையென்றும், அறிந்து; மேகத்தினலே சூரியகிரணங்கள் மூடுபட்டதுபோலப் பரமாத்மாவுக் கன்னியமில்லாமலிருக்கிற ஜீவன் அவித்தையினலே மூடப்பட்டானென்றும்,

வித்தையினாலே யவித்தைபோ யுள்ளளவில் பூருவம்போலே யன்னியமில்லாமற்றானே விளங்குவனென்றும், அறிந்து; தானே பரமாத்மாவென்று பாவித்து; ஞானகுணங்களுடனே கூடப் பிரமமாகத்தானே யிருந்துகொண்டு பிரமசாயுச்சியத்தை யடைவனோ; அவனே ஜீவன்முக்தன். தானே பரமாத்மா. அவித்தையுடனே கூட விசுவவிலாசமெல்லாஞ் சொப்பனப்பிரபஞ்சம்போலே தன்னிடத்திலே தன்னாலேதானே கற்பிதமென்கிறவறிவுயாதொருத்தனுக்குத் திடநிச்சயமோ; அவன்பிராமணனானாலும், சூத்திரனானாலும், அவன் ஜீவன்முக்தன். யாதாமொருத்த னிந்தவிசுவமெல்லா மநுபவத்தினாலேயும்; சாஸ்திரத்தினாலேயும், குருவுபதேசத்தினாலேயும், அநித்தியமென்றும், நான் தேகவிலக்ஷணமென்றும், ஜீவத்துவங் கற்பிதமென்றும், தானே பிரமமென்று மறிந்து, ஞானகுணங்களோடேகூட ஞானியாகிவிடுவனோ; அவனுக்கு ஞானத்தினாலே யவனுடைய சஞ்சிதகருமத்திற்கெல்லா நாசம். ஆகாமிய கருமத்துடனே சம்பந்தமில்லை. பிராரத்துவ மாத்திரம் புசிக்கத்தக்கது. அப்படிப்பட்ட ஞானி ஜீவன்முக்தன். யாதாமொருத்தன் லோகத்திலேயிருந்தும்பயமில்லாதிருக்கிறானோ; யாதொருத்தனைத்தொட்டு லோகத்துக்குப் பயமில்லையோ; ஞானகுணங்களுடனேகூடி ஞானியாயிருக்கிறானோ; அவனே ஜீவன்முக்தன். யாதொருத்த னிந்திராதிபதங்களையுந் திரணீகரித் தாசையில்லாமல் கரபாத்திரவானாய்ப், பூமிதானே சயனமாய்க், கைதானே தலைக்குயரமாய்த், திகம்பரனாய்க், காடுகள், வனங்கள், மார்க்கங்களிலே படுக்கின்றவனாய்க், கிராமமேகராத்திரி சஞ்சாரியாய்ச், சகல கருமங்களையும் பரிகரித்துச் சந்நியாசியாய், ஞானகுணங்களுடனேகூடி, ஞானியாய், மௌனியாய்ப், பிரமநிஷ்டனா

யிருக்கிறவனே; ஜீவன்முக்தன். யாதொருத்தன் விசுவமெ ல்லாந் தானுயிருக்கிருனே; அப்படிப்பட்டஞானி யெதினெ லெந்தவஸ்துவைப் பார்க்கப்போகிருன், எதினெலெந்தவஸ் துவைக் கேட்கப்போகிருன், எதினெ லெந்தவஸ்துவைச் சொல்லப்போகிருன், எதினெ லெந்தவஸ்துவைப் பரிசிக்கப் போகிருன், எதினெ லெந்தவஸ்துவை ரக்ஷிக்கப்போகிருன், எதினெ லெந்தவஸ்துவைச் சிந்திக்கப்போகிருன், எதினெ லெ ந்தவஸ்துவை யறியப்போகிருன், சகலமுந் தானுகவிருக்கிற அந்தமஹாத்மா ஜீவன்முக்தன். யாதொரு ஞானியானவன் காமக் குரோத லோப மோகாதி துற்குணங்களைப் பரிகரி த்துக்குருவுபதேசத்தினலே சிவோகமென் றறிந்துபாவித் தாற் சிவனுகிவிடுவன். அவனே ஞானகுணங்களுடனேகூடி ஞானியாய்சிவசாயுச்சியத்தைத்தானே யடைவன். அவனே ஜீவன்முக்தன்.

பதினெராவது ஜீவன்முக்திப் பிரகரணம்

முற்றிற்று.

---

## பன்னிரண்டாவது. சாஸ்திரப்பிரகரணம்.



சாஸ்திரப்பிரகரணஞ் சொல்லுகிருேம்.

சாஸ்திரத்தினலே சகலமு மறியவேண்டும். சூரியனு னலேயும், தீவட்டியினலேயும், தீபத்தினலேயும், இருட்டி லே யிருக்கிற பதார்த்த மறிகிறதுபோலே:—சாஸதிரக்கண் ணினலே சகலமு மறியவேண்டும். அன்னமென்ருற் பசிபோ காது. ஜலமென்ருற் ருகம்போகாது. அமிழத மென்ருல்

ரோகம்போகாது. தேற்றாங்கொட்டையென்று லப்புத்தெரியாது. அந்தப்படி செய்து பலனடையவேண்டும். அப்படிப்போலச் சாஸ்திரம் படித்தமாத்திரத்தினாலே யவித்தையாகிறவக்ஞானம்போகாது. பின்னையேதினாலென்றால்? சிரவணை, மனனை, நிதித்தியாசனமாகிற வநுபவக்ஞானத்தினாலே யவித்தையாகிற வக்ஞானம் நீங்கும். அந்தகாரம் விளக்குனாலே போகிறதுபோலே யென்று சிலபேர் சொல்லுவார்கள். சிலபேர் யோகிகள் சாஸ்திரவிவேகத்தினாலே மோகம் போம். விளக்குப் பிரபையினாலே யந்தகாரம் போகிறதுபோலே:— வாசனைக்கூட்டம் அடிக்கடி பாவனையினாலே போம். அஃதெப்படிப்போலே யென்னில்? பாத்திரத்திலே யிருக்கிற நெய்ப்பூச்சு வுஷ்ணஜலத்தினாலே போகிறதுபோலேயும், தாம்பிரபாத்திரம் புளிக்கொண்டு தேய்க்கிறதினாலே களிம்பாகிய வழுக்குப்போய்ச் சுத்தமாகிறதுபோலேயும், சாம்பலினாலே வெங்கலப்பாத்திரத்தை தேய்க்கவே யந்தப்பாத்திரஞ் சுத்தமாகிறதுபோலேயும், வாசனைக்கூட்டமாகிய மலம்போய்ச் சித்தஞ் சுத்தமாம்.

அப்பாற் கருமமயமாயிருக்கிற வவித்தையா மலம் பிரமத்தியானத்தினாலே:—அக்கினிப்புடத்தினாலே சுவர்ணமலம் நீங்கினாற்போல நசித்துப்போம். அப்பாற் சர்வக்ஞத்துவமாகிய திவ்வியக்ஞான முதிக்குமென்று சொல்லுவார்கள். அப்படியாகட்டு மென்று சங்கைவர:— அந்த மதம் வேதாந்திகளுக்குச்சம்மதமல்லவென்றுத்தரம். மனுஷனுக் காகாரம், நித்திரை, பயம், மைதுனம், இவை முதலா யிருக்கிற வறிவிருக்கிறபடியினாலே சாஸ்திரக்ஞானமேதுக்குத் தேவையில்லையென்று சங்கைவர:— அந்தச் சாமான்னியக்ஞானம் பசு, பக்ஷி, மிருகாதிகளுக்கெல்

லாமுண்டு. அந்த சாமான்னியக்ஞானத்திஞலே யிவன் ஞானியல்ல. விசேஷக்ஞானத்திஞலே யிவன் ஞானியாகவேண்டும். விசேஷக்ஞானமாவதேது? கிருத்தியா கிருத்திய விவேகம். அந்தவறிவு சாஸ்திரத்திஞலே வரவேண்டும். ஆனதால்; சாஸ்திரம் விசாரித்தறியவேண்டுமென் றுத்தரம். நதிப்பிரவாகத்தின் பின்ஞேடே போகிறதுபோலே; ஆகாரம், நித்திரை, பயம், மைதுனங்களோடே கூடியிருத்தல்;பசுக்ஞானம்.ஓடத்தின்பேரிலேறி யக்கரைக்கிப் போகிறதுபோலே சாஸ்திரக்ஞானமாகிய வோடத்தை யடைந்து மோக்ஷமாகியகரையிலேறவேண்டுமென் றுத்தரம். சில பேர் ஸ்தூலவாதிகள் சமுசாரமாகிய சமுத்திரத்திலேநின்றுங் கரையேறுகிறதற் கீசுரஞகிய வோடக்காரனைத் தோத்திரபூசாதியாகிய நல்லவசனஞ் சொல்லவே யவ ராயாசமன்றியிலே கரையேற்றி விடுவர்.

ஞானமார்க்கம் அதிசூக்ஷமம் கடினமென்று சொல்லுவார்கள். சமுத்திரத்தைக் கைகளிஞலே நீந்திக் கரையேறிஞற்போல ஞானமார்க்க மதிககடினம். ஈசுர வுபாசனமார்க்கமே சுவர்க்கமென்று சொல்லுவார்கள். அவர்கள் பக்ஷம்போராது. அவர்களுக்குச்சாஸ்திரவிருதயந்தெரியாது. அந்த வோடந்தானே யறிவு அந்தவோடக்காரஞயிருக்கிற வீசுரன்முனே ஜீவாத்மா. தான்முனே ஈசுரனென்கிற வறிவில்லாம லொன்றுகிடக்க வொன்றை யுளறுகிருர்கள். இனிமேற் சித்தாந்தஞ் சொல்லுகிரும். சாஸ்திரத்திஞலே தானே யறிவுவரவேண்டும். அறிவிஞலே மோக்ஷமென்று சகலமத சம்மதமென் றுத்தரம். சாஸ்திரத்துக் கெல்லாமிந்திரியங்களிஞலே காணப்படாத வஸ்துவிலேதானே தாற்பரியம். வேறேயொரு பிரமாணத்திஞலே யறியப்

பட்ட வஸ்துவிலே தாற்பரியமில்லை. பிரத்தியக்ஷமெப்படி ஞானசாதனமோ; அனுமானமெப்படி ஞானசாதனமோ; வுபமானமெப்படி ஞானசாதனமோ; அப்படிச் சாஸ்திரம் ஞானசாதனஞ் சாஸ்திரத்தினாலே தத்துவக்ஞானம் வர வேண்டும். அபசப்தம், நல்லசப்தம், தெரியவேண்டும். தர்க்கசாஸ்திரத்தினாலே; தர்க்கக்ஞானம் வரவேண்டும். மீமாம்ஸத்தினாலே நியாயக்ஞானம் வரவேண்டும். நீதிசாஸ்திரத்தினாலே ராஜநீதிக்ஞானம்வரவேண்டும். தருமசாஸ்திரத்தினாலே தருமக்ஞானம் வரவேண்டும். காவிய நாடகவலங்காரங்களினாலேவிற்பத்திக்ஞானம்வரவேண்டும். வையித்திசாஸ்திரத்தினாலே அவுஷதக்ஞானம் வரவேண்டும். அப்படிப்போலே வேதாந்த சாஸ்திரத்தினாலே பிரமக்ஞானம் வரவேண்டும்.

இஃது குருகடாக்ஷ வுபதேசத்தினாலே வரவேண்டும். வேதாந்தத்தினாலே வந்திருக்கிற பிரமக்ஞானம், அவித்தையைநசிப்பித்து முக்தியைக் கொடுக்கும். ஞானமிரண்டு விதம். பரோக்ஷக்ஞானமென்றும், அபரோக்ஷக்ஞானமென்றுஞ்சொல்லுவார்கள். பிரமமுண்டென்று சொல்லுகிறது பரோக்ஷக்ஞானம். நானேபிரமமென்கிற தபரோக்ஷக்ஞானம். பரோக்ஷக்ஞானத்தினாலே சகல பாவங்களும்போம். அபரோக்ஷக்ஞானத்தினாலே யவித்தை நசித்துப் பிரமானந்தமாக யிருக்குகை மோக்ஷமென்று பெரியவாள் சொல்லுவார்கள். வேதாந்தக்ஞான மாதியிலே யப்பியாசிக்கிற போது பரோக்ஷக்யானம்போலே யிருக்கும். அந்த வேதாந்தக்ஞானந்தானே யடிக்கடி விசாராப்பியாசங்களோடே கூடினா லபரோக்ஷக்ஞானமா யிருக்குமென்று வித்தியாரண்ணியசுவாமிகள் சம்மதம். விவரணாசாரியாள் சம்மதஞ்

சொல்லுகிறோம். சாஸ்திரத்தினாலே யறிவு. அந்தவறிவு:—ஆதியிலே பரோக்ஷக்ஞானம்போலே யிருக்கும். அடிக்கடியப்பியாசத்தோடேகூடனாலதுதானே யபரோக்ஷக்ஞானமென்று சம்மதம், பாஷியக்காரர் சம்மதம்; வேதாந்த சிரவணந்தானே ஞானசாதனம். முக்கியசாதனம் மனன நிதித்தியாசனம். இரண்டுமங்கங்கள். பிரதிபந்தங்களைப்போக்கடிக்கும். பிரதிபந்த நிவிர்த்தி யெப்படியென்று சங்கைவர:—மனனத்தினாலே சமுசயநிவிர்த்தி. நிதித்தியாசனத்தினாலே விக்ஷேபப்பிரமை நிவிர்த்தி. சிரவணத்தினாலேயறிவு. அறிவினாலே முக்தியென்று பாஷிய சம்மதம். சிரவண, மனன, நிதித்தியாசனங்களோடே கூடியிருக்கிற வந்தக்கரணந்தானே யறிவுக்குச் சாதனமென்று வாசஸ்பதி மிசுரர் சம்மதம். தார்க்கிகாள் சம்மதஞ் சாஸ்திரத்தினாலே பரோக்ஷஞானம்; இந்திரியத்தினாலே யபரோக்ஷக்ஞானமென்று சொல்லுவார்கள். அதுகூடாது? வேதாந்திகள் பரோக்ஷவஸ்துவைப்பற்றி வருகிறக்ஞானம் பரோக்ஷக்ஞானம். அபரோக்ஷ வஸ்துவைப்பற்றி வருகிறக்ஞானமபரோக்ஷக்ஞானம். பிரமமாவது ? நித்தியாபரோக்ஷ வஸ்துவானபடியினாலே; வேதாந்தத்தினாலே பிரமத்தைப்பற்றிவருகிறக்ஞானம் பரோக்ஷக்ஞானந்தானே. பிரம மபரோக்ஷ வஸ்துவென்று வேதாந்தங்கள் சொல்லுகிறதுகளென்று சொல்லுவார்கள். அதுமாத்திரமல்ல:—பிரமத்துக்கும், அபரோக்ஷவாத்மவஸ்துவுக்கும், அந்தப்பிரமமே நீயென்றுபதேசமிருக்கிறபடியினாலே பிரம மவித்தையினாலே பரோக்ஷம்போலே தோற்றுகிறது. அபரோக்ஷ வஸ்துப் பிரமமென்று சித்தம். சைவ வைஷ்ணவா ளுபாசனைதானே காரணமென்றும்; முக்கியசாதனமென்றுஞ் சொல்லுவார்கள். அவர்கள்மதஞ்

ஜீவேசுராளுக்குப் பந்தந்தானே. அந்தப்பந்தம் பரமார்த்தந்தானே. ஜீவன் அவித்தையை யுடைத்தானவன். பிரமத்தையறிந்து வுபாசித்தாற் பிரமவுபாசனையினாலே யவித்தை நீங்கும். அவித்தை நீங்கின லந்தவுபாசகன் பிரமம் போலே யிருப்பனென்றும், அதுவே சமானமுக்தியென்றும், அவர்கள் மதம். சிலபேர் சைவாள் சாயுச்சிய முக்தியை யங்கீகரித்தார்கள். வைஷ்ணவாள்மதஞ் ஜீவனு மரூபிதானே, பிரமமு மரூபிதானே, சாரூபமுக்தியே முக்தியென்றுமவர்கள்மதம்.

பன்னிரண்டாவது சாஸ்திரப்பிரகரணம் முற்றிற்று.

---

## பதின்மூன்றாவது. வேதாந்தப்பிரகரணம்.

வேதாந்தப்பிரகரணஞ் சொல்லுகிறோம்.

வேதாந்தங்களுக்கு அபேதத்திலேதானே தாற்பரியம். பேதத்திலே தாற்பரியமில்லை. பேதம் பிரத்தியக்ஷ சித்தமானபடியினாலே யதுவேதென்றுவர:—வேறேயொரு பிரமாணத்தினாலே யறியப்படாததாயும், பலத்தை யுடையதாயும், இந்திரியத்தினாலே யறியப்படாததாயு மிருக்கிறவர்த்தத்திலே சாஸ்திரம் பிரமாண மென்று பெரியவாளங்கீகரித்திருக்கிறார்கள். ஆனபடியினாலே யிந்திரியத்துக்கு விஷயமில்லாமலிருக்கிற வபேதத்திலே வேதாந்தங்களுக்குத் தாற்பரியம். அஃதெப்படியென்னில்? பிரமத்துக்கும், விசுவத்துக்கும், பேதமில்லை. ஜீவனுக்கும், பிரமத்துக்கும், பேதமில்லை. பிரமத்தைத்தவிரவிரண்டாம்வஸ்துவில்லையென்கிறக்ரா

ணம் அபேதக்ஞானம். வேதாந்தவிசாரத்தினலே ஈசுரராகிற குருப்பிரசாதத்தினலே யபேதக்ஞானம் வரவேண்டும். பேதக்ஞானத்தினலே முக்தியென்று சொல்லுவார்கள். வேதாந்தங்களுக்கு அபேதத்திலேதானே தாற்பரியம். சடுவிதலிங்கங்களினலேசொல்லுகிறோம். சடுவிதலிங்கமாவ தேதென்றால்? உபக்கிரமம், உபசம்மாரம், அப்பியாசம், அபூர்வதை, பலம், அருத்தவாதம், உபபத்தி, எனப்படும். இந்த ஆறுலிங்கங்களினலே வேதாந்தங்களுக்கு அத்தொய்தப் பிரமத்தினிடத்திலேதானே தாற்பரியம். அஃதெப்படியென்னில்? சாந்தோக்கியத்திலே; சட்டத்திலே; ஆதியிலே அபேதவுபக்கிரமம். அந்தத்திலே யபேதவுபசங்கார மிரண்டு மொருலிங்கம். ஒன்பதுதரம் நீதானே பிரமமென்று அடிக்கடிசொல்லியிருக்கிறது: இதுவிரண்டாவது அப்பியாசலிங்கம். * பிரமமாவது? வேதத்தினலே யறியத்தக்கது, குருவுபதேசத்தினலேயறியத்தக்கது, அபூர்வதை: இதுமூன்றாம்லிங்கம். † பிரமஞானத்தினலேமுக்தி பலம்: இது நாலாமிலிங்கம். ‡ பிரமத்தை யறிந்தாற் சகலத்தையு மறிந்தது; அருத்தவாதம்: இது அஞ்சாமிலிங்கம். இதற்குயுக்தி மிருத்துபிண்டத்தை யறிந்தாற் சகலகடங்களையுமறிந்தாற்போலேயென்கிறது.

---

* துரியன் றிகழ்பிரமாணதீத னென்கை யபூர்வதை என்றும் பாடம்.

† பாறிலுயிரொன்றறித லெலாமறிதலென்கை பலம் என்றும் பாடம்.

‡ பிரத்திகான்மவுருமாம் பிரமந்தனக்கு, மாறிய வைந்தொழிற்கத்துருத்துவஞ் செப்புறுதல் வயங்கருத்தவாதமெனவும் பாடம்.

கடத்துக்கு மிர்த்திகை, தந்துவுக்கு ஊர்ணநாபி, நிமித் தம்போல ஜகத்துக்குக்காரணம் பிரம்மமென்று சொல்வ தே திருஷ்டாந்தமென்கின்ற உபபத்தி: இது ஆறும்லிங்கம்.

இந்த ஆறுலிங்கங்களினாலே வேதாந்தங்களுக் கபேதக் ஞான மத்தொய்தப் பிரமத்தினிடத்திலே தாற்பரியமென் றும்; பெரியவாள் சொல்லுவார்கள். வேதாந்த விசாரம் பண்ணுகிறபோது அதிலே வேதாந்தக்ஞானம் பரோக்ஷக் ஞானம் போலே யிருக்கும். அடிக்கடி விசாராப்பியாசங்க ளுடனே கூடினா லதுதானே யபரோக்ஷக்ஞானம். அந்த அபரோக்ஷக்ஞானமே முக்திசாதன மென்று பெரியவாள் சொல்லுவார்கள்.

பதின்மூன்றுவது வேதாந்தப்பிரகரணம்

முற்றிற்று.

---

## பதினான்காவது மஹாவாக்கியப்பிரகரணம்.

---:o:---

மஹாவாக்கியப்பிரகரணஞ்சொல்லுகிறோம்.

பிரத்தியக்ஷமெப்படி ஞான சாதனமோ; அனுமான மெப்படி ஞானசாதனமோ; உபமான மெப்படி ஞானசாத னமோ; அப்படி மஹாவாக்கியம் பிரமக்ஞானத்துக்கு அந்த ரங்கமா யிருக்கிற சாதனம். இந்த வுபதேசத்தைத்தானே பிரமக்ஞான வுபதேசமென்றுசொல்லுவார்கள். மஹாவாக் கியார்த்த விசாரத்தினாலே அத்தொய்தப்பிரமக்ஞானம் வரு ம். மகத்தாய்ப் பூரணமா யிருக்கிற பிரமத்தைச்சொல்லுகிற

படியினுலே மஹாவாக்கிய மென்று சொல்லுவார்கள். மக த்தாயிருக்கிற அர்த்தத்தையும், அபேதத்தையும், சொல்லு கிறபடியினுலே மஹாவாக்கிய மென்று சொல்லுவார்கள். மஹாபதமா யிருக்கிறமுக்தி ஞானசாதனமா யிருக்கிறபடி யினுலே மஹாவாக்கிய மென்று சொல்லுவார்கள். வேதங் களுடைய சிரசிலே கிரீடம்போலே பூசிக்கப்பட்டதா யிருக் கிறபடியினுலே மஹா வாக்கியமென்று சொல்லுவார்கள். சகல வேதங்களுக்கும் பொருளாயிருக்கிற பிரமத்தைச் சொல்லுகிறபடியினுலே மஹாவாக்கிய மென்று சொல்லு வார்கள். சிரேஷ்டமா யிருக்கிற வாக்கியமானபடியினுலே வேதாந்தங்களுக்குள்ளே மஹாவாக்கியமென்று சொல்லப் படும். வேதாந்தங்களினுலேயும், மனதினுலேயும், அளவிட ப்படாம லிருக்கிற ஜோதியைச் சொல்லுகிற படியினுலே மஹாவாக்கியமென்றே சொல்லுவார்கள். யாதொருஞான த்தினுலே மனுஷனானவன் சகலலோகத்துக்கும் பூசிக்கப் படுகிறவனுகிருனே; யாதோரறிவினுலே சகல பாபங்களி லே நின்றும் விடுபட்டுச் சகல கருமபந்தங்களிலே நின்று முக்தனு யவித்தையாபாசத்திலே நின்று முக்தனுய் மோக்ஷ சாம்பிராச்சிய பதமாகிற மஹா பலத்தை யடைகிருனே; அந்த ஞானசாதன வாக்கியமே மஹாவாக்கியமென்று சொல்லப்படும். மந்தனுய்ச் சகல வேதாந்தங்களையு மறிகிற தற்குப் புத்தியீனனுயிருக்கிறவனுக்குச் சுலபவுபாய மதி சீக்கிரசித்தமாயிருக்கிற வுபாயங் கடத்திவிக்கிறதா யிருக் கிறவுபாய மிதுவே. இது ஜன்மஸாபல்லியத்தைக் கொடுக் குங் குருவுபதேசத்தினுலே வரவேண்டும். இது ஜனகாதிக ளா யிருக்கிறயோகிகளுக்கு மறியப்படாமலிருக்கிற பிர மக்ஞானத்தைக்கொடுக்கும்.

இந்த ஞானத்தினாலே ஜீவன் முக்தனாவன். அப்படிப் பட்டமஹாவாக்கியத்தைச் சொல்லுகிறோம்.

மஹாவாக்கியத்துக்கு முமுக்ஷுவதிகாரி. ஆத்மாவுக்கும், பிரமத்துக்கும், ஏகத்துவம் விடயம். அத்வைதக்ஞானம் விஷயீ. அத்வைதக்ஞானஞ்சாதனம். மோக்ஷஞ் சாத்தியம். இன்னஞ் சொல்லுகிறோம். தற்பதத்துக்கு, சர்வக்ஞத்துவாதி விசிஷ்ட சைதன்னியம் முக்கியார்த்தம். தொம்பதத்துக்கு, தேகேந்திரியங்களுடனே கூடியிருக்கிற கிஞ்சிஞத்துவாதி விசிஷ்ட சைதன்னியம் முக்கியார்த்தம். அசிபதத்துக்கு, இரண்டுபேருக்கு மைக்கியஞ் சொல்லப்படுகிறது. இப்படி ஜீவீசுராளுக்கு, ஐக்கிய மங்கீகரித்தாற் பிரத்தியக்ஷ விரோதம். அஃதெப்படியென்றால்? ஈசுரன் சர்வக்ஞத்துவாதியோடும், ஜீவன் கிஞ்சிஞத்துவாதியோடும், கூடி முக்கியார்த்தமாயிருப்ப தைக்கியங்கூடாது. விரோதம் பரிகரிக்கவேண்டி லக்ஷியார்த்த மங்கீகரித்தார்கள். முக்கியார்த்தத்தை யொன்றுக்கொன்று சேர்க்கிறதில் விரோதம் வர:—அதற் குசிதமான அர்த்தத்தைக் கற்பிக்கிறது லக்ஷணையென்று சொல்லுவார்கள். அந்த லக்ஷணை மூன்றுவிதமா யிருக்கும். அஃதியாதெனில்? ஜகாலக்ஷணையென்றும், அஜகாலக்ஷணையென்றும், ஜகதஜகாலக்ஷணையென்றும், இப்படிலக்ஷணையின்கிரமம் மூன்றுவிதமென்று சொல்லுவார்கள். அஃதெப்படியென்று வர:—கங்காயாங் கோஷாவென்கிறவிடத்திலேஜகாலக்ஷணை. சோணோதாவதியென்கிறவிடத்திலேயஜகாலக்ஷணை. சோயந்தேவதத்தாவென்கிறவிடத்திலே ஜகதஜகாலக்ஷணை. அஃதெப்படி என்றால்? கங்காபதத்துக்கு, கங்காஜலமர்த்தம். கோஷசப்தத்துக்கு, இடைச்சேரியர்த்தம், கங்காயாங்கோஷாவென்கிற

வாக்கியத்திற்கு, ஆதாரவாதேயபாவமர்த்தம். அஃதெப்படியென்றுவார:--கங்காஜலத்திலே இடைச்சேரியிருக்கிறதென்கிறவர்த்தம்முக்கியார்த்தம். இப்படியங்கீகரித்தால்நெகிழ்தவஸ்துவாகியஜலத்திலேஇடைச்சேரி இருக்குமோ; இராது. இருக்குமென் றங்கீகரித்தால்; இதுபிரத்தியக்ஷவிரோதமானபடியினாலே விரோதம்பரிகரிக்கவேண்டி லக்ஷணையையங்கீகரித்தார்கள். கங்காபதத்துக்கு,ஜலமாகிறஅர்த்தத்தை விட்டுச் சமீபக்கரையில் லக்ஷணையை யங்கீகரித்தார்கள்; அப்போது விரோதமில்லை. கங்காபதத்துக்கு, கங்காதீரம் அர்த்தமென்று அங்கீகரித்து இடைச்சேரிக்கும், தீர்த்தத்துக்கும், ஆதாரவாதேயபாவமாயிருக்கிற வாக்கியார்த்தங் கூடுமென் றுத்தரம்.

இனி அஜகரலக்ஷணை சொல்லுகிறோம். சோணோதாவதி யென்கிறவிடத்திலே சிவப்புக்குணமோடுகிறதென்று வாக்கியார்த்தஞ் சொன்னால்; சிவப்பாகிய குணஞ் சிவப்பாகிய குதிரையைவிட்டுத்தனியேஇராது: தனியே யோடாது. சிவப்போடுமென்றால் ? பிரத்தியக்ஷ விரோதமானபடியினாலே விரோதம் பரிகரிக்கவேண்டி லக்ஷணை யங்கீகரித்தார்கள். சோணபதத்துக்குச் சிவப்புக் குதிரை யர்த்தம்: சிவப்புக்குதிரை யோடுதென்றால்? விரோதமில்லை. இது விப்போ அஜகரலக்ஷணையென் றுத்தரம்.

இனிமேல் ஜகதஜகரலக்ஷணை சொல்லுகிறோம். சோயந்தேவதத்தகாவென்கிற விடத்திலே வாக்கியத்திற்குப் பொருளேதென்றுவார:— முன் காசியிலே கண்ட தேவதத்தனே இப்போ திராமேசுரத்திலே சண்டானிவனாந்தத்தேவதத்தனென்று அபேதஞானம்வருகிறது. சகாவென்கிற தற்பதத்துக்கு, அந்தத்தேசமந்தக்காலங் காலத்

தோடே கூடியிருக்கிறதேவதத்தன் அர்த்தம். அயமென்கிற துவம்பதத்துக்கு, இந்தத்தேச மிந்தக்காலங் காலத்தோ டே கூடியிருக்கிற தேவதத்த னர்த்தம். இரண்டுபேருக்கு மைக்கியஞ் சொல்லுகிறபோது பிரத்தியக்ஷவிரோதம். அந் தக்கால மந்தத்தேசத்தோடே கூடியிருக்கிறவனுக்கும், இந் தக்கால மிந்தத்தேசத்தோடே கூடியிருக்கிறவனுக்கும், ஐக் கியங்கூடுமோ; கூடாது. அந்தக்காலமந்தத்தேசவிசேடத்து க்கும், இந்தக்கால மிந்தத்தேச விசேடத்துக்கும், ஐக்கியங் கூடுமோ; கூடாது. ஐக்கியஞ்சொன்னால்; பிரத்தியக்ஷ வி ரோதமென்றுவர:—விரோதம் பரிகரிக்கவேண்டி யுபாதி களும், யுபாதியோடே கூடியிருக்கிற இரண்டுபேருகளுக் கு மைக்கியமாகிற முக்கியார்த்தத்தை விட்டு லக்ஷணை யங் கீகரித்தார்கள். அஃதெப்படியென்றுவர:—தற்பதத்துக்கு, அந்தக்கால மந்தத்தேச விசேஷணங்களைப் பரித்தியாகம் பண்ணித் தேவதத்தனிடத்திலே லக்ஷணையென்றும், தேவ தத்த னர்த்தமென்றும், அங்கீகரித்தார்கள். துவம்பதத்து க்கு, இந்தக்கால மிந்தத்தேச விசேஷணங்களையெல்லாம் பரித்தியாகம்பண்ணித் தேவதத்தனிடத்திலே லக்ஷணை யெ ன்றும், தேவதத்தன் பொருளென்றும், அர்த்த மங்கி கரித்தார்கள். இரண்டுதேவதத்தனுக்கும் விசேஷங்களை வி ட்டு விசேடியாளா யிருக்கிற தேவதத்தனுக்கு, ஐக்கியஞ் சொன்னா லுசிதந்தானே. அப்படிப்போலே மஹாவாக்கிய த்திலே விட்டுவிடாத லக்ஷணை யங்கீகரித்தார்கள். அஃதெ ப்படியென்றுவர:—தற்பதத்துக்குச் சர்வக்ஞத்துவ ஈசுரத் துவ ஜகத்காரணத்துவாதி விசேடங்களோடே கூடியிருக் கிற வீசுரசைதன்னிய மர்த்தம். தொம்பதத்துக்குக் கிஞ் சிக்ஞத்துவ அக்ஞத்துவ தேகேந்திரியாதி விஷ்டத்துவ

ஜீவத்துவாதி விசேடங்களோடே கூடியிருக்கிற சைதன்னிய மர்த்தம். இரண்டு சைதன்னியங்களுக்கு மைக்கியஞ் சொல்லுகிறபோது பிரத்தியக்ஷ விரோதம். அதேதென்றால்:—சர்வக்ஞரா யிருக்கிற வீசுரருக்கும், கிஞ்சிக்ஞனா யிருக்கிறஜீவனுக்கும்,ஐக்கியங்கூடுமோ? கூடாது. ஐக்கியஞ் சொன்னாற் பிரத்தியக்ஷ விரோதமென்றால்:—விரோதம் பரிகரிக்கவேண்டி லக்ஷணை யங்கீகரித்தார்கள். அஃதெப்படியென்றால்:—தற்பதத்துக்கு, சர்வக்ஞத்துவாதி, ஈசுரத்துவாதி, விசேடங்களையெல்லாந் தகித்து லக்ஷணையினாலே சுத்தப்பிரம சைதன்னிய மர்த்தம். தொம்பதத்துக்கு, கிஞ்சிக்ஞத்துவாதி ஜீவத்துவாதி விசேடங்களை யெல்லாந் தகித்து லக்ஷணையினாலே தேகேந்திரியாதி சாக்ஷி சைதன்னிய மர்த்தம். இரண்டு சைதன்னியங்களுக்கு மைக்கியஞ் சொன்னால்; பிரத்தியக்ஷ விரோதமில்லை: உசிதந்தானே. இதுதானே விட்டுவிடாதலக்ஷணை. மஹாவாக்கியத்தினாலே ஐக்கியக்ஞானம்வரவேண்டும்குருவுபதேசத்தினாலேவரவேண்டும். இந்தப்படி மஹாவாக்கியார்த்தத்தை யடிக்கடி விசாரித்தா லைக்கியக்ஞான முதிக்கும். ஆதியிலே மஹாவாக்கியக்ஞானம் பரோக்ஷக்ஞானம்போலேயிருக்கும். அடிக்கடி விசாரித் தடிக்கடி மனன நிதித்தியாசனத்தோடே கூடினா லந்த மஹாவாக்கியக்ஞானந்தானே யபரோக்ஷக்ஞானமா யிருக்கும். இந்தக்ஞானமே சாரம். தானியம் வேண்டுமென்கிறவன் வைக்கோலையெல்லாந் தள்ளித் தானியத்தை யெப்படிச் சேகரிப்பானோ வப்படிப்போலவும், அம்ஸமானது பாலையும் ஜலத்தையும் பிரித்து ஜலத்தைத் தியாகம்பண்ணிப் பாலை யங்கீகரிக்கிறதுபோலவும், அனேககிரந்தங்களை விசாரித்துப் பார்த்துச் சாரமாயிருக்கிற வறிவை

யெடுத்துக்கொண்டு கிரந்தங்களையெல்லாம் பரித்தியாகம் பண்ணவேண்டும். சாஸ்திரமனந்தம், அறியத்தக்க பொருளனந்தம், ஆயுளற்பம், விக்கினங்களனந்தம், இப்படியாயிருக்கிறபடியினாலே:—எதுசாரமோ வதைத்தானே யங்கீகரிக்கவேண்டும். ஆனபடியினாலே:—மஹாவாக்கியப் பிரமக்ஞானந்தானே சாரம். இராவும் பகலும் பிரமத்தைத்தானே; உபாசிக்கவேண்டும். சமதமாதிகளோடேகூட மஹாவாக்கியத்தினாலே பிரமத்தை விசாரித்தறிந்து பிரமவித்தாய்ப் பிரமநிஷ்டையைச் சம்பாதித்தானானால்; அவன்றானே பிரமக்ஞானி. அவன்றானே பிரமசாயுச்சியத்தை யடைவன்.

பதினான்காவது மஹாவாக்கியப்பிரகரணம்
முற்றிற்று.

---

## பதினைந்தாவது
## தொம்பதார்த்தசோதனைப்பிரகரணம்.



தொம்பதார்த்தசோதனைப்பிரகரணஞ் சொல்லுகிறோம்.

தொம்பதத்துக்கர்த்தமார்? ஜீவன். ஜீவனார்? நீனென்று வியவகரிக்கிறவன் ஜீவன். அந்தஜீவனாவதார்? நானறியேன் நானக்ஞானியென்கிற யவித்தையோடே கூடியிருக்கிறவன். அவித்தையாவ தியாது? அனாதி, திரிகுணாத்மகம், அநிர்வசநீயம், பிரகிருதி யென்றுஞ் சொல்லப்படும். ஆத்மாவாவதார்? அகண்டானந்த வேகரசர், போதமயர், பரமாத்மா, அனாதி, வேதாந்த வேத்தியர். அவித்தைக்கு மாத்மாவுக்குஞ் சம்பந்த மனாதி. அந்தச்சம்பந்தங் கற்பி

தம். போதமயரா யிருக்கிற பரமாத்மாவானவர் தன்னுடைய அவித்தையோடேகூடி ஜீவனென்கிறபெயரையடைந்தார். பரமாத்மாவுக்குத்தானே யவித்தையினாலே ஜீவபாவங்கற்பிதம். அஃதெப்படியென்னில்? ஜீவனும்; ரச்சுசர்ப்பம் போலேயும், ஸ்தாணுபுருஷன்போலேயும், ஜலசூரியன்போலேயும், ஜலசந்திரன் போலேயும், ஜலாகாசம்போலேயும், ஜலமுகம்போலேயுங், கற்பிதந்தானே. இன்னஞ்சொல்லுகிறோம். சிருஷ்டிக்கு முன்னும் ஜீவோபாதிலயத்தில் நாங் காரணோபாதிகரா யிருந்தபடியினாலேயும். மஹாப்பிரளயத்திலேயும், சுழுத்தியிலேயும், மூர்ச்சையிலேயும், சமாதியிலேயும், பிராணன்போகிறதிலேயும், நாம் பிரமந்தானே. இந்த ஆறு அவசரங்களிலேயுங் காரணோபாதிகராய் நாம் பிரமமாகத் தானே யிருந்தோம். மத்தியிலே ஜாக்கிரசொப்பனங்களாகிய இரண்டவசரங்களிலே நாம் அந்தக்கரணத்தோடேகூடி ஜீவனென்றும், போக்தாவென்று மானோம். இந்த ஆறு அவசரங்களிலேயும், பிரமமாகத்தானே யிருந்தோம். பிரமபாவத்தை யடைந்தவனுக்குத் திரும்பவருத்தில்லை. ஜலத்தோடே ஜலங் கூடினால் அந்தஜலந்தானே திரும்ப வரமாட்டாது. அப்படிப்போலத் திரும்ப வருத்தில்லை. ஆனால்; சுழுத்தியாதியிலே யிருந்துந் திரும்ப வருகிறவன் வேறே யொரு ஜீவனென்றுதானே சொல்லவேண்டும்? அப்படியல்ல:—அவன்றானே வாரான். சுழுத்தி யடைந்தவன்றானே திரும்பவரவேண்டுமானால்? ஞானத்தினாலேபிரமத்தை யடைந்தவன்; திரும்பவரவேண்டும். இரண்டிடத்திலேயும் பிரமத்தை யடைந்திருக்கிறது சரிதானே யென்றால்? இரண்டுக்கும் பேதமுண்டு. சுழுத்தியாதியிலே யந்தக்காரணம்:—அவித்தை கருமங்களோடே யடைந்திருக்கிறான்.

அஃது யெப்படியென்னில்? கயிறுந்தோண்டியும், தோண்டியிற் றண்ணீருங் கூடவே தடாக ஜலத்துக்குள்ளே லயித்திருந்தா லெப்படியோ வப்படிப்போலக் கயிற்றைப் பிடித்திழுத்தா லந்தத் தோண்டியு மந்தத் தண்ணீரும் வெளியிலே வரும். அப்படிப்போலே கருமபாசத்தினாலே யந்தவந்தக்கரணமும், அந்த ஜீவனும், சுழுத்தியாதியிலே யிருந்து வெளிக்கு வருவன். நேற்றைக்கு ஜாக்கிர சொப்பனஞ் சுழுத்திகளிலே யநுபவித்த பதார்த்தங்களையும், மறுநாள் ஸ்மரிக்கிறானே; ஆனதால்? அவன்றானே திரும்பவந்தானென்று சொல்லவேண்டும். சுழுத்திக்கும், முக்திக்கும், பேதமுண்டு. முக்தியிலே ஞானத்தினாலே; ஜீவோபாதியாகிய அவித்தையும், கருமங்களும், அந்தக்கரணமும், நசித்துச் சுத்த ஜீவன் சுத்தப்பிரமத்திலே லயித்தபடியினாலே திரும்ப வருத்தில்லை. பாசத்தையு மறுத்து, தோண்டியையு முடைத்து, சுத்தஜலஞ் சுத்தஜலத் தண்ணீரோடே கூடினால் அஃதெப்படித் திரும்ப வாராதோ; கங்காதி நதிகளெல்லாஞ் சமுத்திரத்தை யடைந்து யெப்படித் திரும்ப வாராதோ; அப்படிப் போலவென்றறியத்தக்கது. சைவ வைஷ்ணுவாள்:— ஈசுரனுக்கு அவித்தையில்லை. ஜீவன் கற்பிதனல்ல; ஈசுரரைக் காட்டிலும் பின்னன், அவித்தையாசிரயன், சரீரந்தோறும் பின்னன், ஞானகுணகன், அவித்தையினாலே மூடப்பட்டஞானமுடையவன், பிரமோபாசனையினாலேயவித்தைநீங்கும், மவித்தை நீங்கினாற் சர்வக்ஞத்துவாதி குணங்களோடேகூட வீசுரனைப்போலே யிருப்பன். அவன் முக்தாத்மாவாகிய ஞானியென்று சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள்பிராணதாரணையினாலே ஆத்மாவுக்கு ஜீவனென்கிறபேருண்டாயிற்றென்று சொல்லுவார்கள். அஃதெப்படி யென்றுவர:—

சாந்தோக்கியத்தின் பஞ்சம வத்தியாயத்திற் சொன்னபிரகாரம்ஞானேந்திரியமைந்து,கருமேந்திரியமைந்து,பிராணனைந்து, மனோபுத்தி யிரண்டு,ஆகப் பதினேழும் பிராணனென்று சொல்லப்படும். இவைகளுடைய தாரணையினாலே:—ஜீவனென்றும், பிராணவாயுவென்றும்,பிராணியென்றும், சொல்லப்படுகிறார். சிலபேர் பெரியவாள் தேகேந்திரியாதிகளிலே நானென்ன இதுவென்கிற பிரமையோடே கூடி:—நான் பிராமணன்,நான் க்ஷத்திரியன்,நான்வைசியன்,நான் சூத்திரன், நான் பிரமசாரி, நான் கிரகஸ்தன், நான் வானப்பிரஸ்தன், நான் சந்நியாசி, நான் ஸ்திரீ,நான்புருஷன், நான் தேவதத்தன், நான் யெக்கியதத்தன், நான் வெளுப்பன், நான் கருப்பன், நான் சிவப்பன், நான் அந்தன், நான் செவிடன், நான் மூகன், நான் பசித்தவன், நான் தாகித்தவன், நான் காமி, நான் குரோதி, நான்லோபி, நான்கர்த்தா, நான் போக்தா, நான் அறியேன், நான் அக்ஞானியென்று யிகலோக பரலோக காமியாய், கரும பந்தனாய், கரும பல போக்தாவாயிருக்கிறவாத்மா ஜீவனென்றுஞ்சொல்லுவார்கள். சிலபேர்பெரியவாள் போதமயராயிருக்கிற வாத்மாவுக்குத் தேகேந்திரியபிராண மனோபுத்திசித்தவகங்காரப்பிரகிருதிகளுடைய வத்தியாச சம்பந்தத்தினாலே; ஜீவபாவங் கற்பிதமென்று சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் போதமயராயிருக்கிறவாத்மாவைச் சரீரத்திரயசம்பந்தத்தினாலே ஜீவனென்று சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் போதமயரா யிருக்கிற வாத்மாவுக்குப் பஞ்சகோச சம்பந்தத்தினாலே ஜீவனென்கிறபேர் வந்ததுயென்று சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் போதமயரா யிருக்கிறபரமாத்மா விருபத்து நான்கு தத்துவ சம்பந்தத்தினாலே ஜீவ

னென்கிற பெயரை யடைந்தாரென்று சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் போதமயராயிருக்கிற வாத்மா அவத்தாத்திரய சம்பந்தத்தினலே ஜீவநாமத்தை யடைந்தாரென்று சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் போதமயராயிருக்கிற வாத்மாவானவர் குணத்திரய சம்பந்தத்தினலேயும், வாக்கு மனோதேக சம்பந்தத்தினலேயும்; அந்தக்கரண சம்பந்தத்தினலேயும், ஜீவனென்கிற பெயரை யடைந்தாரென்று சொல்லுவார்கள். ஆத்மா தேகேந்திரியாதி விலக்ஷணர். தேகேந்திரியங்களாவதெது? தேகேந்திரியப் பிராணமனோபுத்தி சித்தமகங்காரப் பிரகிருதிகள். இந்த வெட்டு தத்துவங்களும் அனாத்மா. ஆத்மாவானவர்:— அனாதியாயிருக்கிற அவித்தையாமோகத்தினலே தேகேந்திரியங்களுடனேகூடிக் கர்த்தாப்போலேயும், போக்தாப்போலேயும், விகாரிபோலேயும், குணிபோலேயும், ஜீவன்போலேயுந் தோற்றுகிறார்.

அஃதெப்படிப்போலே யென்னில்? செம்பரத்தம் பூவினுடைய சன்னிதானத்தினலே படிகஞ் சிவப்பாய்த் தோற்றுகிறதுபோலேயும், நீலவஸ்திர சம்பந்தத்தினலே படிகம் நீலம்போலேயும், சித்திரவஸ்திர சம்பந்தத்தினலே படிகஞ் சித்திரவர்ணம்போலேயும், ஜலசூரிய விம்பம் ஜலசம்பந்தத்தினலே யலைகிறதுபோலேயும், கடசம்பந்தத்தினலே கடாகாசஞ்சலிக்கிறதுபோலேயும்,மேகங்கள் துரிதமாயோடுகிறபோது சந்திர நட்சேத்திரங்கள் துரிதமாயோடுகிறதுபோலேயும், ஓடத்திலே யிருக்கிறவனுக்குப் பிரமையினலே கரையிலே யிருக்கிற விருக்ஷங்கள் ஓடுகிறதுபோலேயும், அந்தப்படி யாத்மாவுந் தோற்றுகிறார். வேதாந்தசிரவணத்தினலேயும், குருப்பிரசாதத்தினலேயும், ஆத்மானாத்ம

விசாரத்தினாலேயும், தேகேந்திரியாதிகள் சடமானபடியி னாலேயும், அவைகள் கிரியமானபடியினாலேயும், அவைக ள் நஸ்வரமானபடியினாலேயும், அவைகள் பவுதிகமானப டியினாலேயும், ஆத்மாவல்ல. தேகேந்திரியாதி சாக்ஷியாய்ப் போதமயரா யிருக்கிற தானே பரமாத்மாவென்று யாதொ ருத்த னறிகிறானோ வவனே முக்தாத்மா வாகிய ஞானியெ ன்று சொல்லப்படும். ஆத்மா சரீரத்திரய விலக்ஷணர். சரீ ரத்திரயங்களாவதேதென்றால்? ஸ்தூலசரீரம், சூக்ஷுமசரீ ரம், காரணசரீரமென்று மூன்றுவிதம். இதிற் ஸ்தூலசரீரமா வது? சிரசு பாணியாதியாகிற ஸ்தூலபிண்டம், பஞ்சீகிருத பஞ்சமஹா பூதகாரியம், கருமசஞ்சித சுகதுக்கங்களுக்கெல் லா மிருப்பிடம், சுக்கிலசுரோணிதமயம், அன்னமயம், துவ க்கு, அஸ்தி, மாமிசம், உதிரம், கொழுப்பு, மச்சை, சுனை யு, மூத்திரம், மலம், கிருமி, ரோமம், மிகுந்தகூட்டமாகிய மல மூத்திரப்பை, மலமூத்திரப் பாண்டமென்று சொல்லப் படும். நீர்க்குமிழிபோலே நஸ்வரம். இப்படிப்பட்ட சரீரம் ஸ்தூல சரீரமென்று சொல்லப்படும்.

இதுபோகத்துக்கு யிருப்பிடம். இதற்குப்பிரமாணவாக் கியமேதென்றால்? பஞ்சீகிருத மஹாபூதகாரியமாயும், கரு மத்தால் சம்பாதித்ததாயு மிருக்கிற சரீரம், சுகதுக்கபோக த்துக்கு ஸ்தானமென்று சங்கராசாரியாள் வசனம். இனி ச் சூக்ஷுமசரீரமாவது யாதென்றால்? பஞ்சப்பிராணன்க ளைந்து, ஞானேந்திரியமைந்து, கருமேந்திரியமைந்து, மனோ புத்திகளிரண்டு, ஆகப் பதினேழுஞ் சூக்ஷும சரீரமென்று சொல்லப்படும். இதுபோகசாதனம். இதுஜீவோபாதி. இதற் குவாக்கியப்பிரமாண மேதென்றால்? பஞ்சப்பிராணமனோபு த்திதசேந்திரியம் ஆகப் பதினேழும் அபஞ்சீகிருத பூதவுற்ப

த்தி. சூக்ஷ்மசரீரம் போகசாதனமென்று சங்கராசாரியாள் வசனம். காரணசரீரமாவதேதென்றால்? அவித்தை, அநாதி, அநிர்வசநீயம், பிரகிருதியென்றுஞ் சொல்லப்படும். இந்தக்காரண சரீர மீசுரவுபாதியென்றுஞ் சிலபேர் சொல்லுவார்கள். சூத்திரசம்மதம்:—ஸ்தூலசூக்ஷ்மங்களுக்குக் காரணமானபடியினாலே காரணசரீரமென்று சொல்லப்படும். காரணசரீரமென்கிற பதத்துக் கர்த்தம்; ஞானத்தினாலே நாசமாய்ப்போகிறபடியினாலே சரீரமென்று சொல்லப்படும். காரணசரீரமென்றும், காரணோபாதியென்றும், பெயர். அநாதியாயும், இன்னபடி யென்று சொல்லக்கூடாததாயும், யாதொரு வவித்தையுண்டோ வதற்குக் காரணசரீரமென்றும், காரணோபாதியென்றும், பெயராத்மபோதத்திற் சொல்லியிருக்கிறதே; இதற்கு வாக்கியப்பிரமாணம். போதமயராக விருக்கிற வாத்மாவானவர் ஜாக்கிரதிசையிலே ஸ்தூலதேகத்தோடேகூடி விசுவனென்கிற பெயரோடுங் கர்த்தாப்போலேயும், போக்தாப்போலேயும், விளையாடுவர். சொப்பனதிசையிலே லிங்கதேகத்துடனே கூடித் தைசதனென்று நாமம்பெற் றனேக சொப்பனங்களோடேகூடிக் கர்த்தாப்போலேயும், போக்தாப்போலேயும், விளையாடுவர். சுழுத்தியிலே காரணசரீரத்தோடே கூடிப் பிராக்ஞனென்கிற பேரோடு மானந்தங்களை யநுபவிக்கிறது போலே தோற்றுவர். சின்மயரா யிருக்கிற வாத்மாவானவர் சரீரத்திரய சம்பந்தத்தினாலே கர்த்தாப்போலேயும், போக்தாப்போலேயும், விகாரிபோலேயும், குணிபோலேயும், ஜீவன்போலேயுந் தோற்றுவர். வேதாந்த சிரவணத்தினாலேயும், குருப்பிரசாதத்தினாலேயும், சரீரத்திரயங்களுங் கடம்போலே திரிகியமானபடியினாலேயும், சடமானபடியி

னாலேயும், நஸ்வரமானபடியினாலேயும், போகசாதனமானபடியினாலேயும், அநாத்மா. சரீரத்திரய சாக்ஷியாய் இருக்குருபரா யிருக்கிற தானே பரமாத்மாவென் றைப்போதறிகிறானோ; அப்போதே ஜீவன் முக்தன்.

ஆத்மா பஞ்சகோச விலக்ஷணர். பஞ்சகோசங்களாவதேதென்றால்? அன்னமயம், பிராணமயம், மனோமயம், விக்ஞானமயம், ஆனந்தமயமென்று பஞ்ச கோசங்களுள. அதிலன்னமயகோசமாவதேதென்றால்? அன்னவிகாரத்தினாலேயும், சுக்கிலசுரோணிதங்களாலேயு முண்டானது. இதைத்தானே ஸ்தூலதேகமென்றுசொல்லப்படும். இது துவக்காதிலக்ஷணமாயிருக்கிறதேகம். பிராணமயகோசமாவதேதென்றால்? பஞ்சப்பிராணன்களும், கருமேந்திரியங்களும், கூடிப் பிராணமய கோசமென்று சொல்லப்படும். இது அன்னமயகோசத்துக்குள்ளே யிருக்கும். மனோமய கோசமாவதேதென்றால்? மனதும் ஞானேந்திரியங்களுங் கூடி மனோமய கோசமென்று சொல்லப்படும். விக்ஞானமய கோசமாவதேதென்றால்? புத்தியும் ஞானேந்திரியங்களுங்கூடி விக்ஞானமயகோசமென்று சொல்லப்படும். பிராணமயகோசங் கிரியாசத்தி. மனோமயகோச மிச்சாசத்தி. விக்ஞானமய கோசம் ஞானசத்தி. இந்தமூன்று கோசங்களும்ஜீவோபாதி. இனி ஆனந்தமயகோச மாவதேதென்றால்? பிரியம், மோதம், பிரமோதம், ஆனந்த மிந்த நாலு விர்த்திகளோடுங் கூடிய அவித்தையென்றுசொல்லப்படும். போதமயராயிருக்கிறஆத்மாவானவர்:—ஜாக்கிரதிசையிலே யன்னமயகோசத்தோடேகூடிக் கர்த்தாப்போலேயும், போக்தாப்போலேயு மிருப்பர். சொப்பன திசையிலே பிராணமய, மனோமய, விக்ஞானமய கோசங்களுடனேகூடிக் கர்த்தாப்போலே

யும், போக்தாப்போலேயுந் தோற்றுவர். அநேக சொப்பனங்களெல்லாங் காணுவர். சுழூத்தியிலே ஆனந்தமய கோசத்தோடே கூடிப் போக்தாப்போலே யிருப்பர். ஜாக்கிறதிசையிலே புருவமத்தியிலேயிருந்துகொண்டு மனோபாதிகராய், ஸ்தூலோபாதிகராய், விசுவனென்கிறபெயருடனே கூடிஸ்தூலவிஷயபோகங்களை யநுபவிக்கிறவனைப்போலே யிருப்பர். சொப்பனதிசையிலே கண்டத்திலேயிருந்துகொண்டு சூக்ஷுமதேகவுபாதிகராய்த் தைசதனென்கிற பெயருடனே கூடி கர்த்தாப்போலேயும், போக்தாப்போலேயு மிருப்பர். சுழூத்தியிலே, இருதயத்திலே, அவித்தியோபாதிகராய் பிராக்ஞனென்கிற பெயருடனே கூடி கூடஸ்தப் பிரமமாகவிருந்துகொண்டுசுவானந்தங்களை யநுபவித்துக்கொண்டு போக்தாப்போலேயிருப்பர். ஆனந்தமய கோச மீசுரோபாதியென்று சூத்திரக்காரர் மதம். ஞானமயமா யிருக்கிறவாத்மாவானவர் அவித்தையினாலே பஞ்சகோசங்களுடனே கூடித் தத்தன்மயர்போலேயும், பூருவஞ்சொன்ன கர்த்தாப்போலேயும், போக்தாப்போலேயும், விகாரிபோலேயும், குணிபோலேயும், ஜீவன்போலேயுந், தோற்றுகிறார். பஞ்சபாத்திரங்களை யடுக்கிவைத்தா லொன்றுக்குள்ளே யடங்கியொன்றாக தோற்றுகிறதுபோலவும், வாழைமரம்போலவும், முஞ்சிப் புல்லுப்போலவும், உமித்தண்டுலம் போலவும், கத்தியு முறையும்போலவும், பஞ்சகோசங்க ளிருக்குமென்று சொல்லப்படும். வேதாந்த விசாரத்தினாலேயும், குருப்பிரசாதத்தினாலேயும், பஞ்சகோசங்களும்:—என்னுடைய சரீரம், என்னுடைய பிராணன், என்னுடையமனது, என்னுடைய புத்தி, என்னுடைய வானந்தமென்று அநுபவத்தினாலே கிரிசியங்கள். குட்டியம்போலே சடங்கள். புற்புத

ம்போலே நஸ்வரங்கள். ஆனபடியினாலே:—இவைகளைத்தமா. பஞ்சகோசவிலக்ஷணராய்ச் சாக்ஷியாய்ப் பிரக்ஞானமயரா யிருக்கிறதானேபரமாத்மாவென் றெப்போதறிகிறுனோ; அப்போதே முக்தனாகிய ஞானியென்று சொல்லப்படும். இதற்கு வாக்கியப்பிரமாண மேதென்றால்? நிரவயவமாகிய வாத்மா பஞ்சகோசாதி சம்பந்தத்தினாலே தத்தன்மயர் போலேயிருக்கிறார்.

அஃது யெப்படியென்றால்? நீலவஸ்திராதி சம்பந்தத்தாற் படிக்மெப்படி யதன் மயமாகிறதோ வப்படியென்று சங்கராசாரியாள் வசனம். ஆத்மா விருபத்துநான்கு தத்துவ விலக்ஷணர். இருபத்துநான்கு தத்துவங்களாவதேதென்றால்?பஞ்சமஹாபூதங்களைந்து,ஞானவிந்திரியங்களைந்து, கருமேந்திரியங்களைந்து,ருபரசகந்த பரிசசப்தங்களைந்து,மனோவாங்கார புத்திகள்மூன்று,மூலப்பிரகிருதியொன்று,ஆகவிருபத்துநான்குதத்துவங்களென்று சொல்லப்படும்.போதமயரா யிருக்கிற வாத்மா விருபத்தைந்தாந் தத்துவமென்று சொல்லப்படும். சிலபேர் பவுராணிகள்தசப்பிராணன்களையு மிருபத்துநாலு தத்துவங்களுடனேகூடக் கூட்டிச் சொல்லுவார்கள். போதமயராயிருக்கிற பரமாத்மாவானவர்:—விகாரிகளாய், வியாபாரிகளாய், குணிகளாய், கிரியாசிரயங்களா யிருக்கிற விருபத்துநான்கு தத்துவங்களோடுங்கூடி யத்தன்மையர் போலேயும், கர்த்தாப்போலேயும், போக்தாப்போலேயும், விகாரிபோலேயும், குணிபோலேயும், ஜீவன்போலேயும், தோற்றுகிறார். வியாபாரிகளாயிருக்கிற விந்திரியங்களோடேகூடி நான் பார்த்தேன், நான் கேட்டேன், நான்சொன்னேன், இவைமுதலாயிருக்கிறவிந்திரியப்பிரமைகளைத் தம்மிடத்திலே யாரோபித்து விளை

யாடுகிருர். வேதாந்த சிரவணத்திஞலேயும், குருப்பிரசா தத்திஞலேயும், இருபத்துநான்கு தத்துவங்களையும், ஆத் மாவையும், பிரித்தறிந்து; நெற்குத்துகிறவுபாயத்திஞலே நெல்லுமியைத் தள்ளித் தண்டுலத்தைக் கிரகிக்கிறதுபோல வும், தானியத்தை யெடுத்துக்கொண்டு வைக்கோலைத் தள் ளுகிறதுபோலவும், ரசத்தைக் கிரகித்துக் கரும்புச்சக்கை யைத் தள்ளி விடுகிறதுபோலவும், தாம்பூல ரசத்தைக் கிரகித்துத் தாம்பூல கவளத்தை தள்ளுகிறதுபோலவும், அனுத்மாவா யிருக்கிற விருபத்துநான்கு தத்துவங்களையு மாத்மாவல்லவென்று தள்ளித் தத்துவங்கள் சடமாகியும், கிரியமாயும், நஸ்வரமாயு மிருக்கிறபடியிஞலே யனுத்மா த்தானேயென்று நிச்சயித் திருபத்துநான்கு தத்துவங்களு க்குஞ் சாக்ஷியாய்ச் சச்சிதானந்த லக்ஷணரா யிருக்கிறதா னே பரமாத்மாவென் றெப்போதறிகிருனே; அப்போதே ஜீவன்முக்தன். இது விப்போ தத்துவக்ஞான மென்றும், பிரகிருதி புருஷவிவேக மென்றும், ஆத்மானுத்ம விவேக மென்றும், சிற்சடவிவேக மென்றுஞ் சொல்லப்படும். இது சாங்கிய மதம். ஆத்மா வவத்தாத்திரய சாக்ஷி, அவத்தாத் திரயங்களாவ தேதென்ருல்? ஜாக்கிரவவத்தை சொப்பன வவத்தை,சுழுத்தியவத்தை யென்றுமூன்றுள. அதில் ஜாக் கிராவவஸ்தையாவ தேதென்ருல்? பாகியேந்திரியங்களி ஞலே ஸ்தூல விஷயாநுபவம் ஜாக்கிராவவத்தை யென்று சொல்லப்படும். சொப்பனுவவத்தையாவ தேதென்ருல்? பாகியேந்திரியங்க ளபாவமாயிருக்கிறபோ தந்தரேந்திரி யத்திஞலே சூக்ஷுமங்களாய்ப் பொய்களா யநிர்வசநீய ங்களாய் வாசனுமயங்களா யிருக்கிற விஷயாநுபவஞ் சொப்பனமென்று சொல்லப்படும். சுழுத்தியவத்தையாவ

தேதென்றால்? பாகியேந்திரியங்களும், அந்தரிந்திரியமாகிற மனதும்,லயித் தவித்தையோடேகூட வவித்தையாவிர்த்தி மயங்களா யிருக்கிற பிரியம், மோதம், பிரமோதம், ஆனந் தமென்கிறவிடயாநுபவஞ் சுழுத்தியென்று சொல்லப்படும். சிலபேர் ஜீவனுக்குக் கூடஸ்தராகிய பிரமத்தினிடத்திற் சேர்க்கை சுழுத்தியென்று சொல்லுவார்கள். போதமயரா யிருக்கிற ஆத்மா ஸ்தூலதேகத்தோடேகூடி ஜாக்கிரபோ கங்களை யநுபவிப்பர். சூக்ஷுமதேகத்தோடேகூடிச் சொப் பனபோகங்களை யநுபவிப்பர். காரணசரீரத்தோடேகூடிச் சுழுத்தி யநுபவிப்பர். தார்க்கிகாள், வைஷ்ணுவாள், சை வாள், சொப்பனுவவத்தை ஜாக்கிரத்தினுடைய ஸ்மரணை யென்றும், சொப்பனஞ் சத்தியந்தானே யென்றும், சொல் லுவார்கள்.வேதாந்திகள் சொப்பன மநிர்வசநீயமா யசத்தி யமென்று சொல்லுவார்கள். ஜாக்கிரப்பிரபஞ்சஞ் சொப்ப னப்பிரபஞ்சம் போலேயும், இந்திர சாலவித்தை போலே யும், பொய். சித்திரசபைபோலே அநிர்வசநீயம். கற்பிதம். நாமரூபமெல்லாம்:—வியவகாரிகசத்தியம். ஜாக்கிரத்திற்பி ராதிபாதிகசத்தியம்.சொப்பனத்திற்பாரமார்த்திகசத்தியம். சுழுத்திப்பிரமத்திற் பிரமவெதிரிக்தம். சகலபிரபஞ்சமும்பி ரமத்தினிடத்திலே மாயையினுலே கற்பிதம். பிரமந்தானே சத்தியம். மேகமானது சூரியனை யெப்படி மறைக்கிறதோ; நித்திரையானது மனுஷனை யெப்படி மறைக்கிறதோ;ஜாக் கிரக்ஞானத்தை மறைத்து மயக்கசத்தி சொப்பனத்தையெ ப்படி யுண்டாக்கிறதோ; அப்படி யவித்தை யாத்மாவை மறைத்துஆத்மாவினிடத்திலேஜாக்கிரத்தைக்கற்பிக்கிறது. வேதாந்திகள்:— அவத்தாத்திரயங்க ளந்தக்கரணதருமமா ஆத்மதருமமல்லவென்றும், அந்தக்கரணவத்தியாசத்தினு

லே யவத்தாத்திரயங்க ளாத்மதருமம்போலே தோற்று கிறதென்றும், அவத்தாத்திரயங்க ளாத்மாவினிடத்திலே கற்பிதமென்றுஞ் சொல்லுவார்கள். அதேதென்றவர:— அன்னுவய விதிரேகங்களினாலே யந்தக்கரணதருமந்தானே. அஃதெப்படியென்றால்? ஜாக்கிரதிசையிலேயும், சொப்பனதிசையிலேயும், அந்தக்கரணமுண்டு. அதினுடைய தருமமாயிருக்கிற ஜாக்கிரசொப்பன வுபாதிகளிலுங் கண்டோம். சுழுத்தியி லந்தக்கரணமில்லை. ஜாக்கிராதிகளு மில்லை. ஆனதால்; அவத்தாத்திரய மந்தக்கரணதருமந்தானே. ஆத்ம தருமமல்ல. அன்னுவய விதிரேகங்களாவதேதென்றால்? அது வுண்டானா லது வுண்டென்கிற தன்னுவயம். அதுவில்லாவிட்டா லது வில்லையென்கிறது விதிரேகம். அஃதெப்படியென்னில்? தந்துவுண்டானாற் படமுண்டென்ப தன்னுவயம். தந்துவில்லாவிட்டாற் படமில்லையென்பது விதிரேகம். சைவ வைஷ்ணுவாள்:—அவத்தாத்திரயங்களை யாத்ம தருமமென்று சொல்லுவார்கள்.

போதமயராயிருக்கிற வாத்மா வந்தக்கரணத்தோடே தத்தாய பிண்டம்போலே ஐக்கியப் பிரமையை யடைந்து அதுபோலே யானார். அந்தக்கரணத்தைப் பொருந்தி தேகத்தோடேகூடி யவத்தாத்திரயங்களை யநுபவிக்கிறதுபோலே தோற்றுவர். வேதாந்தவிசாரத்தினாலேயும், குருப்பிரசாதத்தினாலேயும், தேகாந்தக்கரணங்களைப்பிரித்தறிந்தந்தக்கரணதருமங்க ளவத்தாத்திரயங்க ளாத்மாவுக் கில்லையென்றறிந்து:—அவத்தாத்திரய சாக்ஷியாய், தேகாந்தக்கரண சாக்ஷியாய், போதமயரா யிருக்கிறதுதானே பரமாத்மாவென் றெப்போ தறிகிறானோ வப்போதே முக்தாத்மா ஆத்மாவானவர், குணத்திரயவிலக்ஷணர். குணத்திரயங்

ளாவதேதென்றால்? சத்துவ ரசோ தமோகுணங்கள். குண சமட்டி சாமியாவத்தை பிரகிருதியென்று சொல்லுவார்கள். பிரகிருதி முதலான சகல தத்துவங்களுங் குணத்திரயாத்மகமென்று பெரியவாள் சொல்லுவார்கள். இருபத்துநான்கு தத்துவ விலக்ஷண ராத்மாவென்கிற விசாரத்தினாலே குணத்திரய விலக்ஷண ராத்மாவென்றுஞ் சொல்லப்படுகிறது. குணங்கள் மூன்றும் பிரகிருதி அம்சந்தானே; ஆத்மாவுக்கில்லை. பிரகிருதி சம்பந்தத்தினாலே குணத்திரயங்க ளாத்மாவினிடத்திலே கற்பிதமாய்த் தோற்றுகிறது. வன்னியிலே யிருக்கிற உஷ்ணத்துவம் பாண்டத்துக்குள்ளிருக்கிற ஜலத்திலே தோற்றுகிறதுபோலவும், புஷ்ப பரிமளம் வாயுவினிடத்திலே தோற்றுகிறதுபோலவும், ஜலசயித்தியம் பூதலத்திலே தோற்றுகிறதுபோலவுந் தோற்றுகிறது. வேதாந்தவிசாரத்தினாலேயும்,குருப்பிரசாதத்தினாலேயும், நிர்க்குண ராத்மாவென்றறிந்து:—குணத்திரய சாக்ஷியாய் ஜோதிசொரூபனா யிருக்கிறதானே பரமாத்மாவென்றெப்போ தறிகிறானோ; அப்போதானே முக்தாத்மா. ஆத்மாவானவர் அந்தக்கரண விலக்ஷணரென்றும், வாக்குமனோதேக விலக்ஷணரென்றும், இவை யிரண்டும் ஸ்புடந்தானே. இப்படிப்பட்ட ஆத்மாவானவர் சித்தோசடமோ வென்றால்? தார்க்கிகா ளாத்மா சடமயர், மேகம்போலே யந்தக்கரண சம்பந்தத்தினாலே வாத்மாவினிடத்திலே யறிவு பிறக்கிறது, மேகத்திலே மின்வெட்டுப்போல வென்று சொல்லுவார்கள். சைவ வைஷ்ணவா ளாத்மாவை ஞானகுணகர், ஞானமயரென்று சொல்லுவார்கள்.

தீபமுந் தீபப்பிரபை போலவுஞ் சூரியனுஞ் சூரியப்பிரபைபோலவும், சந்திரனுஞ் சந்திரப்பிரபைபோலவு

மென்று திருஷ்டாந்தஞ் சொல்லுவார்கள். மீமாம்ஸாள் மின்மினிப் பூச்சிபோலவும், குன்றுமணிபோலவும், சிற்சடாத்மாவென்று சொல்லுவார்கள். சாங்கியாளும் யோகிகளுஞ் சின்மயராத்மாவென்று சொல்லுவார்கள். வேதாந்திகள் சின்மயரென்று சொல்லுவார்கள். அந்தக்கரணசம்பந்தத்தினாலே யாத்மாவுக்கு ஞானாசிரயத்துவ மென்று தார்க்கீகாள்சொல்லுவார்கள். ஆத்மா ஞானாசிரயரானபடியினாலே சேதனரென்றுஞ் சொல்லுவார்கள். ஆத்மா போதமயரென்று வேதாந்தங்களிலே யாயிரமிடத்திலே சொல்லியிருக்கிறது. ஆத்மா சுயம்பிரகாசரான படியினாலேயும், சாக்ஷியானபடியினாலேயும், பிரமமானபடியினாலேயு மிவர் சின்மயர்தானே. ஆத்மாவானவ ராதியோ? அநாதியோ? ஆத்மாதேகரோ? தேகேந்திரிய பின்னரோ? ஒருதேகத்திலே யொருவாத்மாவோ? அனேகாத்மாவோ வென்றால்? பவுத்தாள்:—தேகமேயாத்மா. போகமேமோக்ஷம். கண்ணினாலே பிரத்தியக்ஷமாகக் கண்டதேமெய். அதுவே பிரமாணம். வேதசாஸ்திரங்க ளெல்லாம் பொய். ஈசுரனும் பொய். பரலோகமும் பொய். கருமத்தநாலே ஸ்திரீபுருஷாள் கூடிப் பிரபஞ்ச வுற்பத்தியென்று சொல்லுவார்கள். தேகநாசந்தானே; மோக்ஷமென்றுஞ் சொல்லுவார்கள். சிலபேர் பவுத்தா ளிந்திரியங்கள்தானே யாத்மாவென்று சொல்லுவார்கள். சிலபேர் பவுத்தாள் பிராணன்றானே யாத்மாவென்று சொல்லுவார்கள். சிலபேர் பவுத்தாள் மனதுதானே யாத்மாவென்றுசொல்லுவார்கள். சிலபேர் பவுத்தாள் புத்தியே யாத்மா வென்று சொல்லுவார்கள். சிலபேர் பவுத்தாள் சூனிய மாத்மாவென்று சொல்லுவார்கள். வைதீகாள் போதமயரா யிருக்கிற வாத்மா தேகேந்திரியாதி விலக்ஷணர்,

தேகேந்திரியாதி சாக்ஷியா யிருக்கிறவர், நானென திரு வென் றநுபவரூபியா யிருக்கிறவ ரப்படிப்பட்ட வாத்மா சட்பாவவிகாரசூனியர், நித்தியர், அஜுதியென்று சொல்லு வார்கள். ஆத்மாசாதியென்றும்,சட்பாவவிகாரங்களோடே கூடினவரென்றும், பவுத்தாள்சொல்லுவார்கள். சாதியாவ தெப்படியென்றவர:— பிள்ளைபிறந்தால்; பிறந்தவுடனே செய்கிற கருமாதிகளும் பண்ணுகிறார்கள். பாலன், உவா, விருத்தன், செத்தானென்று பிரத்தியக்ஷமாகக் காண்கிற படியினாலே யாத்மத்துவஞ் சாதிதானே. சட்பாவவிகாரங் களுடனே கூடினவரென்றவர:—சட்பாவவிகாரங்களாவ தேதென்றால்? கருவிலே யிருத்தல், பிறத்தல், வளர்தல், பருத்தல், குறைதல், நசித்த லிவைகள்சட்பாவவிகாரங்கள். இந்தவாறுந் தேகவிகாரங்க ளாத்மாவுக்கில்லை.இந்தத்தேக கருமங்களு மாத்மாவினிடத்திலே தோற்றுகிறது. தேகத்தி லே முக்கியதருமங்க ளாத்மாவினிடத்திலே யமுக்கியகற்பி தம். ஆத்மா சட்பாவவிகாரசூனியர்: அஜுதிநித்தியர்தானே.

ஆத்மாவுக்கு ஜனனமரண மங்கீகரித்தால் வெகு சுரு தி விரோதம். ஆத்மாவுக்கு அநித்தியத்துவமும் வரும். அநித்தியத்துவ மங்கீகரித்தால்; பவுத்தமதமாம். அந்தமத த்திற்தூஷணமேதென்றவர:— ஆத்மாவுக் கநித்தியத்துவ மங்கீகரித்தால்;தேகத்தோடேகூட, ஆத்மாப்பிறந்திருக்கிறா ரென்று சொல்லவேண்டும். இந்த ஜன்மத்திலே பண்ணின யெக்கிய தான தபசு தருமங்களுக்கும், பாவங்களுக்கும், போகாநுபவங்க ளில்லாமல் நாசம்வரவேண்டும்? ஜன்மாந் திரத்திலே பண்ணின கருமங்களுங் கர்த்தாவா யிருக்கிற தேவதத்தனும் நசித்துப் போனபடியினாலே இப்போது தேவதத்த னனுபவிக்கிற சுகதுக்காநுபோகம் முன்செய்த

கருமமில்லாமற்றனே வரவேண்டும்? கருமமன்றியிலே சுக துக்கங்க ளநுபவிக்கவேண்டும்? உண்டான சிசுவுக்கு முன் வாசனைருணம் நஷ்டமாய்ப்போனபடியினாலேயும், இஷ்டசாதனஞானமில்லாதபடியினாலேயும், தன்னியபானத்திலே பிரவிருத்தியில்லாதேபோகவேண்டும்? முன்ஜன்மத்திலேசெய்த கருமங்களே அவென்றங்கீகரியாவிட்டா லோகத்திலேசில பேருக் கைஸ்வரியம், சிலபேருக்குத்தாரித்திரம், சிலபேருக் குச்சுகம், சிலபேருக்குத் துக்கம், சிலபேருக்குத்தீர்க்காயுசு, சிலபேருக்கு அற்பாயுசு, சிலபேரரோகிகள், சிலபேர்ரோகிகளென்கிற போகவிசித்திரங்க ளில்லாதே போகவேண்டும்? ஆனபடியினாலே; இதற்கேதுவாய்ப் பூருவ கருமங்களுமுண்டு. கருமகர்த்தாவாயிருக்கிற ஆத்மா நித்தியர்தானே யென் றங்கீகரிக்கவேண்டும்? ஆத்மா நித்தியரென் றீசுரகற்பிதமா யிருக்கிற வேதசாஸ்திரங்க ளெல்லா முறை யிடுகின்றன. அஃதப்பிரமாணமானால்; மாதாவென்றும், பெண்ணென்றும், சகோதரியென்று மிவர்களைத் தொடலாகாதென்கிற வாசாரமுதலியதெல்லாஞ் சரியாகப்போகவேண்டும்? அமூலமாகப் போகவேண்டும்? அப்படிச்சொல்லுகிற பவுத்தம் அற்ப மதந்தானே.

ஆனதா லாத்மாவானவர் நித்தியர்தானே. சடூர்மிரகிதர்தானே. சடூர்மியாவதேதென்றால்? ஜனனமரணமிரண்டுந் தேகதருமம், பசிதாகங்கள் பிராணதருமம், சோகமோகங்க ளந்தக்கரணதருமம், இந்தச்சடூர்மிகளு மாத்மாவினிடத்திலே கற்பிதமாய்த் தோற்றுகிறது. ஆத்மாவானவர் அணுபரிமாணமோ? மத்திம பரிமாணமோ? விபுபரிமாணமோ வென்றவர:—ஆத்மா மத்திம பரிமாணர். சாவயவர். தேக மெவ்வளவோ அவ்வளவறிகிறவர். மசகாதி தேகங்களுக்கு

ள்ளேயு மதுக்குத்தக்கதா யிருப்பர்.கஜாதிதேகங்களுக்குள்ளேயு மதுக்குத்தக்கதா யிருப்பர். மனுஷாதிதேகங்களுக்குள்ளேயும், பசுவாதி தேகங்களுக்குள்ளேயும், பக்ஷியாதி தேகங்களுக்குள்ளேயு மந்தந்தத் தேகத்துக்குத் தக்கதாக விருப்பர். ஆனபடியினாலே யாத்மா மத்திமபரிமாணரென்று பவுத்தாள் சொல்லுவார்கள். அப்படி அவவயத்துடனே கூடியிருப்பாரென் றங்கீகரித்தா லாத்மாவுக் கனித்தியத்துவம்வரு மதை யாத்மாவுக் கங்கீகரித்தாற் பண்ணின கருமத்துக்குப் பலமில்லாமலும், பண்ணாத கருமபலம் வருகிறதாகவும், முன்சொன்னபடிதோஷம்வரு மானதால்; மத்திமபரிமாண வாதங்கூடாது. சைவ வைஷ்ணவா ளணுபரிமாண மாத்மா:—மசகாதி தேகங்களுக்குள்ளேபிரவேசிக்கிறார்; அந்தந்தத்தேகத்திலேயிருந்தும் வெளியிலேபோகிறார். கஜாதி மனுஷாதி பசு பக்ஷியாதி தேகங்களுக்குள்ளே பிரவேசிக்கிறார்; அந்தத்தேகங்களுக்குள்ளே பிரவேசித்து வெளியிலேபோகிறார். அதுமாத்திரமல்ல:—சுவர்க்கத்துக்குப்போகிறார், நரகத்துக்குப்போகிறார், திரும்பவும் வருகிறானபடியினாலே யணுத்துவ மில்லாதே போனா லாத்மாவுக்கு லோகாந்திரத்திலே கமனாகமனம், தேகங்களுக்குள்ளே பிரவேச மிந்தத் தருமங்களெல்லாங் கூடாது. ஆனதா லாத்மா வணுத்தானேயென்று சொல்லுவார்கள். அது கூடாதாத்மா விபுதானே.ஆத்மாவுக் கிந்தத்தேகத்திலேநின்றும்நீங்கி யின்னொருதேகத்திற் பிரவேசிக்கிறது கமனாகமனாதிகள். இவைகளெல்லா மந்தக்கரண வுபாதியைப்பற்றிக் கற்பிதமாகத் தோற்றுகிறது. போதமயராயிருக்கிற பரமாத்மா மஹாகாசம்போலே யொருத்தர். அனேககடங்கள் போல வனேகவந்தக்கரணங்கள். அனேக கடாகாசங்கள்

போல வனேகவந்தக்கரணாவச்சின்ன சைதன்னியங்கள் ஜீவாளென்று சொல்லப்படும்.

ஜீவத்துவங் கற்பிதம். வியாபகராய் விபுவாயிருக்கிற வாத்மாவினிடத்திலே யந்தக்கரண யோகத்தினாலே சகல தருமங்களுங் கற்பிதமென்று வேதாந்த டிண்டிமையாகிய மூரசறைகிறது. ஆத்மா விபுவென்றுதானே சொல்லவேண்டுமென்றுவர:— சர்வத்திராகாரியோபலமபாது விபு இதற்குத் தாற்பரியம் ராமேசுரத்திலேயிருக்கிற தேவதத்தனுக்குக் கோலக்கொண்டையிலேயிருந்தும்வருஷச்சாப்பாடுவருகிறது, அது அதிஷ்டங்காரணமென்று சொல்லவேண்டும்? பலத்தை யிழுக்கிறதிலே காரணமாயிருக்கிற அந்த வதிஷ்டகுணம் ராமேசுரத்திலே யிருக்கிற தேவதத்தனுடைய வணுவாயிருக்கிற வாத்மாவின்பேரிலே யிருந்தது. அந்தப்பலத்துக்கு மதிஷ்டத்துக்குஞ் சம்பந்தமில்லை. ஆனபடியினாலே ராமேசுரத்திலே யிருக்கிற தேவதத்தனுக்குக் கோலக்கொண்டையிலே யிருந்துவருகிற வருஷாசனப் பலப்பிராப்தியில்லாதேபோகவேண்டும்? ஆனதா லாத்மாவிபு. இன்னஞ் சொல்லுகிறோம். ஆத்மா வணுவானால்; சிரசிலே யாத்மாவிருந்தால், காலிலே கிள்ளினால் நோகாமற் போகவேண்டும்? அல்லது காலிலே யாத்மாவிருந்தாற் றலையிலே குட்டினால் வலியாமற்போகவேண்டும்? இரண்டிடத்திலேயு மாத்மாவிருக்கிறானா லணுத்துவமில்லாதே போகவேண்டும்? ஆத்மா வணுவானால் அட்டாவதானமில்லாமற் போகவேண்டும்? சரீரத்திலே பத்துப்பேர் பத்திடத்திலே யொருமித்துக் கிள்ளினாற் பத்திடத்திலேயும் வலியாமற் போகவேண்டும்? ஆத்மா வணுத்தானே யவனுடைய வறிவு தீபப்பிரபைபோலே யாத்மா தீபம்போலே யென்று சொன்

னுல்; சுகதுக்கங்க ளாத்ம தருமமோ? ஞானதருமமோ?ஞானதருமமாஞ லென்னிடத்திலே வலிக்கிறது யென்னிடத்திலே சுகதுக்கமென்கிற வியவகாரங்கூடாது. சுகதுக்கங்கள் ஞானகுணமல்ல வாத்மதருமமென்று சொன்னுல்; நீ யணுவென்று சொல்லிய வாத்மாவுக்குக் காலிலேயுஞ்சிரசிலேயுமேகமாய்ச் சுகதுக்காநுபவங் கூடாதென்று முன்னமே தூஷித்திருக்கிறேமே? அப்படியில்லையாத்மாவுக்கும்,ஞானகுணத்துக்கும், தீபப்பிரபைபோலே பேதமில்லை. ஆனபடியினுலே சுகதுக்காநுபவங் கூடுமேயென்று சொன்னுல்? சுகதுக்கங்களு மாத்மதருமமென்று வங்கீகரித்தியேயானுல்? நீ இச்சியாமலிருந்தாலு மாத்மாவுக்கு விபுத்துவம் வந்தது. ஆனபடியினுலே யாத்மா விபுதானே. நீசொன்னவணுத்துவ மாத்மாவுக்குக்கூடாது. ஆத்மாவிபுவாஞ லிந்தத்தேகம் விட்டு வேறுதேகத்திற் பிரவேசித்து லோகாந்தர கமனுகமனுதிகள் கூடாதென்று சொன்னியேயானுல்? கடாகாச கமனுகமனம்போலே யந்தக்கரண சம்பந்தத்தினுலே கூடும். அந்தக்கரண தருமங்களா யிருக்கிற பிரவேஷாதிகளெல்லாம் விபுவாயிருக்கிற வாத்மாவினிடத்திலே கற்பிதமாகத் தோற்றுகிறது. ஆனபடியினுலே யாத்மா விபுதானே. ஆத்மாவானவர் கர்த்தாவோ ? அகர்த்தாவோ? புத்திகர்த்தாவோ? அகர்த்தாவோவென்று வர:— வேதாந்திகள் மனேபுத்தி கர்த்தாவென்றுசொன்னுர்கள். அதற்குச் சாங்கியாள் சடமாயிருக்கிற வந்தக்கரணத்துக்குக் கர்த்துருத்துவங் கூடுமோ ? கூடாதென்கிற சங்கைக்கி, ஆத்மசன்னிதானத்தினுலே யந்தக்கரணத்துக்குக் கர்த்துருத்துவங்கூடும். அதுவல்லாமலந்தக்கரணம் விகாரியானபடியினுலேயுங் குணியானபடியினுலேயும், கிரியாசிரயத்துவமா

கிற கர்த்ருத்வ மந்தக்கரணத்துக்குத்தானே சொல்லவேண்டும். நிருவிகாரராய், நிர்க்குணராய், அசங்கராயிருக்கிறவாத்மாவுக்குக்கர்த்ருத்வங் கூடாதென்றுத்தரம்.

மனதினாலே சிந்திக்கிறேன், மனதினாலேபாவனை பண்ணுகிறேனென்கிறவிடத்திலே மனதுக்குக் கரணத்துவங் கண்டிருக்கிறோம். கரணமாகியமனதுக்குக்கர்த்ருத்துவங் கூடாது. கரண கர்த்ருத்துவ மிரண்டு மனதுக்குத்தானே யங்கீகரிக்கில்விரோதமென்றுற்சிற்சன்னிதானத்தினாலேசகலமுங் கூடுமென்றும், ஆத்மா வசங்கர், உதாசினர், சுபாவர், நித்தியர், நிருவிகற்பர், நிராகாரர், நிர்க்குணர், நித்தசுத்தர், போதசொருபர். பிரகிருதி அந்தக்கரணத்து அவிவேகத்தினாலேயாத்மாவுக்குச்சமுசாரம்வருகிறதுபிரகிருதிக்கிக்கர்த்ருத்துவஞ் சுதந்தரமென்றும், பிரகிருதி புருஷவிவேகத்தினாலே மோக்ஷமென்றும், வேதாந்திகளுக்குள்ளே சாங்கியாளங்கீகரித்தார்கள். வேதாந்திகள் நான் கர்த்தாவென்று சொல்லி யநுபவ மிருக்கிறபடியினாலேயும், வேதாந்தங்களுமாத்மாத்தானே கர்த்தாவென்று சொல்லுகிறபடியினாலேயும், எத்தனவான கர்த்தாவென்றுசொல்லிக்கர்த்ருத்துவலக்ஷண மிருக்கிறபடியினாலேயும், கிரியானுகூல ஞானத்துவங் கர்த்ருத்துவமென்கிறலக்ஷண மாத்மாவுக் கிருக்கிறபடியினாலேயும், புருஷன்றானே கர்த்தா. கரணமாயிருக்கிற வந்தக்கரணத்துக்கு கர்த்ருத்துவஞ் சொல்லக்கூடாது. ஆனாலசங்கராயிருக்கிற வாத்மாவுக்குக்கர்த்ருத்துவமெப்படியென்று சங்கித்தால்; கரணவிசிஷ்டராகவிருக்கிற வாத்மாவுக்குத்தானே; கர்த்ருத்துவஞ் சாதனம். ஞானவானாக விருக்கிற வாத்மாவுக்குத்தானே கர்த்ருத்துவம். அதுமாத்திரமல்ல வாத்மாபோக்தாவானபடியினாலே யிவர்

தானே கர்த்தாவென்று சொல்லவேண்டும். ஆனுற் கர்த்தரு த்துவங் கற்பிதமோ? வாஸ்தவமோ வென்றுவர:— தார்க் கிகாள், சைவவைஷ்ணுவாள், கர்த்தருத்துவம் வாஸ்தவ மென்று சொல்லுவார்கள். இரும்பு சுடுதென்கிறதுபோலே நான்கர்த்தாவென்கிறது பிராந்திதானே.

அஃதெப்படி யென்னில்? தச்சனானவன் வாச்சியுளி யோடே கூடினாற் றச்சவேலை செய்வன்; அவைகளுட னே கூடாவிட்டாற் றச்சவேலை செய்யமாட்டான். அப்படிப் போலே யாத்மா கரணங்களுடனே கூடின லப்போது நான் கர்த்தா போக்தாவென்றுந் தோற்றுவார்; கரணங்க ளுடனே கூடாதிருந்தால் நிஷ்கிரியராகவிருப்பார். ஆனதா லாத்மாவினிடத்திலே கர்த்தருத்துவங் கரணகற்பிதம். சில பேர் இப்படிக்கொத்த வாத்மாவானவர் பிரமப்பிரதிவிம்ப ரென்றும், சிலபேர் பிரமஅம்ச மிவரென்றும், சிலபேர் பிர மாவச்சினரென்றுஞ்சொல்லுவார்கள். ஜீவிசுரர்களுக்குவிம் பப்பிரதிவிம்பபாவபக்ஷம், அம்சாம்சபாவபக்ஷம், அவச் சின்னபக்ஷம், ஆகமூன்றும் வேதஞ் சொல்லுகிறது. சூத்தி ரக்காரரும் விசாரித் திருக்கிறூர். விம்பப்பிரதிவிம்பபாவ பக்ஷமெப்படியென்றுவர:—சந்திரன்போலேயும், சூரியன் போலேயும், முகம்போலேயும், பரமாத்மா. ஜலசந்திரன் போலேயும், ஜல சூரியன்போலேயும், கண்ணாடியிலேபிரதி முகம்போலேயும், ஜலத்திலேபிரதிமுகம்போலேயும், ஜலா காயம்போலேயும், ஜீவன். அஃதெப்படி யென்றுவர:— மாயாப் பிரதிவிம்ப சைதன்னிய மீசுரனென்பார்கள். பிரம சைதன்னிய மவித்தையாவந்தக்கரணப் பிரதிவிம்பஜீவனெ ன்பார்க ளிவைக ளிரண்டுவிதமாய்க் கற்பிக்கிறது.

இனி மூன்றுவிதமாய்க் கற்பிக்கிறது
மஹாகாசம், கடாகாசம், ஜலாகாசம்போ(
ரதி விம்பசைதன்னியமீசுரன். அவித்தையாப்பிரதிவிம்ப சைதன்னியங்கூடஸ்தர். அவித்தையென்றும், பிரகிருதியென்று மிரண்டுமொன்றுதானே. அந்தக்கரணப் பிரதிவிம்ப சைதன்னியம்ஜீவர். இனி நாலுவிதமாய்க் கற்பிக்கிறதாவதேதென்றால்? போதமயர்பரமாத்மா. மஹாகாசம்போலே மாயாப்பிரதிவிம்பசைதன்னியமீசுரர். மேகாகாசம்போலே யவித்தையாப்பிரதிவிம்பசைதன்னியங்கூடஸ்தர். கடாகாசம்போலே வந்தக்கரணப்பிரதிவிம்பசைதன்னியம் ஜீவன். சிலபேர் பெரியவாள் கடஜலாகாசம்போலே, மாயையிலே பிரமப்பிரதிவிம்பித மீசுரர். அவித்தையிலே ஈசுரப்பிரதிவிம்பிதங் கூடஸ்தர். அந்தக்கரணத்திலே கூடஸ்த பிரதிவிம்பிதம் ஜீவர். இந்தப்பக்ஷத்திலே:— பிரமத்தினிடத்திலே மாயையினாலே ஈசுரர் கற்பிதர். ஈசுரரிடத்திலே யவித்தையினாலே கூடஸ்தர்கற்பிதர். கூடஸ்தரிடத்திலே அந்தக்கரணத்தினாலே ஜீவன் கற்பிதனென்று சொல்லுவார்கள். முன்சொன்ன மதத்திலே பிரமத்தினிடத்திலே மாயையினாலே ஈசுரர் கற்பிதர். பிரமத்தினிடத்திலேயவித்தையினாலே கூடஸ்தர் கற்பிதர். பிரமத்தினிடத்திலே யந்தக்கரணத்தினாலே ஜீவன் கற்பிதன், இப்படி விம்பப்பிரதிவிம்பத்தன்மையாயிற்று. இந்தப்க்ஷயத்திலே பிரதிவிம்பமாயிருக்கிறஜீவன் மித்தியாபூதனானபடியினாலே யவனுக்குக் கர்த்அருத்அவங் கூடாது. போக்அருத்அவமுங் கூடாது. இதுமாத்திரமல்லப் பிரதிவிம்ப ஜீவனுக்குப் பந்தமென்றும், சுத்தாத்மாவுக்கு மோக்ஷமென்றும், பந்தமோக்ஷங்களுக்குக் கர்த்தாவிரண்டாகவரும். இதுமாத்திரமல்லப் பிரதிவிம்பனாகிற

கற்பித ஜீவனுக்குச் சமுசாரித்துவங் கூடாதென்று வருவ தால்? விம்பப்பிரதிவிம்பபாவபக்ஷம் போராது; நல்லதல் ல. இதற்கு அம்சாம்சபாவபக்ஷநல்லது. அஃதெப்படி யென்னில்? சுத்தசைதன்னியம்பரப்பிரம மதுதானே மாயை யுடனேகூடி யீசுரரானார். அந்தப் பிரமந்தானே யவித்தை யுடனேகூடிக் கூடஸ்தரானார். அந்தப்பிரமந்தானே யந்தக் கரணத்துடனே கூடி ஜீவனானார். இவைகள்தான் நாலுவித மாய்க் கற்பிக்கிறது. மஹாகாசம் கடாகாசம் ஜலாகாசம் போலே இனி மூன்றுவிதமாய்க் கற்பிக்கிறதாவ தேதென் றால்? பரமாத்மாவு மீசுரனு மொன்று, கூடஸ்தரொன்று, ஜீவனொன்று ஆக மூன்று. மஹாகாசங் கடாகாசம் ஜலாகா சம்போலே இனி யிரண்டுவிதமாய்க் கற்பிக்கிறதாவ தேதெ ன்றால்? மஹாகாசம் கடாகாசம்போலே ஜீவிசுரா ளிர ண்டுதானே. இந்தப்பக்ஷத்திலே பரமாத்மாவு மீசுரனுமொ ன்று, கூடஸ்தரும் ஜீவனு மொன்றென்று சொல்லுவார் கள்.

இந்தப்பக்ஷத்திலே பிரமாம்சமீசுரன். ஈசுராம்சங் கூடஸ்தர். கூடஸ்தாமிசம் ஜீவனென்று சிலபேர் சொல்லு வார்கள். சிலபேர்பெரியவாள்மாயோபாதிகசைதன்னியமீசு ரர். அவித்தையோபாதிகர் ஜீவனென்று சொல்லுவார் கள். சிலபேர் அவித்தையோபாதிகராகிய கூடஸ்தர்தானே ஈசுரர். அந்தக்கரணோபாதிகர் ஜீவனென்று சொல்லி யம் சாம்சபாவபக்ஷஞ் சொல்லுவார்கள். பொறியும் வன்னி யும்போலே திருஷ்டாந்தம்:—வன்னிபரமாத்மா. பொறி ஜீவன். [இந்தப்பக்ஷத்துக்குத் தூஷணம். பிரமம்:—நிரம் சம், நிரவயவம், விபு, அதுக்கு அம்சம் பரமார்த்தமாய்க் கூடாது? கற்பிதமாய்ச் சொல்லவேண்டும். கற்பிதம் பொய்

யான படியினாலே:— அதுக்குக் கடாகாச மஹாகாசம்போலே அவச்சின்னபக்ஷம்நல்லது. மஹாகாசம்போலே பரமாத்மா. கடாகாசம்போலே ஜீவன். இவை யிரண்டுவிதமாய்க் கற்பிக்கிறது. அஃதெப்படியென்னில்? மாயா அவச்சின்ன சைதன்னிய மீசுரர். அவித்தையா அவச்சின்ன சைதன்னியம் ஜீவர். அவித்தையா அவச்சின்ன சைதன்னியமீசுரர். அந்தக்கரண அவச்சின்ன சைதன்னியம் ஜீவனென்று சொல்லிக் கடாகாசம் மஹாகாசம்போலே சொல்லுவார்கள். சிலபேர் மாயைக்கும், அவித்தைக்கும், பேதமுண்டு. மாயையுடனே கூடின சைதன்னிய மீசுரர்தானே. அவித்தையுடனே கூடின சைதன்யந்தானே ஜீவன். அவர்தானே கூடஸ்தரென்று சொல்லுவார்கள்.

இந்த ஜீவாத்மா வெங்கேகற்பிதரென்றவா:— மஹாகாசம் ஜலாகாசம்போலேயும், மஹாகாசங் கடாகாசம்போலேயும், பரப்பிரமத்தினிடத்திலே ஜீவன்கற்பிதன். சிலபேர் சூரியன்றானே யுபசூரியன்போலேயும், சந்திரன்றானே யுபசந்திரன்போலேயும், வன்னிதானே தீபம்போலேயும், லிங்கம்போலேயும், தோற்றுகிறதுபோலே பிரமந்தானே அவித்தையா வந்தக்கரண வுபாதியுடனே கூடி ஜீவனென்று தோற்றுகிறானென்று சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் வன்னிலிங்கம்போலே ஜீவிசுராளென்றிருக்கிறபடியினாலே ஈசுராம்சம்ஜீவன், ஈசுரனிடத்திலே ஜீவன் கற்பிதனென்கிறதாய்க்கீதாவசன மிருக்கிறதென்று சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் சிருஷ்டிக்கிமுன்னேயும், சுழுத்தி மூர்ச்சை சமாதியிலேயும், கூடஸ்தப்பிரமத்தோடே ஜீவ னைக்கியத்தை யடைந்திருக்கிறான், திரும்பவும் வெளியிலே வருகிறான், ஆனபடியினாலே, கூடஸ்த

ரீடத்திலே ஜீவன் கற்பிதனென்று சொல்லுவார்கள். சில பேர் பெரியவாள்பிரமத்துக்கு மூன்றவதாரமுண்டு: பிரமம் மாயையுடனே கூடி ஈசுராவதாரமானார். அவித்தையாப் பிரகிருதியுடனே கூடிக் கூடஸ்தாவதாரமானார். பிரமந்தானே யந்தக்கரணத்துடனே கூடி ஜீவ வவதாரமானாரென்று சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் மாயையுடனே கூடிப் பிரமமீசுரரானார். ஈசுரன்றானே யவித்தையோபாதிகராய்க் கூடஸ்தரானார். கூடஸ்தர்தானே யந்தக் கரணோபாதிகராய் ஜீவனானாரென்று சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் சுத்தசத்துவப்பிரதானமாயிருக்கிற பிரகிருதிதானே மாயையென்றும், மலினசத்துவப்பிரதானமாயிருக்கிற பிரகிருதி வவித்தையென்றும், தமப் பிரதானமாயிருக்கிற பிரகிருதிதானே பிரகிருதியென்றுஞ் சொல்லுவார்கள். பிரமசைதன்னியந்தானே மாயையுடனே கூடி நிமித்தகாரணமான வீசுரரானார். பிரமந்தானே பிரகிருதியுடனே கூடி யுபாதானகாரணமான கூடஸதரானார். பிரமந்தானே யவியத்தையா வந்தக் காரணத்துடனே கூடிப்போக்தாவான ஜீவனானாரென்று சொல்லுவார்கள். அவித்தைக்கும், மாயைக்கும், பேதபக்ஷத்திலே மாயையுடனே கூடின சைதன்னிய மீசுரர். அவித்தையுடனே கூடின சைதன்னியம் ஜீவன். மாயையில்லை யென்கிற பக்ஷத்திலே யவித்தையோபாதிக சைதன்னிய மீசுரன். அவரே கூடஸ்தர். அந்தக் கரணத்துடனே கூடின சைதன்னியம் ஜீவாத்மாவென்று சொல்லுவார்கள். சில பேர் பெரியவாள் அவ்வியத்தரென்றும், அக்ஷரரென்றும், கூடஸ்தரென்றும், பிராக்ஞரென்றும், ஆனந்தமயரென்றுமெல்லாமொரே தன்மையாகச் சொல்லுவார்கள். தட்டா

10

ரப்பட்டதைக் கூடம்போலே நிருவிகாரராயிருக்கிறபடி யினாலே கூடஸ்தர். சகலத்துக்கு முந்தினவரா யிருக் கிறபடியினாலே கூடஸ்தர். விகாரியாயிருக்கிற தேகேந் திரியாதிகளுக்குத் தாம் அதிஷ்டானமாய் நிருவிகாரியா யிருந்துகொண்டு; விகாரியான தேகேந்திரியாதிக்கிச்சாக்ஷி யானபடியினாலே கூடஸ்தர். இருதயக்குகையிலே யிருக்கிற படியினாலே கூடஸ்தர். பொய்யாகிய தத்துவக்கூட்டத்திலி ருக்கிறபடியினாலே கூடஸ்தர். அசலராயிருக்கிறபடி யினாலே கூடஸ்தர். மறைப்பாகிய பிரகிருதியிலிருக்கிறபடியினாலே கூடஸ்தர். கூடமென்றது? அநிர்வசநீயமாயிருக்கிற வவி த்தையாவாசனு லக்ஷணத்தையுடையது. அதிலேயிருக்கிற படியினாலே கூடஸ்தர். இந்தப்படி பெரியவாள் சொல்லு வார்கள். இப்படிபட்ட கூடஸ்தரெங்கே கற்பிதர்? அவி த்தையினாலே பரப்பிரமத்தினிடத்திலே கற்பிதர். பரப்பிரம அம்சமென்று சிலபேர் சொல்லுவார்கள். சர்வஜீவாளு டைய யிருதயத்திலேயு மீசுரனிருக்கிறானென்று மீசுரவசன மிருக்கிறபடியினாலே கூடஸ்த ரீசுரர்தானே; ஈசுராம்சமெ ன்றுஞ் சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் பிரமஅம்ச முமல்ல, ஈசுர அம்சமுமல்ல, இந்தக் கூடஸ்தரவித்தையோ டே கூடியிருக்கிறபடியினாலே ஜீவன்றானே யென்றுஞ் சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் வேதாந்தங் களிலே வெகுவாய்க் கூடஸ்தரை ஜீவலக்ஷணராய்ச் சொல்லியிருக்கிறபடியினாலே யிவர் பிரமஅம்சமுமல்ல, ஈசுராம்சமுமல்ல, அன்னியர்தானேயென்றுஞ் சொல்லுவார் கள். இனிமேற் பாஷியக்காரர்மதம்:—பிரமந்தானே தன் னுடையவவித்தையினாலே சமுசாரியானான், தன்னுடையக்ஞா னத்தினாலே முக்தனானான்.

அஃதெப்படி யென்னில்? ராஜகுமாரனானவன் தன்னுடைய வவித்தையினாலே வேடனாகி மாதாவினுடைய வுபதேசத்தினாலேயுந் தன்னறிவினாலேயு முடனே ராஜாவானாற்போலேயும், கருணனானவன் தன்னுடைய அவித்தையினாலே தேர்ப்பாகனுடைய பிள்ளையாய் மாதாவாகிய குந்திவுபதேசத்தினாலே யுடனே தேர்ப்பாகத் தன்மையை விட் டுடனே குந்தி புத்திரனானாற்போலேயும், இராமரானவர் அவித்தையினாலே தசரத புத்திரனா யிராவணனைச் சங்கரித்த பிறகு தேவதைகளெல்லாரும் வந்தார்களப்போது பிரமதேவரானவர் இராமா நீர் தசரதபுத்திரரல்ல நீர் விஷ்ணுவென் றுபதேசம் பண்ணின பிறகு நான் தசரதகுமாரரென்கிற பாவத்தைவிட் டுடனே விஷ்ணுவானாற்போலேயும், சம்பராசூரனுடைய கிரகத்திலே பிரத்திமனென்கிற பெயரோடே குழந்தையாக மன்மதன் வளர்ந்துகொண் டிருக்கிறபோ தவித்தையினாலே நான் சம்பராசூரனுடைய புத்திரனென் றிருக்கிறகாலையி லொருநாள் ரகசியத்திலே ரதிதேவியானவள் நீ சம்பராசூரனுடைய புத்திரனல்ல நீ கிருஷ்ணசுவாமி புத்திரனாகிய மன்மதனென் றுபதேசம் பண்ணின மட்டிலே சம்பரா புத்திரனென்கிற பாவத்தைவிட் டுடனே மன்மதனானாற் போலேயும், தசமனானவன் அவித்தையினாலே தசமன் போனானென்று மயங்கித் தான் தசமனென்கிற பாவத்தை யடைந்து தசமனைக் காணமற்றுக்கப்படுகிறபோ தாப்த்த சினேகிதன்வந் தென்னைப் பார்த்துத் தசமனாற்றோடே நஷ்டமாய்ப் போகவில்லை அந்தத்தசம னீதானென் றறியச் சொன்ன மாத்திரத்திலே தான்றான் றசமனென் றறிந்துகொண் டுடனே தசமபாவத்தை யடைந்தாற்போலேயும் பிரமந்தானே யவித்தையி

னாலே ஜீவபாவத்தையடைந்து வுபாதிடத்துக்களுடைய வுப தேசத்தினாலே யுடனே தன்னறிவுவந் துடனேபிரமமானார். ஸ்தாணுவைக்கண்டு அவித்தையினாலே புருஷனென்றுபிரமி த்து ஸ்தாணுவென்கிறவறிவினாலே புருஷப்பிரமைபோனாற் றானு ஸ்தாணுவாகத்தானேயிருக்குமப்படிப்போலப் பிரம த்தினிடத்திலே யவித்தையினாலே கற்பிதமா யிருக்கிற ஜீவத்துவப்பிரமைபோனாற் பிரமம் பிரமமாகத்தானேயிரு க்கும். பிரமமென்கிறதும், ஆத்மாவென்கிறதும், ஆகமென் கிறதும், புருஷனென்கிறது மெல்லாம் பரியாயந்தானே. பிரமந்தானே விசுவாத்மா. பிரமத்தைத்தவிர வேறே ஈசுர னில்லை. பிரமத்தைத்தவிர வேறே கூடஸ்தரில்லை. பிரமத் தைத்தவிர வேறே ஜீவனில்லை. ஆனபடியினாலே வேதமெல் லாம் பிரமமென்றுதானே சொல்லுகின்றன. மிருத்தைத்தவி ரக் கடமில்லை, தந்துவைத்தவிரப் படமில்லை. கனகத்தைத் தவிரப் பூஷணமில்லை. சமுத்திரத்தைத்தவிர அலையில்லை. அப்படிப்போலப் பிரமத்தைத்தவிர பிரபஞ்சமில்லை; பிர பஞ்சம் பிரமமயந்தானே. பிரமத்தி னிடத்திலே:— பிரபஞ் சம், ஈசுரர், கூடஸ்தர், ஜீவர், சகலமுங் கற்பிதமானபடியி னாலே பிரமத்தைத்தவிர வேறே யொருவஸ்துவு மில்லை; சகலமும் பிரமந்தானே. விசுவத்தைதவிரப் பிரமமுண்டு, ஈசுரனைத்தவிரப் பிரமமுண்டு, கூடஸ்தரைத்தவிர பிரம முண்டு, ஜீவனைத்தவிரப் பிரமமுண்டு, பிரமத்தைத்தவிர ஜீவனில்லை, பிரமத்தைத்தவிரப் பிரபஞ்சமில்லை, ஈசுரருமில் லை, கூடஸ்தருமில்லை, சகலமும் பிரமந்தானேயென்று வேதா ந்தங்கள் சொல்லுகின்றன. சூரியனும் ஜலப்பிரதிவிம்ப சூரி யன்போலவும், சந்திரனும் ஜலப்பிரதிவிம்பசந்திரன் போல வும், பிரமமுமுண்டு; ஜீவனுமுண்டு; இரண்டுபேருக்கும் பே

தமில்லை. அந்தக்கரணமாகிய ஜலத்திலே பிரமமாகிய சூரிய
ன் பிரதிபலித்து ஜீவனுகிற வுபசூரியனுை ரப்பிரமத்தைத்
தவிர வேறே ஜீவனில்லை. அந்தக்கரணத்திலே பிரமத்தினு
டைய பிரதிவிம்பம் ஜீவன். மாயையிலே பிரமத்தினுடைய
பிரதிவிம்ப மீசுரன். அவித்தையாகிற பிரகிருதியிலே பிர
மத்தினுடைய பிரதிவிம்பங் கூடஸ்தர். சிலபேர் மாயாப்
பிரதிவிம்ப மீசுரர்தானே; அவித்தையாப் பிரதிவிம்பம்
ஜீவன்றானேயென்று சொல்லுவார்கள்.

அம்சாம்சபாவபக்ஷத்திலே அக்கினியும், பொறியும்,
போலே திருஷ்டாந்தம். அக்கினிபோலே பிரம்மம். பொறி
போலே ஜீவன். அக்கினியானது யிரும்பிலே மேலுங் கீழு
முள்ளும் வெளியு மெங்கும் வியாபித்துக்கொண்டிருக்கிற
துபோலே; அவித்தையா வந்தக்கரண வுபாதியை யுடைத்
தாயிருக்கிற பிரமசைதன்னிய மவித்தையா வந்தக்கரணங்
களையுள்ளும் வெளியு மேலும் கீழு மெங்கும் வியாபித்து
க்கொண்டிருக்கு மதுவே ஜீவன். அவச்சின்ன பக்ஷத்திலே
மஹாகாசங் கடாகாசம்போலே திருஷ்டாந்தம். அவித்
தையா வந்தக்கரணங்களினுலே யுள்ளே மறைக்கப்பட்
டுப் பிரம சைதன்னியம் ஜீவனுனர். தேகேந்திரியாதிசாக்ஷி
யாய்ச் சச்சிதானந்த லட்சணமாயிருக்கிற தானே; பரமாத்
மாவென்று சகல வேதாந்தங்களுக்கும், சகலமான பெரி
ரியவாளுக்கும், சித்தாந்தம். இந்த வாத்மாவுக்கு விஷயா
நுபோகத்திலே இந்திரியத்துக்கும், விஷயத்துக்கும், சம்
பந்தங் காரணம். இந்திரியத்துக்கும், மனதுக்கும், சம்பந்தங்
காரணம். மனதுக்கு மாத்மாவுக்குஞ் சம்பந்தங் காரணமெ
ன்றுஞ்சொல்லுவார்கள். கூடஸ்தராகிறஆனந்தமயரீசுரனெ
ன்றும், விக்ஞானமயன் ஜீவனென்றும், சூத்திரக்காரர்மதம்.

சுருதி, ஸ்மிருதி, புராணங்கள், லோகப்பிரசித்தி, ஜீவீசுராள் தேகத்துக்குள்ளே யிருதயத்தி லிருக்கிறார்களென்று வெகு பிரசித்தி. தார்க்கிகாள், சாங்கியாள், மீமாஸாளிவர்களுடைய மதம்:--கூடஸ்தராகிறவானந்தமயர் பாரமார்த்திகஜீவன், விக்ஞானமயர் வியவகாரிகஜீவன், விக்ஞான மந்தக்கரண மென்றும், கூடஸ்தர்தானே ஜீவனென்றுஞ் சொல்லும். பாஷியக்காரர்மதம்:— விசுவத்துக்கும், பிரமத்துக்கும், பேதமில்லை. ஜீவனுக்கும், பிரமத்துக்கும், பேதமில்லை. ஜீவாளுங் கடாகாசங்களைப்போலே யொன்றுக்கொன்று பேதமில்லை. பிரமத்தைத்தவிர இரண்டாம் வஸ்துவில்லை; சகலமும் பிரமந்தானேயென்றுபெரியவாளுடையநிஷ்டை.

பதினைந்தாவது

தொம்பதார்த்தசோதனைப்பிரகரணம் முற்றிற்று.

---

## பதினாறாவது

## மாயா அவித்தையாநிருபணப்பிரகரணம்.



மாயை யநிர்வசநீயமாயிருக்கிறபடியினாலே மாயோபாதிகசைதன்னியமீசுரர், அவித்தையோபாதிக சைதன்னியம் ஜீவனென்று சொல்லப்படும். மாயையவித்தைகளுக்கு லக்ஷணமேதென்னில்? மாயையென்றும், அவித்தையென்றும், பிரகிருதியென்றும், அவ்வியத்தமென்றும், பிரதானமென்று மிவைகளெல்லா மேகவாக்கியந்தானே. ஆச்சரியங்களாயிருக்கிற காரியங்களைப் பண்ணுகிறபடியினாலேயும், மெய்யாயும் பொய்யாயுமிருக்கிறபடியினாலேயும், அநிர்வசநீயமா யிருக்

கிறபடியினாலேயும், மாயையென்று சொல்லப்படும்.மோகாகாரமாயிருக்கிறபடியினாலே மோகினியென்று சொல்லப்படும்.கண்ணுக்குக் காணப்படாதபடியினாலே யவ்வியத்தமென்று சொல்லப்படும்.சகலத்திற்கு மூபாதானமானபடியினாலே பிரகிருதியென்றுசொல்லப்படும். வித்தைக்கி விரோதியானபடியினாலே அவித்தையென்று சொல்லப்படும்.ஞானபின்னமானபடியினாலே அக்ஞானமென்றுசொல்லப்படும். மறைப்பானபடியினாலே தமசென்று சொல்லப்படும். இவைகளெல்லா மீசுரசத்தி யொன்றுதானே. சிலபேர் பெரியவாள் மாயையினுடைய அம்சம் பிரகிருதியென்று சொல்லுவார்கள். அவித்தை கருமமயமென்று வைஷ்ணுவாள் சொல்லுவார்கள். அக்ஞான மபாவரூப மித்தியா க்ஞானமென்று தார்க்கிகாள் சொல்லுவார்கள்.

அவித்தை மோகமயமென்று வேதாந்திகள் சொல்லுவார்கள். சிலபேர் வாசனாமயமாகியும், கருமமய மாகியும் மோகமயமாகியும் அவித்தை யிருக்கமென்று சொல்லுவார்கள். சத்துவப்பிரதானமா யிருக்கிற பிரகிருதி மாயையென்றுசொல்லப்படு மது ஈசுரவுபாதி. மலினசத்துவப்பிரதானமா யிருக்கிற பிரகிருதி அவித்தையென்று சொல்லப்படு மது ஜீவோபாதி. தமப்பிரதானமா யிருக்கிற பிரகிருதியைப் பிரகிருதியென்று சொல்லப்படு மது கூடஸ்தருபாதி. சிலபேரவித்தை ஜீவோபாதி யென்றும், மாயை ஈசுரோபாதி யென்றும், சொல்லுவார்கள். சிலபேரவித்தை ஈசுரோபாதியென்றும், அந்தக்கரணம் ஜீவோபாதியென்றுஞ் சொல்லுவார்கள். மாயை யவித்தைகளுக்குப் பேதபக்ஷத்திலே யவித்தைதானே ஜீவோபாதியென்றும், மா

யை ஈசுரோபாதியென்றுஞ் சொல்லுவார்கள். காரணவுபாதிக ரீசுரரென்றும், காரியவுபாதிகன் ஜீவனென்கிறபக்ஷத்திலே பிரகிருதி முதலாய்ப் பிருதுவிபரியந்த மீசுரவுபாதி. சூக்ஷுமதேகம் ஜீவோபாதியென்று சொல்லுவார்கள். சிலபேர் பஞ்சபூதங்கள்தானே பிரகிருதியென்று சொல்லுவார்கள். பிருதுவி, அப்பு, தேயுவு, இந்தமூன்றுதானேபிரகிருதி; வேறே பிரகிருதியில்லை யென்றுஞ் சொல்லுவார்கள். பஞ்சபூதங்களைக்காட்டிலும் விலக்ஷணமாய்ப்பிரகிருதித்துவமுண்டென்று சகலவேதாந்தங்களுடைய சித்தாந்தம். ஆத்மாத்தானே யுபாதானகாரண மாத்மாத்தானே நிமித்த காரணமென்று சகலவேதாந்தங்களுஞ்சொல்லுகின்றன. அவித்தைக்கிலக்ஷணஞ்சொல்லுகிறோம். அவித்தை திரிகுணாத்மகம், அநிர்வசநீயம், அநாதி, பிரகிருதியென்றும், ஞானத்தினாலேநசிக்கத்தக்கதென்றுஞ் சொல்லப்படும். வைஷ்ணவாள் காலம் நித்தியம், புருஷநித்தியம், பிரகிருதி நித்தியம், ஈசுரர் நித்தியர், இந்தநாலுமொன்றுக்கொன்று பின்னங்களென்று சொல்லுவார்கள். போதமயராயிருக்கிற பரமாத்மா சுத்தசைதன்னியமயர். அநாதிமாயையு மநாதி. மாயை திரிகுணாத்மகம், அநிர்வசநீயம். ஈசுரன் அநாதி. அவித்தையாகற்பிதமாயிருக்கிற ஜீவனு மநாதி. ஜீவேசுராளுக்குப் பேதமுமநாதி. கருமமு மநாதி. ஆத்மாவுக்கு மவித்தைக்குஞ் சம்பந்த மநாதி. சம்பந்தமாவ தேதென்றால்? அத்தியாசசம்பந்தம். போதமயராயிருக்கிற வாத்மா அவித்தைக்கு அதிஷ்டானம். இப்படியிருக்கிற பிரமத்தை யவித்தை மறைக்குமென்று சொல்லுவார்கள். சிலபேர்பெரியவாள்ஜீவாசிரய அவித்தை ஆத்மாவுக்குத்தானீசுரனென்கிறபாவத்தைத் தெரியவொட்டாமல் மறைக்குமென்று சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் அவித்

தை ஈசுராதீனந்தானே; ஜீவனுக் கொன்றுந் தெரியாமல் மறைத்துமயக்கத்தைக்கொடுக்குமென்று சொல்லுவார்கள்.

அவித்தையாவதேதென்றால்? அவித்தையென்றும், அத்தியாசமென்றும், பிராந்தியென்றும், மோகமென்று மேக வாக்கியந்தானே. அவித்தைக்கிலக்ஷண மொருவஸ்துவை மற்றொருவஸ்துவாகக் காணல்; ஒரு வஸ்துவினுடைய தருமத்தை மற்றொருவஸ்துவினுடைய தருமமாக ஆரோபிக்கிறது. அவித்தையினுடைய லக்ஷணம் முன்னமே சிஷியப் பிரகரணத்திற் சொல்லியிருக்கிறோம். அவித்தையாகாரஞ் சொல்லுகிறோம். முன்னமுன்னே போதமயராயிருக்கிற ஆத்மாவுக்கு அந்தகரணத்திலே நாமென்கிற வத்தியாசம். அதின்பிறகு இச்சிக்கிறேன், பண்ணுகிறேனென்று அந்தக் கரண தருமவத்தியாசம். அதின்பிறகு ஸ்தூலதேகத்திலே நானென்கிற அத்தியாசம். அதின் பிறகு நான் மனுஷன், நான் பருத்தேன், நானிளைத்தேனென்கிற யித்தியாதி ஸ்தூலதேக தருமவத்தியாசம். அதின்பிறகு பிராணனிலே நானென்கிற அத்தியாசம். அதின்பிறகு யெனக்குப்பசிக்கிற தெனக்குத்தாகிக்கிறதென்று பிராணதரும அத்தியாசம். அதின் பிறகு இந்திரியங்களில் நானென்கிற அத்தியாசம். அதின்பிறகு நான் குருடன், செவுடன், ஊமையென்கிற வித்திரியதரும அத்தியாசம். அதின்பிறகு புத்திரமித்திராதி பாகிய பதார்த்தத்திலே நானென்கிற அத்தியாசம். அதின்பிறகுபுத்திரமித்திராதிகளுக்கு நாசம்விருத்திகள் வருகிறபோது தனக்குத்தானே நாசம் விருத்தி வந்ததென்று பாகியதரும அத்தியாசம். இந்த வத்தியாச மநாதியநிர்வசநீயம். இந்த வத்தியாசமயமாயிருக்கிற வவித்தை

பிரமவித்தையினாலே போகவேண்டும். இருட்டு, தேயுசுனாலே போகிறதுபோலே இந்த வவித்தை சகலபிராணிசித்தம். பிரமவித்தை வேதாந்த சிரவணத்தினாலேயும், குருவுபதேசத்தினாலேயும், ஆத்மனாத்மா விவேகத்தினாலேயும், வரவேண்டும். தத்துவ விவேகத்தினாலே யறிவுவரவேண்டுமென்று சாங்கியாள் சொல்லுவார்கள். வேதாந்திகள் வேதாந்த சிரவணத்தினாலேதானே யாத்மக்ஞானம் வரவேணடுமென்று சொல்லுவார்கள்.

பதினாறாவது மாயா அவித்தையா நிருபணப்பிரகரணம் முற்றிற்று.

---

## பதினேழாவது ஆவிருத்திமார்க்கப்பிரகரணம்.

:o:

சுமேருவென்றும், மஹாமேருவென்றும், மேமாத்திரியென்றும், ரத்தினசானுவென்றும், சுராலயமென்றும், மஹாமேருபருவதத்துக்குப் பெயர். மஹாமேரு பருவதம் வடக்குத்திக்கிலே லக்ஷயோசனை வுன்னதங் கனகமயம். தேவதைகளுடைய பட்டணங்களுக்கெல்லா மாலய மந்தப் பருவதத்தை ஆதித்தாதி நவக்கிரகாதி தேவதைகளும் அசுபதிமுதலான சகல நட்சேத்திரங்களு மந்தப்பருவதத்தைப் பிரதக்ஷணமாகச் சுற்றி வருகிறார்களென்று சாஸ்திரம். அதின் கொடுமுடியிலே துருவச்சக்கரம், மேற்றளத்திலே தேவலோகங்கள், மத்தியிலே பிரமபட்டணம், கிழக்கே இந்திரபட்டணம், அக்கினிமூலையி லக்கினிதேவபட்டணம், தென்பாகத்திலே யமனுடைய பட்டணம், நிருதிமூலையில்

நிருதிதேவதை பட்டணம், மேல்பக்கத்திலே வருணன் பட்டணம், வாயுமூலையில் வாயுபட்டணம், வடபக்கத்திலே குபேர னளகாபுரிப் பட்டணம், ஈசானிய மூலையிலே சிவ புரம், இவைகளிப்போ தேவலோகமென்று பெயர். தேவ தைக ளெல்லாரு மரசிருப்பாக விருக்கிறவிடம், ஆகாசத்தி லே விமானங்களோடே சஞ்சார மது நட்சேத்திரமண்டல மென்று சொல்லப்படும். தேவதைகளுடைய விமானகாந் திகள் நட்சேத்திரமென்று சொல்லப்படும். பக்ஷிக ளாகா சத்திலே சஞ்சரித்து மரத்திலே வந்திருக்கிறதுபோலே தேவதைகள் சகலரும் புண்ணியபுருஷா ளானபடியினாலே; தேவதைகள் நட்சேத்திரரூபங்களாக ஆகாசத்திலே சஞ்ச ரிப்பார்கள். மஹாமேருவில் யவரவர்பட்டணங்களிலே குடி யிருப்பு. நட்சேத்திரவிமானங்களிலே அக்ஷரஸ்திக்கள் நட நாடகசாலைகள் சகலபாக்கியங்களு மவரவர்களுக்குப் பூர ணமாகவிருக்கும். மேகமண்டலபரியந்தம் பூலோகமென்று பெயர். மேகமண்டலத்துக்குமேற் சூரியமண்டலபரியந்தம் அந்தரிக்ஷலோகமென்று பெயர். சூரியமண்டலத்துக்குமே லே லக்ஷம்யோசனை யுன்னிதஞ்சந்திரமண்டலம். அதற்கு மேல்லக்ஷம்யோசனை தூரஞ்செவ்வாய்மண்டலம். அதற்கு மேல் லக்ஷம்யோசனை தூரம்புதன்மண்டலம். அதற்குமேல் லக்ஷம் யோசனை தூரம்வியாழபகவான்மண்டலம். அதற்கு மேல் லக்ஷம்யோசனை தூரஞ் சுக்கிரமண்டலம். அதற்கு மேல் லக்ஷம்யோசனை தூரஞ் சனிமண்டலம். அதற்குமேல் லக்ஷம் யோசனை தூரஞ் சத்தரிஷிகள்மண்டலம். அப்பால் லக்ஷம்யோசனை தூரந் துருவமண்மடலம். சூரியமண்டலந் தொடுத்துத் துருவமண்டலபரியந்தஞ் சுவர்க்கலோகமென் று சொல்லப்படும்.

அதற்குமேல்மஹாலோகம், அதற்குமேல்ஜனலோகம், அப்பாற் றபோலோகம், அப்பாற்சத்தியலோகமாகிய பிரமலோகம், துருவமண்டலத்துக் கப்பாற் பிரமலோகபரியந்தமவடத்திலே போனபேர்களுக்கும், பிரமவுபாசகாளுக்கும், யோகசித்தாளா யிருக்கிறபேர்களுக்கும், தபசித்தாளா யிருக்கிறபேர்களுக்கும், பிரமவுபாசகாளாயிருக்கிற சந்நியாசிகளுக்கும், பிரமவுபாசகாளாயிருக்கிற பிரமசாரிகள், கிரகஸ்தாள், வானப்பிரஸ்தாளிவர்களெல்லாந் திரும்பயிவடத்திலே வருத்தில்லை. பிரமவுபாசகாளாயிருக்கிறபேருக் குபாசனமார்க்கத்தினாலே யுத்தராயணத்திலே மரணத்தையடைந்து பிரமலோகப் பிராப்தி; அவர்களுக்குத்திரும்ப யிங்கேவருத்தில்லை. ஞானிகளாக விருக்கிற பேர்களுக்கு யிவடத்திலே தானே முக்தி; லோகாந்தரத்திலே கமனாகமனமில்லையென்று வேதாந்த சித்தாந்தம். கங்காதேவியானவள் சுவர்க்கலோகமுதலாய்ப் பிரமலோகபரியந்தம் சமஸ்ததேவலோகங்களிலேயும் நதிரூபமாகச் சஞ்சரிப்பள். பூமி, அந்தரிக்ஷ, சுவர்க்க, மூன்றுலோகத்திலேயுஞ் சஞ்சரிக்கிறபடியினாலே யந்தக் கங்காதேவிக்குத் திரிபதகையென்றும் பெயராயிற்று. தேவநதியென்றும், தேவசிந்து வென்றும், பேராயிற்று. தேவலோகமாகிய மஹாமேரு பருவதத்திலே காமதேனு, கற்பகவிருக்ஷம், சிந்தாமணி, சகல பாக்கியங்களு முண்டு. அமிர்தமதனத்திலே பிறந்த அக்ஷரஸ்திரீகளா, சிரோட்டைகளாயறுபதுகோடிகள்; அவர்களுக்குப் பரிசாராதிகளாயிருக்கிற அக்ஷரஸ்திரீகளுக்கு யெண்ணிக்கை யில்லை. சகல அக்ஷரஸ்திரீகளுக்கும் பிரதானிகளாய் ரம்பை, ஊருவசி, திலோத்தமை, மேனகை, புஞ்சிகை, விதலை, இவர்கள் முதலானபேர் பிரதானிகள். சகலஅக்ஷரஸ்திரீகளுந்தேவதாசிக

றொருவருக்கும் பாரியல்ல. தேவதைகளினுலேயும், புண்ணிய புருஷ தேவதைகளினுலேயும், அக்ஷரஸ்திரீகள் போகிக்கப்படுவார்கள். தேவதைகளாகிய அவாளவாளுக்குத் தனித்தனியே பாரிகளுண்டு. தேவலோகத்திலே யனந்த கோடி திவ்விய விருக்ஷங்களுண்டு. அந்தத்திவ்விய விருக்ஷங்கள்:—திவ்விய வஸ்திரங்களை, திவ்வியவலங்காரங்களை, திவ்விய சந்தனங்களை, திவ்விய பூஷணங்களை, திவ்வியபுஷ்பங்களை, திவ்வியரசங்களை, திவ்வியபலங்களை, திவ்வியங்களாயிருக்கிற வமிர்தங்களை, திவ்வியங்களா யிருக்கிற வஸ்துக்களை, திவ்வியங்களா யிருக்கிற ரசவஸ்துக்களை, திவ்வியங்களாயிருக்கிற அன்ன பானுதிகளை யிவைமுதலாகியகேட்ட வஸ்துக்களெல்லாங் கொடுக்கும். சுவர்க்க லோகத்திலே சுகசவுக்கியப் பிரதானமாகத்தானே யிருக்கும். சுவர்க்க லோகத்திலே யிந்திர னதிகாரி அவருடைய கொலுவுக்குச் சுவர்க்கலோகத்திலே யிருக்கிற பேர்களெல்லாம் போய் வர வேண்டும். குபேரனுடைய பட்டணத்திலே நவநிதிகளுமுண்டு; சகல பாக்கியமு நிறைந்திருக்கும். புண்ணிய புருஷர், தேவதைகளெல்லாரும், தேவலோகத்திலே யிருக்கிற தேவதைகளும், அக்ஷரஸ்திரீகளோடேகூட சகல போக போக்கியங்களையு மநுபவித்துக்கொண்டு சுகப்பிரதானுளாயிருப்பார்கள். பூலோகத்திலே பரதபூமியிலே யாதொருத்தர் சுவர்க்ககாமிகளா யாகங்களைப் பண்ணுகிருர்களோ; அவர்களெல்லாஞ் சுவர்க்கலோகத்துக்குப்போவார்கள். யாதொருத்தர் சுவர்க்ககாமிகளாய்ச் சிலர்களா யிருக்கிருர்களோ; அவர்களுக்கெல்லாஞ் சுவர்க்கபூமி. யாதொருத்தர் சுவர்க்க காமிகளாய்த்தவசுகளைப்பண்ணுகிருர்களோ; அவர்களுக்கெல்லாஞ் சுவர்க்கபோகம். இந்தப் பூலோகத்தி

லே சுவர்க்கம் வேண்டுமென்று அக்கினிஹோத்திரிகள், இஷ்ட பசுபந் தாதிகளைப்பண்ணிச் சுவர்க்கதை யடைவர்கள். பூலோகத்திலேசுவர்க்கம் வேண்டுமென்று அக்கினிஷ்டோம், அதிராத்திரம், வாசபேயம், இவைகள்முதலாகிய கிறத்துகளைப்பண்ணுகிறார்களோ; அவர்களெல்லாஞ்சுவர்க்கத்தை யடைவார்கள். யாதொருத்தர் சுவர்க்கம்வேண்டுமென்று அருத்தங்களைக்கொடுத்து யெக்கியங்களைப் பண்ணி வைக்கிறார்களோ; அவர்களெல்லாஞ் சுவர்க்கத்தை யடைவார்கள். பூலோகத்திலே யாதொருத்தர் சுவர்க்கம் வேண்டுமென்று சாந்திராயண விரதம், கிருச்சிர விரதம், மாதவுபவாசம், பக்ஷவுபவாசம், வாரவிரதங்கள், நட்சேத்திர விரதங்கள், திதிவிரதங்களிவைகளை யாசரிக்கிறார்களோ; அவர்களெல்லாஞ் சுவர்க்கத்தை யடைவார்கள். யாதொருத்தர் சுவர்க்கம் வேண்டுமென்று பூலோகத்திலேஜலபானம், வாயுபக்ஷணம், சருகு பக்ஷணம், பலங்களைப் பக்ஷிக்கிறது, கந்தமூல பலங்களைப் பக்ஷிக்கிறது, வனத்து நெல்லைப் பிறக்கிப் பக்ஷிக்கிறது, இந்தப்படி வனங்களிலே யிருந்துகொண்டு தபசிகளாய்ச் சுவர்க்கம்வேண்டுமென்று பஞ்சாக்கினி மத்தியிலே யிருந்துகொண்டு யாதொருத்தர் தபசுகளைப் பண்ணுகிறார்களோ; அவர்களெல்லாஞ் சுவர்க்கத்தை யடைவார்கள். யாதொருத்தர் சுவர்க்கம் வேண்டுமென்றுதீர்த்தயாத்திரைகளைப் பண்ணுகிறார்களோ; பூப்பிரதக்ஷணம் பண்ணுகிறார்களோ; ஸ்தலங்களிலே போய்ச் சேவிக்கிறார்களோ; ஸ்தலவாசங்களைப் பண்ணுகிறார்களோ; அவர்களெல்லாஞ்சுவர்க்கத்தை யடைவார்கள்.

யாதொருத்தர் சுவர்க்ககாமிகளாய்ச் சோடச மஹாதானங்களைப் பண்ணுகிறார்களோ; யாதொருத்தர் கஜதான

ங்களை, அசுவதானங்களைப் பண்ணுகிறார்களோ; யாதொருத்தர் கோதானங்களைப்பண்ணுகிறார்களோ; யாதொருத்தர் ஆட்டுத்தானங்களைப் பண்ணுகிறார்களோ; யாதொருத்தர் பூதானங்களைப்பண்ணுகிறார்களோ; யாதொருத்தர் கன்னிகாதானம், உபநயனதானம், பசுக்கன்றுபோடுஞ்சமையத்திற் கன்றின்தலை வெளியிலே வந்தவுடனே கொடுக்கிற தானம், பல்லக்கு, ரதவாகனம், பெருது, மெத்தை, ஆசனங்கள், வஸ்திரதானங்கள், இரணியாபரணதானங்கள், சில பாத்திரதானங்கள், அன்னதானங்கள், சத்திரங்கள் சாலைகள், ராத்திரிச் சத்திரங்கள், ஜலதானங்கள், தோப்புகள், உத்தியானவனங்கள், நந்தவனங்கள், வாவிகூபதடாகாதிகள் வெட்டிவைக்க, ஆறுகளை யுண்டாக்க, அக்கிரகாரங்களைப் பண்ண, சுவர்க்கம் வேண்டுமென்று சிவன் கோயிலையும் விஷ்ணுகோயிலையு மியற்றிப் பூசைசெய்விக்கவும், பாதைமார்க்கத்திலே மடங்கள், மண்டபங்கள் கட்டிவைக்க, வருஷாசனஞ் சர்வமானியமாகக் கொடுக்க, பிராமணரைக் கோக்களை ரக்ஷிக்க, சரணமென்றடைந்த ஜந்துக்கள் ரோகிகள் தரித்திராள் அநாதாள் யிவர்களையெல்லாமிரக்ஷித்துச் சுவர்க்கம் வேண்டுமென்கிறபேர்கள் சுவர்க்கத்தை யடைவார்கள். யாதொத்தர் யுத்தகளத்திலே முன்வைத்தகால் பின்வாங்காமல் யுத்தம்பண்ணி மரணமாகிறார்களோ; அவர்களுஞ் சுவர்க்கத்தை யடைவார்கள். சுவர்க்ககாமிகள் யாதொருத்தர் தீர்த்தக்கரையிற் செய்கிற திதி திரவியத்தாலாவது, அன்னத்தாலாவது, திதி பண்ணுதலாகிய நித்திய நைமித்திய சிராத்தங்கள், மாத்தியானகாலத்திலே யாதித்தனைப் பார்த்து மந்திரஞ்செபித்தல், அவுபாசனம், தேவபூசை, வைசிய தேவம், இவைகளைப் பண்ணுகிறார்களோ;

யாதொரு ஸ்திரீகள் பதிவிருதா தருமத்துடனே பத்தாவோடு மனபூரணமாகத் திரிகரண சுத்தியா யுடன்கட்டையேறுகிறார்களோ; யாதொருத்தர் யாகம்பண்ணின பிற்பாடு செய்கிற அக்கினி ஹோத்திராதிகள், யாகம் பண்ணுமற் செய்கிற அவுபாசனாதிகள், நித்திய கருமங்களை, வர்ணாச்சிரம தருமங்களை, சுவர்க்ககாமிகளாய்ப் பண்ணுகிறார்களோ; அவர்களெல்லாஞ் சுவர்க்கத்தை யடைவார்கள். சுவர்க்கத்திலே போய் அக்ஷரஸ்திரீகளோடேகூட சகல போகபாக்கியங்களையு மநுபவிப்பார்கள். அப்படிச் சுவர்க்கத்திலே யிருக்கிறபோது அவனவன் பண்ணிய புண்ணியத்துக்குத் தக்கதாக போகபோக்கிய மநுபவிப்பன், சிலபேருக்கு ஆயிரம் அக்ஷரஸ்திரீகள், சிலபேருக்கு அஞ்ஞூறு, சிலபேருக்கன்பது, சிலபேருக்குப் பத்து, சிலபேருக்கைந்து, சிலபேருக்கொன்று, இந்தப்படிக்கி யவனவன் பண்ணின புண்ணியத்துக்குத்தக்கதாய் நிரம்ப நூனாதிக்கமாகப் போகங்களுடைய யேற்றத்தாழ்வு நடக்கும். அதுகளைக் கண்டு நமக்கிப்படி யில்லையே யென்று துக்க மேதுவாயிருக்கும். வெகுமான சமானமும் நிரம்பவேற்றக்குறைச்சலா யிருக்கும். சிலபேருக் கிந்திரசபை, சிலபேருக்கியமசபை, சிலபேருக்குவர்ணசபை, சிலபேருக்குக் குபேரசபை, சிலபேருக்கு ரம்பையூருவசி திலோத்தமை மேனகையாகிய பிரதானிகளாயிருக்கிற அக்ஷரஸ்திரீகள், இவர்களுடைய போகம், சிலபேருக்கு அப்பிரதானிகளா யிருக்கிற அக்ஷரஸ்திரீகளுடைய போகம், இவைகளை யெல்லாம்பார்த்துத் துக்கமேதுவாயிருக்கும். சிலபேர் புண்ணியக்ஷமாய் விழுகிறபேரைப்பார்த்துத் துக்கமேதுவா யிருக்கும். நாம் புண்ணியக்ஷயமா யெப்போ பூமியிலே விழுவோமோ வென்று விசனத்தோடே கூடின

வர்களா யிருப்பார்கள். போகாதிசயங்களைப்பார்த்து நாம் பூமியிலே யிவர்களைப்போலே யெக்கியங்களைப் பண்ணாதே போனோம்! நாமிருதியுந் தானங்களைப்பண்ணாதே போனோம்! நாமிருதியுந் தவசுகளைப் பண்ணாதே போனோம்! நாமிருதியும் புண்ணியங்களைப் பண்ணாதே போனோமென்று விசனப்படுவார்கள். ராக்ஷதாரு மசுராளும் வந் தடிக்கடி சுவர்க்கத்திலே பீடிப்பார்கள். அதுவெல்லாந் துக்கவேதுவா யிருக்கும், நரகத்திலே கிடக்கிறபேரைச் சுவர்க்கத்திலே யிருக்கிற பேருக்குத் தெரியவரும். அவடத்திலே துக்கவேதுவா யிருக்கும். நாம் பூலோகத்திலே நித்திய பதத்துக்குச் சாதனத்தைப் பண்ணாதே போனோம்! ஞானப்பியாசங்களையும், யோகாப்பியாசங்களையும், பிரமோபாசனைகளையும், பண்ணாதே போனோம்! அற்பசுகமாகிய வநித்தியசுவர்க்க பதத்தை விச்சித் தநித்தியபதத்தையடைந்தோமென்று விசனப்படுவார்கள். புண்ணியக்ஷயமாய் கீழேபோகிறோ மென்று விசனத்தோடேகூடி யிருப்பார்கள். நித்தியங் கோடான கோடிபேர் சுவர்க்கத்துக்கு வருகிறபேர், சுவர்க்கத்திலே யிருந்து புண்ணிய க்ஷயமாய்ப் பூலோகத்துக்கு வருகிறபேர் கோடானகோடிபே ரிப்படி யிருக்கும் சுவர்க்கம். இப்படிப்பட்ட சுவர்க்கத்திலே அக்ஷரஸ்திரீகளோடேயும், திவ்வியரதங்களோடேயும், திவ்வியாபரணங்கள், திவ்வியமாலைகள், திவ்விய வஸ்திரங்கள், திவ்விய கந்தங்கள், திவ்விய புஷ்பங்கள், கிரீடகுண்டலங்கள், அஸ்தாபரணங்கள், பதக்கங்கள், முத்துமாலைகள், சரப்பளிகள், திவ்விய சுவர்ண வரைஞாணும், திவ்யமோதிரங்களும், இவைகளினாலே யலங்கிருதனாய், திவ்விய ஸ்திரீகளோடே நடனாடகசாலை, நிருத்தம், வாத்தியஞ் சங்கீதபோகங்கள், திவ்விய

ஸ்திரீகளோடே ஆலிங்கனாதிக்கிரீடாபோகங்கள்; அவாளோடே சல்லாபவுத்தரங்க ளந்தஸ்திரீகளாலே நிரம்ப வுபாசாரங்கள் பண்ணப்படுவன். இப்படிப்போக போக்கியங்களை யநுபவித்துக்கொண் டிரவும் பகலுங் கூத்தும் பாட்டுமாய் ஸ்திரீகளோடேகூடி யிருப்பன். இப்படி யிருக்கிறபோது புண்ணிய க்ஷயம்வரும்; வந்தா லப்போது கழுத்திலே கிடக்கிற மாலைவாடும். மாலை வாடினவுடனே தேவ தூதர்கள் தலைகீழாகப் பிடித்துத் தள்ளிவிடுவார்கள். சிலபேர் அவர்கள் தள்ளாம லிருந்தாலும் புண்ணிய க்ஷயமானவுடனே தான்றானே தலைகீழாகவிழுவார்கள்.

சுவர்க்கலோகம் வாயுவினாலே கட்டப்பட்ட லோகம். அது கடினமாகப் பூமிபோல புண்ணியவான்களைத் தரித்துக்கொண்டிருக்கும். புண்ணியக்ஷயமானவுடனே வாயு வெளியா யவனைத் தரியாமல் வெளிவாங்கிப்போம். புண்ணியபுருஷனானவன் புண்ணியக்ஷயமானவுடனே வாயுவு நீக்கத்தினாலே கீழே விழுவன்; அப்போது பூலோகத்திலே நட்சேத்திரம் விழுந்துதென்று கண்ணுக்குத்தெரியவரும். விழுகிறவனுடைய நட்சேத்திரங்களாகிய சரீரம் ஆகாசவர்ணம்போலே உருகிப்போய் கீழே சூக்ஷுமமாக விழுவன். விழுகிறபோது சமுத்திரங்களிலாவது, நதிகளிலாவது, காடுகளிலாவது, பருவதங்களிலாவது, பூமியிலாவது, பயிராதிகளிலாவது, தடாகத்திலாவது, பூந்தோட்டங்களிலாவது, வாவிகூபாதிகளிலாவது, கருமானுசாரமாக விழுவன். இன்னவிடத்திலே விழுவனென்று நிட்சயமில்லை. விழுகிறபோது நல்லவாளிடத்திலேபோய்ப் பிறக்கவேண்டுமென்று பிராத்திப்பன்; அந்த நட்சேத்திர தேவசரீர முருகிப்போனபிறகு சூக்ஷுமதேகத்தோடே விழுவன். போனசொரூபமாகத்

திரும்பவருவன். அந்தச்சூக்ஷுமதேகத்தோடே விழுந்து ஆகாசமாய்ப் போய்விடுவன்.

ஆகாசமாய்ப்போனபிறகு வாயுவாய்விடுவன். வாயுவானபிறகு தேயிசுவாவன். தேயிசுவானபிறகு புகையாவன். புகையானபிறகு மேகமாவன். மேகமானபிறகு நீருண்டமேகமாவன். அதின்பிறகு வருஷஜலமாய்ப் பூமியிலே விழுந்து நெல்லு, உளுந்து, பயறு, யெள்ளு, முதலான தானிய விசேஷங்கள் ஒசதிகள், விருக்ஷங்கள், சிறுகொம்பு, புல்லுப்பூடு, கொடி, காய், கிழங்கு, கந்தமூலபலாதி யன்னமயமாய்ப் போய்விடுவன். இவைகளிலே சம்பந்தமாத்திரமிந்தஜன்ம மவனுக்கில்லை. ஆனாலிந்த ஜன்மங்களாருக்கென்றுவர:—பாவிகளாயிருக்கிறபேர் நரகங்களை யநுபவித்துப் பூலோகத்திலேவந்து பாவஷேசத்தினாலே யோஷதிகள், பயிர்கள், மரங்கள், புல்லுப்பூடு, செடி, கொடி, நவதானியங்க ளிந்த ஜன்மங்களை யெடுப்பார்கள். அந்தஜன்மங்களோடே கூடி யதிலுண்டாகிய சுகதுக்கங்களை யநுபவிப்பார்கள். சுவர்க்கத்திலேயிருந்து வருகிறபே ரிந்தஔசதிகள், பயிர்கள், புல்லுப்பூடு, செடி, கொடி, நவதானிய மிவைகள் முதலாகிய அன்னமார்க்கமாக மனுஷதேகத்திலே வந்து, மனுஷ ஜன்மத்தை யெடுப்பார்கள். இவைகளிலே சம்பந்தமாத்திரம், அவர்களுக்கிந்த ஜன்மங்களில்லை. இதிலே யுண்டாகிய சுகதுக்கங்களுமில்லை. ஆகாசமுதலா யோஷதி யன்னம் புருஷதேகங்களிலே வருகிறது. இவைகளெல்லாம் புண்ணியபுருஷாள் சுவர்க்கத்திலே யிருந்து வருகிற மார்க்கமே யல்லாமற் பாவிகளைப்போலே யிந்தஜன்மங்க ளவர்களெடுக்கிறதில்லை. சுகிர்திகளா யிருக்கிறவர்கள், பிராமண க்ஷத்திரிய ஜன்மங்களை யெடுப்பார்கள். பாவிகளாயிருக்கிற

பேர் தாபரஜன்மங்களை, பசு பக்ஷி மிருகாதி ஜன்மங்களை
யெடுத்துப் பிறகு மனுஷஜன்மங்களிலே சண்டாளாதி சங்
கர ஜன்மங்களை யெடுத்துப் பிறகு புண்ணியஜன்மம் வரும்.
புண்ணியவான்களா யிருக்கிறபேர் புண்ணிய ஜன்மங்களை
யெடுப்பார்கள். சுவர்க்கத்திலே யிருந்து வருகிறபேர் தரு
மிஷ்டாளாய்ப் பிறந்து போகபாக்கியமுதலிய ஐசுவரியங்க
ளுடனே கூடித் திரும்பவும் வெகு புண்ணியங்களைப்பண்ணி
யடிக்கடி சுவர்க்கத்துக்குப்போ யடிக்கடி மனுஷலோகத்
திலே வருவார்களென்று சாஸ்திர சித்தாந்தம். சிலபே ரன்
னமயமா யெக்கிய ஹோமத்திரவியங்களாகிய அவிசுமுத
லானதாய்விடுவன். அக்கினியி லோமபாவத்தை யடைந்து
அமிர்தரூபியாய்த் தேவதைகளுக் காகாரமாய்த் தேவதா
திருப்தி பண்ணிவைத் தோமம்பண்ணுகிற விசமானுக் கிஷ்
டபலத்தைக் கொடுத் தாதித்தனையடைந் ததின்பிறகுமேக
மண்டலத்திலே வந்து வருஷஜலமாய்ப் பூமியிலே வந்து
அன்னபானரூபமாய்மனுஷாளிடத்திலே கெற்பத்திலேவரு
வன். சிலபேர் பெரியவாள் ஆதித்தபகவான் தம்முடைய
கிரணங்களினாலே பூலோகத்திலேயுள்ள ஜலங்களையெல்
லாங் கிரணங்களினாலே கிரகித்து மேகங்களிடத்திலேகொ
டுப்பர்;மேகங்கள் வருஷஜலரூபமாய்ப் பூலோகத்திலே வந்
து அன்னபானரூபமாய் ஜீவனாவார்களென்று சொல்லு
வார்கள். சிலபேர் பெரியவாள் மேகங்கள்தானே சமுத்தி
ரத்திலே யிருக்கிற ஜலங்களைக் கிரகித்து பூலோகத்திலே
வருஷிக்கும் வருஷ ஜலரூபமாய்ப் பூலோகத்திலே வந்து
அன்னபானரூபமாய்ப் பிராணியாவனென்று சொல்லுவார்
கள். சிலபேர் பெரியவாள் அக்கினியிலே ஹோமம்பண்ணின
அவிசுகளாகிய யன்னங்கள் ரசரூபமாக ஆதித்தனையடையு

மாநித்தரிடத்திலே நின்றும்மேகத்தின்வழியாகவருஷஜல மார்க்கமாய்ப் பூலோகத்திலேவந்து அன்னபானரூபமாகப் பிராணியாவனென்று சொல்லுவார்கள்.

மேகங்கள் வருஷிக்கிறபோது சமுத்திரங்களிலே வருஷித்து உபயோகமில்லாமல் வியர்த்தமாகப் போய்விடும்; அஃதன்றியிற் சமுத்திரங்களிலே யிருக்கிற செந்துக்கள் பக்ஷிக்கும். இந்த ஜலரூபியா யிருக்கிற வாத்மாவானவன் கருமப்படிக்கிச் சலசெந்துக்களுக்கு மாகாரமாய்ப் போய்ச் சமுத்திரஜலசெந்துவாய்ப்போய்விடுவன். பருவதங்களிலே வருஷித்தாலுபயோக மில்லாமல் வியர்த்தமாய்ப்போவன். பருவத செந்துக்கள் பானம் பண்ணின விவ னந்தச்செந்துவாய்விடுவன். பருவதத்திலே யிருந்து நதிப்பிரவாகங்களினாலே வந்து பயிர்களோடேகூடின லப்பயிராய்ப்போவன். காடுகளிலே வருஷித்தால் ஓசதிகள், சிறுசெடி, கொடி, புல்லுப்பூடு, மரங்கள், விருக்ஷங்களாய்ப் போய்விடுவன். சிங்க வியாக்கிரமுதலான மிருகங்கள், கஜ அசுவங்கள், கர்த்தபங்கள், காட்டுப்பன்றிகள், ஊர்ப்பன்றிகள், மயிடங்கள், கொக்குகளிவைகள் முதலாகிய செந்துக்கள் பானம்பண்ணின லந்தந்தக்கருமப்படிக்கிச் செந்துவாய் விடுவன். உழுகிற பூமியிலே வருஷித்தால் நெல்முதலான நவதானியப்பயிர்களாவன். உழுகிறபூமியில்லாதவிடத்திலே வருஷித்தால் புல்லுக்களாகவும், செடிகொடியாகவும், போய்விடுவன். உவர்ப்பூமியிலே விழுந்தால் வியர்த்தமாய்ப் போய்விடுவன். வாவிகூபதடாகங்களிலேவருஷித்தாற் றடாகஜலமாய்ப்போய்விடுவன். பூமியிலே பயிராய் முளைத்து நஞ்சை புஞ்சையிலே பயிராய்த் தண்ணீரில்லாமல் முளை கருகப்பட்டுப் போனாலும், கதிர் வாங்கியும், கதிர்வாங்கிறதற்கு முன்னுதாக மணிபிடியாமற்

பட்டுப்போனாலும், வியர்த்தமாய்ப்போய் ஜன்மம் வருகிற தாகடினம். பயிர்களாய்க் கீரைகள் கறிகளாய்ப் பாகப்பட்டு மனுஷாளிடங்களிலே வருவன்.கருமப்படிக் கிந்தபதார்த் தங்களை யாரார் பக்ஷிக்கிறார்களோ; அந்த வயிற்றிலே போய் விடுவன்.

இன்னஞ்சொல்லுகிறோம்.நெல்லுப்பயிராய்விளைந்துதானி யமாய்க்கிரகத்திலே வந்து விரையாயுலர்த்தினால் வயலிலே போய்முளைத்துப் பயிராய்த்திரும்பவரவேண்டும்.அந்தத்தா னியங்களைக் குரிவி கொறித்தாற் குருவியாய்ப்போவன். கா க்கை கொறித்தாற் காக்காயாய்ப் போவன்.எந்தப்பக்ஷி ப க்ஷிக்கிறதோ வந்தப்பக்ஷியாய்ப் போய்விடுவன்.பசுக்கள், ம யிடங்கள்,கர்த்தபங்கள்,அசுவங்களாகிய இவைகளந்தத் தா னியங்களைப் பக்ஷித்தாலவைகளுடையவயிற்றிலேபோ யந்த ஜன்ம மாய்விடுவன். அந்தத் தானியங்களைச் சண்டாளன் கொண்டுபோய்ப்பக்ஷித்தாற்சண்டாளனாகப்போய்விடுவன். நாலுக்கன் பக்ஷித்தாற் றாலுக்கனாய்ப் போய்விடுவன். சூத் திரன், வைசியன், க்ஷத்திரியன்,பிராமண னிவர்களிலேயார் பக்ஷித்தார்களோவவர்களாய்ப்போய்விடுவன்.சுவானங்கள், மாற்சாலங்கள், மூஷிகைமுதலானதுகள், பக்ஷித்தா லந்த ந்த ஜன்மமாய்ப் போய்விடுவன். அன்னபான ரூபியாயிருக் கிற விந்தஜீவனை யார் பக்ஷித்தார்களோ; அந்த ஜன்மமா ய்ப் போய்விடுவன். அன்னபானங்களைப் பாலாளாகிய குழ ந்தைகள் பக்ஷித்தால் வியர்த்தந்தானே. கன்னிகைகள், தா ரமன்றியிலே யிருக்கிற ஸ்திரீகள், கெற்பணிகளா யிருக்கிற பேர்கள்,மலடிகளா யிருக்கிறபேர்கள், விருத்தஸ்திரீகள், அமங்கலிகள், பக்ஷித்தால் வியர்த்தந்தானே. பிரமசாரி, வானப்பிரஸ்தன், சந்நியாசி, விருத்தன், ரோகிகள், இந்திரி

யமில்லாதவன், ஸ்திரீயில்லாதே யிருக்கிறவன், மலடன், நபுஞ்சகன், யோகியாயிருக்கிறவன், தபசியா யிருக்கிற பேர்கள், பக்ஷித்தால் வியர்த்தந்தானே. ஸ்திரீபுருஷாளிருவரும் பரிபக்குவங்களாகவிருந் திரண்டுபேரு மன்னபானங்களைப் பக்ஷித்தா விரண்டுபேர்களுடைய தேகத்திலே போய் முந்திச் சுரோணிதமாய்ப் பரிணமிப்பன். புருஷனுடைய தேகத்திலே போயிருந்த சுரோணிதம் பிறகு சுக்கிலமாய்ப் பரிணமிக்கும். புருஷனுடையதேகத்திலே சுக்கிலரூபமாக விருப்பன்.

இவன் காமாதுரனு யீனயோனிகளிலேயும், சூத்திர ஸ்திரீகளிடத்திலேயும், தாசிகளிடங்களிலேயும், பரஸ்திரீகளிடங்களிலேயும், போய்க் கூடி யிந்திரியங்களைவிட்டானேயாகு லந்தந்த ஜன்மங்களிலே பிறப்பாய்ப்போவன். கெற்பணியிடத்திலே போனானேயானால் வியர்த்தமாய்ப்போம். ஸ்திரீகளுக்கு ருதுகாலமாகிய பதினாறுநாளுந் தப்பிக் கூடினானேயானால் வியர்த்தமாய்ப்போவன். ரோகாதிஸ்திரீகள், மலடி, அன்யதுவயதுக்குமேல் ருதுகாலமன்றியிலே யிருக்கிற ஸ்திரீகள், விறுத்தைகளாகவிருக்கிற ஸ்திரீக ளிவர்களுடனே கூடினால் வியர்த்தந்தானே. சொப்பனத்திலே யிந்திரியம்விட்டால் வியர்த்தந்தானே. பூமியிலே, ஜலத்திலே, வஸ்திரங்களிலே, இந்திரியம் விட்டானானால் வியர்த்தந்தானே. பசு, அசுவம், கழுதை, ஒட்டகம், அசம், புருஷாள், புருஷர்களுடனே கூடுகிற திருமுதலானவைகளிலே யிந்திரியம் விட்டானானால் வியர்த்தந்தானே. அத்தையாகிறவள், தகப்பனுடனே கூடப் பிறந்தவள், அம்மாமியாகிறவள், அம்மானுடைய ஸ்திரீ, பெண்கொடுத்த மாமியார், தங்கை, தமக்கை, புத்திரி, சிறியதாயார், பெரியதாயார், குருஸ்திரீ,

மாதா, ராஜபத்தினி, தமையன்ஸ்திரீ, இவர்களுடனே கூடி மைதுனம்பண்ணினுனேயானுலுடனேமஹாபாவியாயதோ கதியாய்ப்போய்விடுவன். தன்னுடைய ஸ்திரீயாயிருக்கிற வளுக்கு ருதுகாலமாயிருந்து பதினுறுநாளைக்குள்ளாக அவளுடனே கூடி யோனியிலே விந்திரியம்விட்டானுனு லிவன் க்ருமப்படிக்கி அவளுடைய கெற்பகோளகத்திலே பிர தமவிந்துபோய்க் கூடித் தெய்வயோகத்தினுலே யதிஷ்டவ சத்தினுலே சுக்கிலசுரோணித மிரண்டுமொன்ருகக்கூடும். ஸ்திரீபுருஷாளிரண்டுபேருக்கும் ரோகமில்லாதிருந்தா லிர ண்டுதாதுக்களு மொன்ருகக்கூடிக் கெற்பந்தரிக்கும். ரோ கத்துடனே கூடியிருந்தால் வியர்த்தமாய்ப்போய்விடும். பா லிலேயுறைமோருகுத்தினுற்போலே புருஷனுடைய சொற் பவிந்து சுரோணிதப்பையினுள்ளே விழுந்து சுரோணிதத்து டனேகலந்து பால் தயிரானுற்போல கெற்பபிண்டமாம். அந் தக்கெற்பமொருமாதங் குழம்பாயிருக்கும்:—அப்போது மா தாவு மிவன் கெற்பத்திலே வந்திருக்கிறதை யறியாள்; பிதா வுமறியான்: அந்தக் கெற்பகோளகத்திலே யிருக்கிற ஜீவ னுமறியாது. அப்போது சர்வக்ஞராகவிருக்கிற வீசுரன் சுக் கில சுரோணிதங்க ளிரண்டையு மொன்ருகச்சேர்த் துரு வாகப்பண்ணுவாரென்று பெரியவாள் சொல்லுவார்கள். அஃதெப்படியென்ருல்? ருதுகாலத்திலே ஸ்திரீ புருஷாள் கூடுகிறபோது சுக்கிலசுரோணிதங்களை யொன்ருகக்கூட் டிச் சரீரமுண்டாகிறதற்கு ஈசுரரானவர் பஞ்சமஹாபூதங் களைச் சுக்கிலசுரோணிதங்களுடனே கூட்டி யொன்ருகக் கலப்பரென்று சொல்லுவார்கள். இரண்டாமாதங் கெற் பவாயுவும், சாடராக்கினியும், பட்டுச் சுக்கிலசுரோணித மி றுகும்; பின் மாமிசபிண்டமாம். மூன்ருமாதம் விருத்தி

யடையும், கால் கை யவயவங்களங்குரிக்குமென்று சொல்லுவார்கள். கருமவசத்தினாலே முதமாதம், இரண்டாம்மாதம், மூன்றுமாதம், கெற்பங் கரைந்துபோம்; தெய்வயோகத்தினாலே கெற்பந்தரித்து நாலாமாதம்வந்தா லங்கங்களவயவங்களெல்லாம் விருத்தியடையும். ஐந்தாமாதங் கெற்பத்திலே பிராணன் சலிக்கும். நாலாமாதத்திலேதானே கெற்பஞ் சலித்தசையுமென்று சொல்லுவார்கள்.

ஐந்தாமாதத்திலே யங்க மயிர் முதலான வுபாங்கங்கள், சகல அவயவங்களெல்லாம் பூரணமாமென்று சொல்லுவார்கள். ஆகாசபூதத்திலே நின்றும் நாலாக வவகாசம், வியானவாயு, சுரோத்திர விந்திரியம், சத்த மிவைகளெல்லாஞ் சிசுவுக்குண்டாம். வாயு பூதத்திலே நின்றும் ஜலனம், பிராணன், தொக்கிந்திரியம், பரிச மிவைகளெல்லா முண்டாம். தேயுவிலே நின்றும் வுஷ்ணபாவம், சக்ஷு விந்திரியம், ரூப மிவைகளெல்லா முண்டாம். அப்புவிலே நின்றும் ரசவிந்திரியம் ரசங்கள் சையித்திய மிவைகளெல்லா முண்டாம். பிருதுவியிலே நின்றும் கடினமாகக் கிராண விந்திரியங் கந்தமுதலாகிய குணங்களுண்டா யிருக்கும். ஆகாசத்தோடேகூடி யிருக்கிற வாயுவிலே நின்றும் மனதுண்டாம், தேயுவிலே நின்றும் புத்தியுண்டாம், அப்புவிலே நின்றுஞ் சித்தமுண்டாம்,பிருதுவியிலே நின்றும் அகங்கார முண்டாயிற்றென்று சொல்லுவார்கள். பிருதுவியி னுடையகூறு:—மயிர், தோல், எலும்பு, நரம்பு, தசை, ஆகவைந்து. அப்புவின்கூறு:—நீர், மூளை, உதிரம், விந்து, மச்சை, ஆகவைந்து. தேயுவின் கூறு:—ஆகாரம், சோம்பல்,பயம், மைதுனம், துயில், ஆகவைந்து. வாயுவின்கூறு:—ஓடல், நடத்தல், இரு

த்தல், கிடத்தல், தத்தல், ஆகவைந்து. ஆகாசத்தின் கூறு:— லோபம், குரோதம், மோகம், மதம், மாச்சரியம், ஆகவைந்து. சுரோத்திரம், தொக்கு, சக்ஷு, சிங்குவை, யாக்கிராணம், ஆகஞானவிந்திரியமைந்து. அவைகளினு லநுபவிக்கப்படும் விஷயங்கள்:—சப்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம், ஆகவைந்து. கருமேந்திரியம்:—வாக்கு, பாதம், பாணி, இலிங்கம், குதம், ஆகவைந்து. அவைகளினு லநுபவிக்கப்படும் விஷயங்கள்:—வசனம், கமனம், தானம், ஆனந்தம், விசர்க்கம், ஆகவைந்து. ஆகியஞானேந்திரியங்கள், கருமேந்திரியங்கள், அதினுடையவிஷயங்கள், பஞ்சமஹா பூதங்களிலே நின்றுஞ் சிசுவுக்குண்டாம். வாயுவினிடத்திலே நின்றும்:-பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், ஆகப்பஞ்சப் பிராணன்களுமுண்டாயிற்று. துவக்கு, அஸ்தி, மாம்சம், உதிரம், மேதசு, மச்சை, சுக்கிலம், மூத்திரம், மலம், கிருமி, ரோகம், இந்தக்கூட்டுறவே சரீரம். முன்னூற்றறுபது யெலும்பு, யெழுபத்திராயிர நாடி, மூன்றரைக்கோடி ரோமம், தொக்குகளாறு பதினொரு துவாரங்க ளென்றுஞ் சொல்லுவார்கள். நாபி, சிரசு, இரண்டு மடைபட்டிருக்கிறபடியினாலே நவத்துவாரமென்று சொல்லப்படும். சரீரத்திலே:—சேட்டுமம் நாழி, பித்த முழக்கு, சுக்கில மாழாக்கு, ரசமொன்பது, ஜலம் அஞ்சலி, பத்தஞ்சலி மலம், ஏழஞ்சலி ரத்தம், எட்டஞ்சலி மூத்திரம், நாலஞ்சலி சுக்கிலம், ஒரு அஞ்சலி சேட்டுமம், ஆறஞ்சலி பித்தம், அஞ்சு வசை, மூன்று மேதை, இரண்டு மச்சை, ஒன்று கரு, ஆறுமாதத்திலே சேதனமாகிய அறிவுண்டாம். மாதாவுக்குப் பசிதாகமுண்டானாற் சிசுவுக்கும் பசிதாக முண்டாம். மாதாவினுடைய ஆகாரமே சிசுவுக்காகாரம். மாதாவானவள் மிளகாய் மிளகு பக்ஷணம் பண்ணி

ளால் சிசுவுக்கு மெத்தக்கரிப்பா யிருக்கும். மாதாயெந்தவஸ்துக்களை யபேக்ஷிக்கிறளோ; அந்தவஸ்துவைச் சிசுவு மபேக்ஷிக்கும். ஆனபடியினாலே:—கெற்பணியாக விருந்தாலபேக்ஷித்த பதார்த்தத்தைக் கொடுக்கவேண்டும். சுக்கிலம் அதிகமாகவிருந்தா லாண்பிள்ளை பிறக்கும். சுரோணித மதிகமாகவிருந்தாற் பெண்பிள்ளை பிறக்கும். இரண்டுஞ்சமனானால் அலியாகப் பிறக்கும். மாதாவானவள்:—வழிநடந் தாயாசப் பட்டாலும், சுமைகள், தீர்த்த குடங்கலெடுத்தாலும், உலக்கைகுத்தினாலும், நிரம்பவேலை செய்தாலு மாதாவினுடைய ஆயாசவேதனை யெல்லா மந்தச்சிசுவுக்குங் காணப்படும்.

மாதாவினுடைய விரண்டுபக்கத்தெலும்பு மந்தச் சிசுவுக் கிரிவாட்போலே யறுக்கும். மாதாவினுடைய கெற்பவாயு, சாடராக்கினி, மாதாவினுடைய கெற்பத்திலேயிருக்கிற கிரிமி, புழுக்கள், சிசுவை யுபாதிக்கும். மாதாவினுடைய மலமூத்திரங்களிலே கிடந் துழைந்துகொண்டிருப்பன்; அந்தச் சிசுவை மாதாவினுடைய கெற்பப் பையிலேபோட்டுக் கட்டியிருக்கு மான படியினாற் கைகா னீட்டவு முடக்கவும் படாது. மாதாவாயிருக்கிறவ ளதிகமா யாகாரத்தைப் பக்ஷித்தாளானாற் சிசுவுக்கு மெத்த நெருக்கமாய் மூச்சுவிடமாட்டாமல் மிகுந்த வுபாதியாயிருப்பன். மாதாவாயிருக்கிறவள் துக்கப்பட்டாற் சிசுவுக்குத் துக்கமும், மாதாவுக்குச் சந்தோஷமானாற் சிசுவுக்குஞ் சந்தோஷமுண்டு. சிலபேர் யேழாமாதத்திலே யறிவுவருமென்று சொல்லுவார்கள். ஏழாமாதத்திலே பூரணஞானமா யிருக்கும், சகல தாதுக்களும் புஷ்டியாகத்தானேயிருக்கும், அப்போது பூருவமெடுத்த வனந்த ஜன்மங்களெல்லாந் தோணப்படும், எட்

டாமாதத்திலே யிந்த ஞானங்களெல்லா முண்டாமென்று சொல்லுவார்கள். கருமவசத்தினாலே நாலாமாதம், அஞ்சா மாதம், ஆறுமாதம், ஏழாமாதம், எட்டாமாதங்களிலே கெற்பஞ் சேதமாய்ப்போமென்றுஞ் சொல்லப்படும். தெய்வ கடாக்ஷத்தினாலே சிசுத் தப்பிப்பிழைத்திருந்தாலெட்டாமா தத்திலே பூருவக்ஞானங்களெல்லா மினைப்பன். எட்டா மாதத்திலே பிராணன்களுக்கு யிருப்பிடமாக விருக்கிற மாமிசபிண்டமானது சிசுவைவிட்டு வெளியிலே வந்து மா தாவினுடைய கெற்பத்திலே யடிக்கடிபோயிருக்குமான தால் யெட்டாமாதத்திலே பிறந்த பிள்ளை யந்த மாமிச பிண்டத்தைவிட்டுப் பிரிந்தபடியினாலே யெட்டாமாதம் பிற ந்தபிள்ளைக்குப் பிராணனில்லாமல் ஜீவியாதபடியினாலே மரி த்துப்போமென்று யாக்கியவற்கர் ஸ்மிருதியிற் சொல்லியிரு க்கிறார். எட்டாமாதத்திலே தன்னுடைய வனந்தகோடி மாதா பிதாக்களையும், தன்னுடைய ஜன்மங்களையும் ஸ்மரி ப்பன். தான் அனந்தஜன்மம் பிதாவாக விருந்தோம், அன ந்தஜன்மம் புத்திரனாகவிருந்தோம், அனந்தஜன்மந் தம்பி யாகவுந் தமையனாகவுமிருந்தோம், அனந்தஜன்மங்களேவுகி றவனாகவு மேவப்படுகிறவனாகவு மிருந்தோம், மனுஷஜன்ம ங்கள், பசு பக்ஷி, மிருகாதி ஜன்மங்கள், தாபரஜன்மங்க ளாக நாமெடுத்த ஜன்மமளவில்லை; தேவலோகத்துக்கு மனேகந்தரம் போய்வந்தோம், நரகத்துக்கு மனேகந்த ரம் போய்வந்தோம், அனேகமாயிர மாதாவினுடையகெற் பகோளகத்திலே வருத்தமெல்லா மநுபவித்தோம், அனந்த சமுசாரதுக்கத்தை யடைந்தோம், நரகாக்கினியிலே யனந் தகோடிகாலந் தந்தனைத் தபித்துக்கொண்டிருந்தோம், அண்டசங்களாயிருக்கிற பக்ஷிஜன்மங்களாயும், சுவேதசங்

களிலே யுண்டான கிருமி கீடாதி ஜன்மங்களாகவும், உற்பிச்சங்களிலே யுண்டான விருக்ஷாதி ஜன்மங்களும், சராயுசங்களிலே யுண்டான மனுஷாதி ஜன்மங்களும், தேவயோனியிலெடுத்தஜன்மங்களு மிவைகள் முதலானதுகளிலே யெண்பத்துநாலுலக்ஷம் ஜன்மங்களுமெடுத்தோம்; ஆற்றுமணலை யெண்ணினாலுமெண்ணலாம், நாமெடுத்த ஜன்மங்களை யெண்ணக்கூடாதென் றிவைகளை யெல்லா நினைத்துத்துக்கிதனாய்க் கிலேசப்பட்டுக்கொண் டெப்போநாமிந்தயோனியிலே நின்றும்விடுபட்டுப் பூமியிலே போவமோ! அனந்தகாலம் நரகங்களை யநுபவிக்கலாம், கெற்பநரகத்தை யொருசணிகமானாலு மநுபவிக்கக்கூடாதென்று மஹாதுக்கிதனாய்ப் பூமியிலே ஜனித்தவுடனே சாங்கியயோக தத்துவக்ஞானங்களை யப்பியாசிக்கவேண்டும், நல்ல தருமங்களைத்தானே பண்ணவேண்டும், நல்ல வாசாரத்தைத்தானே பண்ணவேண்டும்; எக்கியம், தானம், தபசு யிவைகளெல்லா மீசுரப்பிரீதியாகப்பண்ணவேண்டும், ஈசுரனை யுபாசிக்கவேண்டும், சிவனாகிய மஹாதேவரைச் சரணமாக வடையவேண்டும், தத்துவக்ஞானத்தை யப்பியாசிக்கவேண்டும், சிவனாகியமஹாதேவ குருப்பிரசாதத்தினாலேயும், பிரமக்ஞானத்திலேயும், கைவல்யத்தை யடையவேண்டும், மாதாபிதாக்கள், பெரியவாள், குரு, அதிதிமுதலானபேர்களுக்கும், பூசைபண்ணிச் சிசுருஷையும் பண்ணிச் சந்தோஷம் பண்ணிவைக்கவேண்டும், நித்திய பதமான பிரமபதத்தை யடையவேண்டும், நமக் கினிமேற் ஜன்மந் தேவையில்லையென் றிப்படிப் பிரார்த்தித்துக்கொண் டிருப்பன்.

இப்படியிருக்கிறபோது மாதாவுக்குச் சரீரத்திலே:—சுரம் தலையிடி, வயிற்றுவலி, வயிற்றுக்கடுப்பு வியாதிகள்

வந்தா லந்த வேதனைகளெல்லாஞ் சிசுவுக்குஞ்சரியாகத்தா னே யிருக்கும். பாவத்தினாலே யெட்டாமாத மொன்பதா மாதங்களிலே கெற்பத்துக்குள்ளேதானே சிசுமரித்துப் போனாலும் போய்விடும். அப்போது சிசுவை யறுத்துத் துண்டதுண்டமாய் வெளியிலே வாங்குவார்கள். இந்தவுபா திகளிலே மாதா பிழைத்தாலும் பிழைப்பாள்; மரித்தாலும் மரிப்பள்; தெய்வாதீனமா யிரண்டுபேரும் பிழைத்திருந்தா ல்; ஒன்பதாமாதம் பத்தாமாதங்களிலே வெளியிலே வருவன். அவன்வருகிறபோது குடத்திலேவளர்ந்த பூசணிக் காயைப் பிறகு வெளியிலே வாங்கிறதுபோலே யிவன்வெளி யிலே வருகிறது மெத்தக்கடினம். இவன் பிறக்கிறபோது பிரசபவேதனையினாலேயும், வயிற்றுவலியினாலேயும், மாதா மெத்த வேதனைப்படுவள்; சிசுவுக்கு மந்த வேதனையெல்லா முண்டு. அந்தப்பிரசபவாயுவு சிசுவை யதோமுகமாய் யோ னி ரந்திரத்திலே தள்ளும். அந்தயோனிரந்திரத்திலே வரு கிறபோது நெருக்கத்தினாலே மூர்ச்சைபோய்விடும்;மூர்ச்சித னாய்.வெளியிலேவருவன்.யோனிரந்திரத்திலே வெளியிலே வரமாட்டாமலந்தச்சமையத்திலே மரித்தாலு மரிப்பன்;தெ ய்வாதீனத்தினாலே வெளியிலே வருவன்.பிறந்தவுடனே மரி த்தாலு மரிப்பனல்லவென்று ஜீவித்திருந்தானானால்;மூர்ச்சி தனாய் வெளியிலே வருவனென்று முன்சொன்ன பிரகாரம் பூமியிலே விழுந்தபிறகு மூர்ச்சை தெளியுமுடனே பூருவ க்ஞான மறைந்துபோம். அதுவேதென்னில்? விஷ்ணுமாயை யாகிற பாகிய வாயுவந்து மறைத்துப்போடு மப்பா லொரு ஞான மில்லாதேபோய்விடும்.

சிசுவானது மாமிசபிண்டம்போலேயிருக்கும்; கூவாக் கூவாவென் றழு மது மாதாபிதாக்களுக் கொன்றுந் தெரி

யாது, மாதாவானவள் யீகளெறும்புகள், பாம்புபல்லிகள், பூனைபெருச்சாளி யிவைகளெல்லாங் கிட்டவரவொட்டா மற்சாவதானமாகத்தானே ரக்ஷிப்பள். அக்ஞானத்தினாலே பிள்ளை பசித் தழுதால்; வயிற்றை வலித் தழுகுதென் றுமிள கைப் புகட்டுவள். வயிற்றைவலித் தழுதாற் பசித் தழுகு தென் று பாலைப்புகட்டுவள். மாதாவைக்கண்டாற் பசாசைக் கண்டாற்போலே விபரீதமாகத்தோணும். எறும்பு, ஈய்கள், கொசுக ளிவைகளெல்லாங் கடிக்கும். மாந்தம், கணம், கரப் பான், பக்ஷிதோஷம், குளிதோஷமிவைகளெல்லாம்வந் து பாதிக்கும். காலைக்கையை யசைக்கவு,மந்தப்பக்க மிந்தப்பக் கம் பிரளவுமுக்காரவு மெழுந்திருக்கவுஞ் சக்தியில்லாமலச த்தனாகக்கிடப்பன். பாலியத்திலே வருகிறரோகங்களுபாதிக் கும். பத்துநா ளொருமாதத்துக்குள்ளாக மாதாவுக்குச் சயி த்தியம்பிறந்து தோஷித்துப் பரலோகத்தையடைந்தாலு ம டைவ னல்லவென் று சுகமாகவிருந்தாலுமிருப்பள். பாலியத் தில் வருகிற ரோகங்களினாலே, சிசு பரலோகத்தை யடைந் தாலுமடையு மல்லவென்று சீவித்திருந்தாலு மிருக்கும். இன்னஞ்சொல்லுகிறேம்; குழைந்தை பிறந்தவுடனே குழந் தை பிராணனோடே புத்திரன் மூகம் பிதாப்பார்த்தாற் பிதிர்க்கடன்தீருமென்று சாஸ்திரம். பிள்ளை பிறந்தவுடனே பிதாவானவர் சாதககருமம் பண்ணிப் பன்னிரண்டாநாள் நாமகரணம்பண்ணிப் பூரி சிலவழிப்பர். அதினாலே சிசுவுக் குத் தோஷபரிகாரம். சிசு பிறந்தவுடனே, புத்திரோற் சபம், சாதககருமம், நாமகரணம், ஆறுமாத மன்னங்கொ டுத்தல், மூன்றும் வருஷஞ் சிகைவைக்கிறது, எட்டாம் வருஷ முபநயனம், அக்ஷராப்பியாசங்க ளிவைகளெல்லா மந்தந்தக் காலங்களிலே தப்பாமற் பண்ணவேண்டும். இ

வைகளெல்லாம் பிதாவினுடைய கிருத்தியம். சிசுவினுடைய கிருத்தியஞ் சொல்லுகிறோம். சிசுவானவன் மலமூத்திரங்களோடே பிரண்டமேத்தியங்களைப் பக்ஷித்துக் கிருமி கீடாதிகள், எறும்பு, ஈகள், முதலானவைகள் கடிக்கவுபத்திரத்தினாலே வாதைப்படுவன். மாதாவானவள்:—உஷ்ணஜலத்தினாலே அடிக்கடி குளிப்பாட்டி, எறும்பு, ஈகளெல்லாந் துடைத்து, அடிக்கடி யுச்சியிட்டு, அடிக்கடி தன்னியபானங் கொடுத்து, வஸ்திரத்தினாலே போர்த்து, மார்ச்சாலாதி, மூசிகங்கள் முதலானது வாராமற் காத்து, மடியிலேயும், மார்பிலேயும், கையிலேயும், வைத்துக்கொண்டிந்தப்படி நித்திரையுமில்லாம லிராத்திரிபக லிரக்ஷிப்பளப்பாற் றொட்டியிலே போட்டடிக்கடி சீராட்டி ரக்ஷிப்பளப்பாற் சிசுவானது, இந்தப்பக்க மந்தப்பக்கம் பிரள, குப்புற்றுக்கொள்ள, தவழ விந்தப்படி சஞ்சரிப்பன். அப்போது, பாம்பு, பல்லி, புழு, பூச்சி, விளக்கு, நெருப்பு, இவைகளைக் கையினாலே பிடிக்க, இவைகளினாலே, சிசு துக்கப்பட, இந்தப்படி துக்காக்கிராந்தனாக விருப்பன். அப்பால் மாதாபிதாக்கள்:—அப்பா, அம்மா, ஐயா, அண்ணா வென்று வார்த்தைகள் படித்துக்கொடுப்பார்கள். ஒக்கலிலேயும், தோளிலேயும், மார்பிலேயும், மாதாபிதாக்கள் முதலானபே ரெடுத்துச் சீராட்டுவார்கள். அடிக்கடி சிசுவுக்கு பால்வாசனை, அன்னபானவாசனை, யெல்லாம் படிப்பிப்பார்கள். காது, கை, கால், அரை, இந்த அவயவங்களிலே:—கடுக்கன், மோதிரம், அரைஞாண், தண்டை முதலான பூஷணங்களைத்தரித்துச் சீராட்டுவார்கள். அடிக்கடி யப்பியங்கம், வயறுபேதிக்கக் காரம் முதலான மருந்துகள் கொடுத்துக் காப்பாத்துவார்கள், இப்படியிருக்கச்சே; மாந்தம், கணம், பக்ஷி

தோஷம், அம்மைவார்த்தல் முதலான வியாதிகளினாலே சிசுப் போய்விடும் அல்லவென்றுபிழைத்தாலும் பிழைக்கும்.

இப்படியிருக்கச்சே யொருசம்வர்ச்சரமாகும். அதிலே தாபத்திரயம் வந்து வாதிக்கும். தாபத்திரயமாவதெதுவெனறாவா:—ஆதியாத்மீகம், ஆதிபவுதிகம், ஆதிதெய்வீகம், ஆக மூன்று. ஆதியாத்மீகமாவதெதுவென்றால்? சுராதிமுதலான நாலாயிரத்தி நானூற்று நாற்பத்தெட்டுவியாதிகள். ஆதிபவுதிகமாவதெதுவென்றால்? சோரவியாக்கிர சர்ப்பாதிபயம். ஆதிதெய்வீகமாவதெதுவென்றால்? இடி, மின்னல், வருஷம், பெருங்காற்று, மண்டபங், கோபுரமிடிந்து விழுகிறதிவைகளினாலேவருகிறபயமென்று சொல்லப்படும். இப்படித் தாபத்திரயங்களினாலே வாதைப்படுவன். லோகத்திலே மனுஷாளுக்கிரண்டுவித மரணம். அதுகாலமிறுத்தியுவபமிருத்தியுவென்றிரண்டிதிற் காலமிறுத்தியுவாவதுயாதென்றால்? ஆயுள்முடிந்து மரணமாகிறது. அபமிறுத்தியுவாவது யாதென்றால்? ஆயுளிருக்கச்சே யொரு பாவவிசேஷத்தினாலே மரணம்வரும். அஃதெப்படியென்னில்? யெண்ணையுந் திரியுமாண்டு விளக்கணைகிறதுபோலக் காலமிறுத்தியு. அபமிறுத்தியுவாவதுயாதென்றால்? யெண்ணையுந்திரியுமிருக்கச்சே காற்றுவந்து விளக்கையணைக்கிறதுபோலே யபமிருத்தியுவென்றுசொல்லப்படும. லோகத்திலே யொருவோடத்திலே வெகுபேரேறிக் கடலோடச்சே வோடங் கவுழ்ந்தவுடனே யத்தனைபேரு மொருமிக்க வொருக்ஷணத்திலேசாகிறார்களிது விப்போ வபமிறுத்தியுவென்று சொல்லப்படும். இதுவல்லாமலும் யுத்தகளத்திலே யாயிரம்பதினாயிர மேக காலத்திலே சாகிறார்களிது வபமிறுத்தியு: மிகுந்த பஞ்சம்

வந்து லக்ஷங்கோடி யிறந்துபோனார்க ளிது வபமிருத்தியு; அர்த்தராத்திரியிலே மஹாநதிப்பிரவாகம்வந் தாயிரம்பதி னாயிரம் லக்ஷம்பேர் வெள்ளத்தோடேபோய் மரித்துப் போனார்க ளிதுமுதலானதெல்லா மபமிருத்தியு. வற்சனாபி அலரி தின்று சாகிறது, நாண்டுகொண்டுசாகிறது, கிணறு குளங்களிலே விழுந்துசாகிறது, மரங் கோபுரமுதலானதி லே யேறி விழுந்துசாகிறது, பாம்புகடித்துச்சாகிறது, மாடு கரடி யானை புலி பாய்ந்து சாகிறது, அகங்காரத்தினாலே நஞ்சுதின்றும், நாக்கைப்பிடுங்கிக்கொண்டுங் குத்திக்கொ ண்டுமிப்படிச்சாகிறதுமபமிருத்தியுவானதுன்மரணம். இவர் களுக்குப் பசாசத்துவம் வரும். சரீரமெடுத்தா லிந்தவாபத் துக்களெல்லா முடந்தையாய்வருமிந்தப்படி யநுபவிப்பன்.

சிசுவானவ னிரண்டாம்வருஷம், மூன்றாம்வருஷம், விளையாட்டி லாசையுள்ளவனாய்; இராப்பகல்:—வாசல் முத் தம் தெருப்புறமிவைகளிலேயும், அசலாத்துக்குழந்தைகளு டனேயும், விளையாடுவனப்போது பசிதாகமுதலானதுந்தோ னும லசலாத்துப்பிள்ளைகளை யிவனடிக்கவு மிவனை யசலாத் துப்பிள்ளைகளடிக்கவு மழுதுகொண்டுவருவ னிந்தப்படி திரி கிறபோது மாடுகன்று பாய, கிணறுகுளங்களிலே விழ, பாம் புகடிக்க, இவைகளைக் கண்டு மாதாபிதாக்க ளடிக்க விப்ப டித்துக்கிதனாகவிருப்பன். பந்தடிக்க, சில்லடிக்க, சடுகுடுப் பாய, களக்கொட்டியாட, இவைகளினாலேயுபத்திரம்வரும். ஆறு, குளங், கிணறு, இவைகளிலே யசலாத்துப்பிள்ளைக ளுடனே குளித்து விளையாடும்போது தண்ணீரி லமிழ்ந்தி மரித்துப்போனாலும்போவ னிப்படி யிந்தக்கால முபத்திர ப்படுவன். அக்ஷராப்பியாசத்துக்கு வைப்பார்க ளப்போது

வாசிக்கிற வாத்தியாரிடம் போகமாட்டோமென்று களவ டிப்பன். வாயிலே வித்தைவராமல் வாத்தியாரடிப்பர், ஆத் திலேவந்தாற் பள்ளிக்கூடத்துக்குப் போகவில்லையென்று மாதா பிதாச் சிக்ஷைபண்ணுவார்க ளப்போ தொளிந்து கொள்ளுவன், கூடவாசிக்கிறபிள்ளைகள் பிடித்துக்கொண் டுபோய் வாத்தியாரிடத்திலே விட்டுத் தெண்டனைபண்ணி யடிப்பார்கள். மாதாபிதாக்கள் வித்தைவரவில்லையென்றுந் துஷ்டத்தனம் பண்ணுகிறானென்றுஞ் சொல்லி யடிப்பார் கள். ஆத்திலே யன்னத்துக்கில்லாமற்போனாற் பிக்ஷைக்கி ப்போவன், இப்படி வாலிபமெல்லாம் விளையாட்டினாலே யும், வித்தையாப்பியாசத்தினாலேயும், துக்கப்படுவன். சிக்ஷை பொறுக்கமாட்டாமற் குளங்கள் கிணறுகளிலே விழுந்து செத்துப் போனாலும் போவன். பிழைத்திருந்தால் வாலிப துக்கமாகிய வனந்ததுக்கங்களை யநுபவிப்பன்.

இப்படி யிருக்கச்சே வாலிபத்திலேதானே; மாதாபிதா க்கள் கலியாணம் பண்ணிவைப்பார்க ளப்பா லெவ்வனம் வரும். ஸ்திரீயும் வருவ ளப்போது மாதா பிதாக்கள்சொன் னவார்த்தைகேளாமல் ஸ்திரீபிராந்திவரும். வந்தா லிஸ்திரீ யிருக்கச்சேயு மோகத்தினாலே; பரஸ்திரீகள், தாசிகள், முதலான விஷயங்களிலே சஞ்சரிப்பன். இது நிமித்தியம் வீட்டிலே யிருக்கிற திரவியங்களுடைமைகள், பண்ட பதார்த் தங்களைத் திருட்டுப் பண்ணி யெடுத்துக் கொண்டு போய்க் கொடுப்பன். இப்படிப்பரஸ்திரீ சஞ்சாரத்திலே யவர்களு டைய பத்தாவானவன் கண்டா லடிதெண்டமாக வடித்துக் கொல்லுவன். ராஜாவறிந்தா லாஸ்திபாஸ்தி சகலமு மற மாறிப் பிராணனுக்கும் வரும். இது வல்லாமலுந் தாசிகளு டனே சஞ்சரிக்கிறபோது கிரந்திரோகமுதலான வியாதி

கள்வருமதினாலே துக்கப்படுவன். தாசிகளுக் குள்ளமட்டுங் கொடுப்பனவரு மிவன்கையிலே யுள்ளமட்டு முபசாரம் பண்ணுவள்; கைக்கில்லாதே போனாற் கிட்ட வாரவேண்டாமென்று சொல்லுவளதினாலே மிகுதியுந் துக்கப்படுவன். தாசி நிமித்திய மசல்வீட்டிலேபோய்த் திருடுவனவர்கள்கண்டு பிடித்து அடிதெண்டமாக வடித்துச் சிக்ஷிப்பார்களதனாற் பிராணனுக்கு மானிவரும். இப்படிக் காமாந்தகாரனாகத் திரிவன். கூத்தும், பாட்டும், விடமார்க்கமுமாகத் திரிவன். கிரமமன்றியிலே யீனசாதி ஸ்திரீகளிலே சஞ்சரிப்பன். மாதாபிதாக்கள் சிக்ஷிப்பா ளெப்போதுந் துக்கந்தானே. தாசிகளிடமாய் மோகத்திலே யகப்பட்டுக் கிருத்தியாகிருத்திய விவேகந் தெரியாமல் விகிதங்களாயிருக்கிற தருமங்களை விட்டுவிட்டு நிந்திதங்களாயிருக்கிற கருமங்களைப் பண்ணிக்கொண் டிந்திரிய நிக்கிரகமன்றியிலே பதிதகிருத்தியங்களாய் நடந்துகொள்ளுவன். காமத்தினாலே பீடிக்கப்பட்டவனாகயிருந்துகொண்டு:- காமப்பிரதானனாய்க் காமமே பிரதானம், காமமே புருஷார்த்தம்; காமமேஜகத்தாகத் தோனும். காமமோகிதனா யிருந்துகொண்டு; விபசார ஸ்திரீகளைத்தானே:—இராவும் பகலுஞ் சிந்திப்பன். அவாளுடைய சல்லாபம், அவாளுடைய பிரியவசனம், அவாளுடைய வார்த்தை, அவாளுடைய வபிநயங்களாகிய இவைகளைத்தானே சிந்திப்பன். அவாளுடைய வங்கமவையவங்கள், அலங்காரம்பண்ணிய கூந்தல்கள், கன்னங்கள், லலாடம், புருவங்கள், கண்கள், நாசிகள், தந்தங்கள், அஸ்தங்கள், ஸ்தனங்கள், நாபி, இடைகள், சகனம், நிதம்பம், துடைகள், கணைக்கால்கள், பாதங்கள், இவைகளைத்தானே; வர்ணித்து விபசாரிகளுடையவிலாசகமனங்கள், விலாச சேஷ்டைகள், விலாச

மந்தகாசங்கள், விலாசகடாக்ஷங்கள், விலாசவசனங்கள், விலாசகிரீடைகள், அவர்களுடைய வங்க சவுந்தரியங்கள், இவைகளைத்தானே வர்ணித்து, இவைகளைத்தானே மெய்யென்று பிரமித்து, இவையே புருஷார்த்தமென்று அவர்களுடனே சஞ்சரிப்பன். பிதாச்சம்பாதித்த தனங்களெல்லாந் தாசிகளுக்குக் கொண்டுபோய்க் கொடுப்பன். சிலபேர் தாசிகளைச் சேர்ந்தவைப்பாக வைத்துக்கொண்டு இஷ்டபதார்த்தமெல்லா மவாளுக்குக்கொடுத்தவர்களுடனே சஞ்சரிப்பன். அந்தவிபசாரிகள் தனங்களையும், பிராணன்களையும், அபகரிப்பார்கள். அட்டைக்கடியாகிலு மிரத்தத்தை மாத்திரமபகரிக்கும். தாசிகள், உயிர்தனங்க ளெல்லாத்தையு மபகரிப்பார்கள். காமாந்தகாளா யிருக்கிற சிலபேர், கொக்கோகம், பரதசாஸ்திரங்கள், இவைகளெல்லா மப்பியாசிப்பார்கள். சிலபேர் யெக்கியங்களைப் பண்ணிச் சுவர்க்கத்திலேபோய், ரம்பை யூருவசி முதலான தேவஸ்திரீகளை யநுபவிக்கலாமென்று சொல்லுவார்கள். அதைக் கண்டதா ரிகலோகத்திலேதானே காம யெக்கியத்திலே இச்சித்துப் பிதா சம்பாதித்திருக்கிற தனங்களை, தாசிகள் கையிலே கொடுத்துப்பிரத்தியக்ஷ சவுக்கியத்தையநுபவிக்கிறதே பிரதானம்; காமமே நித்தியம், போகமே மோக்ஷமென்றுங் காமாந்தகாளாய்த் திரிவார்கள். சில காமாந்தகாளாகவிருக்கிறபேர் விபசாரிகளுடனேகூட மத்தியபானங்களைப் பண்ணுவார்கள். சிலபேர் விபசாரிகளுடனே கூடிச் சத்திபூசையென்றும், மதுமாமிசங்கள் பக்ஷித்தந்த விபசாரிகளுடனேகூடி யிப்படிச் சஞ்சரிப்பார்கள்.

ராஜாக்களறிந்தா லவனையுமிவனையுந் தேசாந்தரத்திலே துரத்திவிடுவார்கள், அந்தத் துக்கங்களையுமநுபவிப்

பார்கள். அதிக சஞ்சார போகத்தினாலே தேகத்திலேயும், இலிங்கத்திலேயும், வருகிறரோகம்; நீரிழிவு, நீர்க்கடுப்பு, சயரோகம், கிரந்திரோகம், அரையாப்பு, அண்டவாதம், பவுத்திர மிவைமுதலான ரோகங்களெல்லாம் வரும். சிலபேர் தன்னுடைய ஸ்திரீயிருக்கச்சே யதை விட்டுப்போட்டுப் பரஸ்திரீகமனம் பண்ணுவார்கள், அவனை அடிதண்டமாக வடித்து வீட்டையும் பிடுங்கி யரண்மனையிலே காட்டிக்கொடுத்துப் பங்கு மனைகளாஸ்திபாஸ்திகளெல்லாமற மாறிக்கொண்டு தேசாந்திரத்திலே துரத்திவிடுவார்கள். சிலபேர் தன்னுடைய ஸ்திரீகளோடேயும், பரஸ்திரீகளோடேயு மிருப்பார்கள். சிலபேர் ஸ்திரீகளிருக்கையிலே வேறேயும்ஸ்திரீகளைக் கலியாணம்பண்ணி அந்தத் துக்கங்களையு மநுபவிப்பார்கள். சிலபேர் காமாதுரராளாய் ஸ்திரீகள் வார்த்தையைக் கேட்டுக்கொண்டு, மாதாபிதாக்களைத் தூஷித் தவர்களுக்கன்னபானாதிகளுங் கொடாமற் பிறத்தியாராலே தூஷிக்கப்பட்டுக்கொண் டிருப்பார்கள். மாதாபிதாக்களுக்குச் சொன்னபடி கேட்டுக்கொண் டநுகூலப்பிரியமா யிதமாய் நடப்பார்களவாள்மித்திரபுத்திராள். சிலபேர் மாதாபிதாக்களைத் தூஷித்துச் சொன்னபடியுங்கேளாமல் விபரீதமாய் நடந்து கொண்டவர்களுக் கைதத்தைத்தானே யாசரிப்பவர்கள் சத்துரு புத்திராள். ஜன்மாந்திரத்திற் கடன் கொடுத்தவர்களா யிருக்கிற சிலபேர் மாதாபிதாக்க ளிருக்கச்சேதானே யவர்களுக்குதவாம லஞ்சுவயது, பத்துவயது, இருபதுவயதிலே தங்களுடைய முணங்களைத்தண்டிக்கொண்டு பரலோகத்துக்குப் போவார்கள். சிலபேர் தேசாந்தரத்துக்குப்போய்த் திரும்பவாராதேபோய்விடுவார்களிவர்களை முணபுத்திராளென்று சொல்லப்படும். சிலபேர் பிள்ளையில்லையென்

றும், அழகில்லையென்றும், வேறேஸ்திரீகளை விவாகம்பண்ணி யனேகந் துக்கங்களை யடைவார்கள். இப்படி யெவ்வன மெல்லாம் மஹா துக்கந்தானே.

இனிமேற் கௌமாரஞ்சொல்லுகிறோம். ஸ்திரீயாயிருக்கிறவள்; கிரகத்திலே, உப்பில்லை, புளியில்லை, மிளகில்லை, அரிசி பண்டபதார்த்த மில்லையென்று சமையத்திலே கொண்டுவரச்சொல்லி வுபாதிப்ப ளதினாலே துக்கிதனாயிருப்பன். சிலபேர் ஸ்ரீகள், நல்லவஸ்திரமில்லை, நல்லவாபரணமில்லை, நல்ல போசன மப்பியங்க மிவைமுதலானதில்லையென் றிவனை நிந்திக்கிறபடியா லதினாலேயுந் துக்கிதனாகவிருப்பன். சிலபேர் ஸ்திரீகள்:—பாலாளுக்கு வஸ்திரபூஷணங்களில்லை, பெண்களுக்கு வரிசைமுதலானது செய்யவில்லை, யாப்பிள்ளைக்கி வரிசைசெய்யவில்லை, பிள்ளைகளுக்குக்காலாகாலங்களிலே விவாகம்பண்ணவில்லை, காலபக்குவங்கள் தப்பிப்போகிறதென்றும், நச்சுநச்சென்றும், அலட்டுவளதினாலே துக்கிதனாகவிருப்பன். சில பெண்பிள்ளைகள் பத்தாசம்பூரணமாய்ச் சம்பாதித்துக்கொண்டுவருகிறபரியந்த மென்னுடைய பத்தாவுக்குச் சமானமில்லையென்று கொண்டாடுவள். ஐசுவரியமிருக்குமட்டுந் தன் பத்தாவுக்குச் சமானமில்லையென்று கொண்டாடுவள். அப்பாலவன் தரித்திரனாய்ச் சம்பாதிக்கக்கையாலாகாதேபோனாலு மவள் நிந்திப்பளதினாலேயுந் துக்கம். சில ஸ்திரீகள் பிறத்தியாருடைய ஐசுவரியங்களைப் பார்த்து யிவனையு மப்படிச் சம்பாதித்துக்கொண்டுவரச்சொல்லி யேவுவா ளதினாலேயுந் துக்கந்தானே. ஐசுவரியசாலியா யிருந்தாலனு விராஜாவானவன் சொற்குற்றமுண்டுபண்ணித் தனங்களை யபகரித்துக்கொண்டுபோவன். தாயாதிகளாகிலும், அக்கினி சோரராகிலுங் கொண்

டுபோவார்களெப்போதுந் துக்கந்தானே. தரித்திரனாகவிரு ந்தானானாற் றன்னுடைய ஸ்திரீதானே; இராப்பகலாக் குர ங்காட்டி குரங்கைப்படுத்துகிறதுபோலே படுத்துவளாது வுந் துக்கந்தானே. சிலஸ்திரீகள் பிடாரிகள்போலே புருஷ னைச் சிக்ஷிக்க, அதட்ட, வைய, அவள் சொற்படி நடந்து கொள்ள வவள் சிறுதேட்டுக்காகப் பண்டபதார்த்தமிருக் கச்சேதானே யொன்றுமில்லையென்று கருக்கப்படுத்துவ ளவனுக்குப் பயந்துகொண்டுதானே யிருப்பனாதுவுந்துக்கந் தானே. சிலஸ்திரீகள் அருத்தத்துக் காசைப்பட்டு விபசாரிக ளாய்ப் போவார்கள்.

சிலபேர் புருஷசவுந்திரியத்துக் காசைப்பட்டு விபசாரி களாய்ப் போய்விடுவார்கள். சிலஸ்திரீகள் பரகிரகத்திலே தானே யோடிப்போயிருப்பார்கள். சிலபேர் புருஷனுக் கப் பிரியங்களைத்தானே சொல்லுவார்கள். சிலஸ்திரீகள் புத் திராளிடத்திலே யிருக்கிற பிரீதியினாலே பத்தாவை மதி யாமற் சற்றுஞ் சட்டைபண்ணாம லிருப்பார்க ளாதுவுந்துக் கந்தானே.சிலஸ்திரீக ளசோரைகளா யடுத்தகிரகங்களிலே திருடுவார்க ளதுநிமித்தியமிவனுக்குப் பிராணனுக்குவரும். சிலபேர் ஸ்ரீகள் விபசாரிகளாய்த் திரிவார்க ளதினாலேயுந் துக்கந்தானே. சில ஸ்ரீகள் தருமங்களுக் கநுகூலமாயிரா ளாதுவுந் துக்கந்தானே. சிலஸ்திரீக ளாத்திலேவந்த பண்ட பாதார்த்தங்களைச் சாவதானமாக வைத்திராம லசட்டைக ளா யிருப்பார்க ளதனாலே பண்டங்கள்போ மதுவுந் துக்கந் தானே. சிலஸ்திரீகள் அயற்கிரகங்களிலே கலகப்பிரியா ளாய் நித்தியஞ் சண்டைபண்ணிக்கொண்டிருப்பார்க ளதினா லேயுந் துக்கந்தானே. சிலஸ்ரீகள் பத்தாவுடனே சண்டை பிடித்துக்கொண்டு தனிவழியே யசலூருக்கு வோடிப்போ

வார்களவளைத் தேடிக்கொண்டு தெருவழியே யலைவனது வுந் துக்கந்தானே. சில ஸ்திரீகள் பத்தாவை நிராகரித்துத் தாங்கள் தருமம்பண்ணவும், புராணங்களைக் கேட்கவும், பிரதிட்டை யடையவேண்டுமென்று மிருப்பார்க ளதுவுந் துக்கந்தானே. சில ஸ்திரீகள் பத்தாவுடனே சண்டைபிடித்துக்கொண்டுமவுனமாய்வார்த்தைசொல்லாம லிருப்பார்களவனுக் கிதஞ்சொல்லி யனுசரிசத்துவாதைப்படுவ னதுவுந் துக்கந்தானே. இருபதுவயதிலே,முப்பதுவயதிலேநாற்பதுவயதிலே ஸ்திரீகள்விழுந்துபோவார்களதுவுந்துக்கந்தானே. பிள்ளைகள்,பெண்கள், சகோதராள், மாதாபிதா விவர்களெல்லாம் விழுந்துபோனு லதுவுந் துக்கந்தானே. சில ஸ்திரீகள் ரோகிகளாய்ப் போய்விடுவார்களதுவுந்துக்கந்தானே. ஸ்திரீகள் நன்றாயிருக்கச்சே புருஷன் பெருவியாதி சர்வாங்கங்குட்டம்,சயரோகம்,குத்துவலி, உதரவலி,நேத்திரரோகம், தந்தரோகம், நீரிழிவு, மகோதரம், வாதரோகம்,அஸ்திச்சுர மிவைமுதலான ரோகிகளாய் போய்விடுவ னதுவுந் துக்கந்தானே.

கன்னிகைகளுக்கு நல்லவனில்லை யென்றும், புத்திராளுக்கு நல்ல கன்னிகைகளில்லை யென்றும்,மாப்பிள்ளை துற்குண னனுகூலமில்லையென்றும், பெண்கள் புத்திராளுக்குக் குழந்தைகளில்லையென்றும், பெண்களுக்குப் போனகிரகத்திலே வறுமையென்றும், மாமனார்மாமியார் நிரம்பத் துன்பப்படுத்துகிறார்களென்றுந் துக்கப்படுவன். அன்னியகிரகங்களிலேபோய்ப் பெண்டாட்டி பிள்ளை சொல்வழி கேட்கவில்லை யென்று முறையிட்டுத் துக்கப்படுவன். சிலபேர் மலடனாக விருக்கிறவனும், பிள்ளை பிறந்து சாக கொடுத்தவனும், பெண்களை மாத்திரம் பெற்றிருக்கிறவனும், தனக்

குப் பிள்ளையில்லையென்றுந் துக்கப்படுவன். சிலபேர் சமுசாரத்துக்காக விபசாயம் பண்ணுவார்கள். சிலபே ருத்தியோகம் பண்ணுவார்கள். சிலபேர் மணியம், சிலபேர்கணக்கு, சிலபேர் தூது, ஊழியம், ராஜசேவை, கல்லுச்சுமை சுமக்கிறது,சிலபேர் வியாபாரம், சிலபே ரீனவிருத்தி,சிலபே ரீனசேவை, சிலபேர் கொத்து, சிலபேர் கூலிம்வலை, சிலபேர் தேசாந்திர சஞ்சாரம், சிலபேர் யாசகம், சிலபேர் துஷ்டாளைச் சேர்தல், சிலபேர் திருடு வஞ்சனை, சிலபேர் கொலை களவு கட்காமம் வெட்டிப்பழிக்கிறது, இந்தப்படி நடந்து கொள்ளுவார்கள். இப்படி நடந்து கொள்ளுகையில் நிரம்ப விபரீதம்வரு மதினாலே துக்கந்தானே. அருத்தார்ச்சனையுந் துக்கம். அர்த்தரக்ஷணையுந் துக்கம். அர்த்தநாசமுந் துக்கம். அர்த்தஞ் செலவுசெய்தலுந் துக்கம். விஷய சம்பாதனமுந் துக்கம். விஷயங்களை ரக்ஷிக்கிறதுந் துக்கம். விஷயநாசமுந் துக்கம், விஷயநீக்கமுந் துக்கந்தானே. சமுசார ஆர்ச்சிதமுந் துக்கம். சமுசார ரக்ஷணையுந் துக்கம். சமுசாரநாசமுந் துக்கம். சமுசாரநீக்கமுந் துக்கந்தானே. வித்தைகளை யார்ச்சிக்கிறதுந் துக்கம். அதை ரக்ஷிக்கிறதும் துக்கம். வித்தை மறந்துபோனாலும், வித்தையை யப்பியாசியாமற் போனாலுந் துக்கந்தானே. ஆனபடியினாலே கௌமார மெல்லாந் துக்கந்தானே. இனிமேல் வார்த்திகஞ் சொல்லுகிறோம். வார்த்திகம் வந்தமட்டிலேதானே நிரம்பவிசனத்தை யடைவன். தருமங்களைப் பண்ணாதே போனோம்! அதருமங்களை யாசரித்தோம்! சற்கிருத்தியங்களை விட்டு அகிருத்தியங்களைத்தானே பண்ணினோம்! அருத்தார்ச்சனம் பண்ணாமற் போனோம்! இந்தச்சமையத்துக் கைசுவரிய மில்லாமற்போயிற்று. இந்தச் சமையத்துக்குப் புத்திராளில்லாதே போ

ஞர். இந்தச்சமையத்துக்குப் பாரியில்லாதே போனாள். இந்தச்சமையத்துக்கு ரக்ஷிக்கிறதுக்குப் புத்திராள்; புத்திரிகளுமில்லை. பிள்ளைகளும், நாட்டுப்பெண்களுஞ் சொன்னபடி கேட்டு நம்மை நன்றாக ரக்ஷிக்கவில்லை. பாரியுஞ் சொன்னபடி கேட்கவில்லை. தம்பிதமையமாரவாளவா ளிச்சையாய்ப் பிரிந்துபோனூர்க ளவர்களுஞ் சொன்னபடி கேட்கவில்லை. பந்துக்களா யிருக்கிற பேர் சட்டைபண்ணி நம்மோடே வார்த்தை சொல்லவில்லை. புத்திராளும், பாரியும், நம்மை நிராகரித்து வார்த்தைகளைச் சொல்லுகிறார்களென்று துக்கப்படுவன். கால் நடக்கப்படவில்லை, கால்மடங்கிப் போயிற்று, சஞ்சாரத்துக்குச் சக்தியில்லை, கண்கள் தெரியவில்லை, காது கேட்கவுமில்லை, நாக்குங்குளறிப்போகிறது, யெழுந்திருக்க, நடக்கச்சக்தியில்லை, தடியாகிய கோல் கையிலேபிடித்துக்கொண்டு நடக்கிறேனென்று துக்கப்படுவன்.

சரைவந்து மூடிப்போகு மெதிரேவருகிறபேரைத் தெரியாது, பக்கங்களிலே கூப்பிட்டாலுங் கேளாது, அன்னியாள் வழிகாட்ட அன்னியாளைத் தொட்டுக்கொண்டு நடக்க, இப்படித் துக்கப்படுவன். கண்களிரண்டுந் தெரியாமற்காசாதிதோஷங்கள்வந்துமூடிப்போம், இரண்டுகண்ணுந்தெரியாமல்வழிதடவியன்னியாளைவழிகேட்டுத்தடியாகிறகோலூன்றிக்கொண்டன்னியாளைத் தொட்டுநடந்துகொண்டுதுக்கப்படுவன். அப்போது ரோகங்கள்வந்து பீடிக்கும். அஃதல்லாமல்இருமல், விக்கல், சுவாசம், இளைப்பு, தலைநடுக்கல், உடம்பு சர்வாங்கமு நடுக்கல் முதலியவைகளும் வரும். அன்றியில் உடல்கூனிப்போம், சர்வாங்கமும் பழுத்துப்போகும், தந்தங்களெல்லாம் விழுந்துபோம், கண்களெல்லாம் பஞ்சடைந்து

போம்; அஜீரணரோகம் வாதிக்கும், பசிதாகங்கள் மெத்த
வாதிக்கும், போசனம் பண்ணினாற் ஜீரணத்துக்கு வாராது,
வெயில், காற்று, சீதம், குளிர்மை, பனி முதலானவை சகி
யாது, இவைகளினாலேயு மெத்தவுந் துக்கப்படுவன். நாவுக்கு
ருசியாகவிருக்கிறதைத் தேடுவன். நல்லகறி, பருப்பு, பொறி
த்த குழம்பு, அப்பம், அதிரசம், வடை, இட்டலி, தோசை,
மனோகரம், போளி, பால், தயிர், நெய், நல்லமோர், நல்ல
ஊறுகாய், வத்தல், துவையலிவைகளெல்லாம் வேண்டுமென்
றாசைப்படுவன். அவனுக்குக்கிடையாது; இவைகளெல்லா மி
ல்லையென்று துக்கப்படுவன். அப்பதார்த்தங்கள் கிடைத்துப்
பக்ஷித்தாலுஞ் ஜீரணஸ்தி ஆகாது, சாகப்போகிறோமே
யென்று மெத்தவுந் துக்கப்படுவன். நாம் போகிறோமே!
பெண்டுகள் பிள்ளைகள் யெப்படி ஜீவிக்கப் போகிறார்களெ
ன்றும், இவர்களுக்குக் கதியேதென்று மெத்த விசனப்படு
வன். மஹாபாவங்களையெல்லாம் பண்ணினோமே! அனந்த
கோடிகாலம் நரகங்களிலே யநுபவிக்கவேண்டுமே! இதற்
கென்னசெய்வோம்! எமதூதாள் அழைக்கவருவார்களே
யென்று விசாரப்படுவன். அன்னதானம், ஜலதானம், வஸ்
திரதானம், இரணியதானம், கோதானம், பூதானம், கன்
னிகாதான மிவைமுதலான தானங்களைப் பண்ணாதே போ
னோமே! சுவர்க்கத்துக் கேதுவாயிருக்கிற தானங்களைப்
பண்ணாதே போனோமே! கிரகதானம், க்ஷேத்திரதானம், பி
ராமண சம்ரக்ஷணை, பசுக்களை ரக்ஷித்தல், மாதாபிதா வா
சாரியாளிவர்கள் சவரக்ஷணை, அதிதிக் கன்னங்கொடுத்தல்,
சரணமென்று வந்தபேரை ரக்ஷிக்கப் பிராமணனுக்கு வரு
ஷச்சாப்பாடுஞ் சர்வமானியமுங் கொடுத்தல், தடாகங்கள்
வாவி கூபங்கள் வெட்டிக் கட்டிவைத்தல், தோப்பு நந்தவ

னம்போடுதல்,மடங் கோயில் சத்திரங் கட்டிவைத்தல், அந்தர வெளியிலே தண்ணீர்ப்பந்தலேற்படுத்த லிவை முதலான தருமங்களைப் பண்ணுதேபோனேமே! எக்கியங்களைப் பண்ணிவைக்க, நாந்தானெக்கியம் பண்ண, அக்கினிஹோத்திர மிஷ்டபசுபந்தன மிவைகளொன்று நடப்பியாமற் போனேமே! வேதாத்தியானம் பண்ண, வேதாத்தியானங்களை யன்னியாருக்குச் சொல்ல, சத்தியவார்த்தைகளைச் சொல்ல, பிரத்தியாருக்கிதமாய் சந்தோஷமான வார்த்தைகளைச் சொல்ல, அபவாத வார்த்தைகளைச் சொல்லாதிருக்க, சத்தியசந்தனுகவிருக்க, பிரமசாரியமாக விருக்க, பரஸ்திரீகளுக்கும் பரதனங்களுக்கு மாசைப்படாமலிருக்க, தபசுகளைப்பண்ண,கிருச்சிரம், சாந்திராயணம், மாதவாரஉபவாசம்,பக்ஷவுபவாசம், இவைமுதலான தபசுகளைப் பண்ணுதே போனேமே! ஆயுட்காலமெல்லாம் வியர்த்தமாய்ப் போயிற்றென்றந் துக்காக்கிராந்தனுக விருப்பன். ஆனபடியினலே வார்த்திகமெல்லாந் துக்கந்தானே. பாலன் விளையாட்டுடையவன். அப்பால் யெவ்வனத்தில் காமாசக்தன் விஷயாசக்தனுனன்: அப்பால் கவுமாரம் வந்தஇன்பேரிலே விசனசிந்தையுடனே கூடியிருப்பன். விருத்தாப்பியத்திலே; சரை ரோகதுக்கம், பரலோகதுக்கம், மரிக்கவேண்டுமே யென்கிற துக்க மிப்படித் துக்காக்கிராந்தனுக விருப்பன்.

இப்படி யிருக்கச்சே மரண காலம்வரும். மரணகாலம் வந்தமட்டிலேதானே; சுரங்கண்டது சரீரம் விழுந்துபோயிற்றென்று சொல்லுவார்கள். தோஷித்தது, பேதிகண்டது, உப்பிசங்கண்டது, இளைப்பிருமல்கண்டது, அதினலே சரீ

ரம் விழுந்துபோயிற்றென்று சொல்லுவார்கள். நேற்றைக்
கசலாத்திலே யதிகமாய்ச் சாப்பிட்டு வரவே யதிசாரங்கண்
டு சரீரம் விழுந்து போயிற்றென்று சொல்லுவார்கள். இட
றிவிழுந்தான், அன்னம் விக்கித்து, ஜலம் விக்கித்து, வாயு
வந்து மார்பை அடைத்தது இவைகளினாலே சரீரம் போயிற்
றென்று சொல்லுவார்கள். நேற்றுறங்கி யந்தவாகிலே சரீ
ரம் போயிற்றென்றுசொல்லுவார்கள். இரண்டுமாத மொரு
மாதம் பதினைந்துநாள் பத்துநாள் சொஸ்தமில்லாமற் கிடந்
தான் சரீரம் விழுந்து போயிற்றென்று சொல்லுவார்கள்.
அசலாத்துப் பாட்டா கிடக்கிறாரென்று யெல்லாரும் வந்து
கூடி யோகக்ஷேமம் விசாரித் தவிழ்தாதிகளைக் கொடுப்பார்
கள். புத்திராள் சன்னிதானத்திலே யிருந்தாலவாள் சாவ
தானமாக அவிழ்தாதிகளைக் கொடுத்துக் காப்பாத்துவார்
கள். காலம் வந்தவுடனே காலன்வந்தழைப்பன். காலனு
லே பாசபந்தனுகவும், பந்துக்கள்பேரிலே இனேகபாசபந்த
னுகவும், போகவுமாட்டாம லிருக்கவுமாட்டாமல் மகத்தா
கிய கிலேசப்பட் டலைந்துபோவன். பேரைச்சொல்லியழைத்
தென்னை யறிவீரோ! என்னை யறிவீரோ! என்று புலம்பு
வன். அப்போ துமக்கென்ன வேண்டுமென்றும், பால் தயிர்
சக்கரை முதலிய வெதிலே யபேக்ஷை யென்றும், புத்திரா
திகள் முதலானபேர்கள் வந்து கேட்பார்க ளிதென்றியி
லெனக்குக் கதியென்ன, எனக்குப் புத்தியென்னவென்
று மலட்டுவார்கள். இப்படிக்கொத்த சமயத்திலே, மேலி
ளைப்புக்காணும்; அழைத்தாற் காதுகேட்கவில்லை, வார்த்தை
சொல்லவில்லை, கண்ணைத் திறந்து பார்க்கவில்லை, வாய
டைத்தது, போதம் போய்த்தென்று சொல்லிக் கொள்ளு
வார்கள். ஆஸ்திபாஸ்தி, கடனுடன், வைப்புச்செப்பு, கொடு

க்கஸ்வாய்க லொன்றுஞ் சொல்லவில்லை, யிருந்தாப்போலே பிராணனு தப்பிப்போயிற் றென்றுஞ் சொல்லி யங்கலாய்ப் பார்கள்.

பிராயச்சித்தாதிகள், கோதானம், பூதானுதிகளொன் றும் பண்ணவில்லையென்று மிருந்தாப்போலே பிராணனு போயிற்றென்றுங்கிலேசப்படுவார்கள். இவனு மிவைமுதலா கிய வனேக துக்கங்களோடேகூடப் பிராணனைவிடுவன். சிலபேர் புண்ணியவான்களாயிருக்கிறபேர், எக்கியங்களைப் பண்ணுவார்கள், தானங்களைப்பண்ணுவார்கள், தபசுகளைப் பண்ணுவார்கள், அனேக தருமங்களைப்பண்ணுவார்கள். நித் திய நைமித்திய கருமங்களை, நல்லாசாரங்களை, அக்கினி ஹோத்திராதிகருமங்களை உபாசனுதிகருமங்களை, நன்றாகத் தானே யாசரிப்பார்கள். வர்ணாச்சிரம தருமங்களை நன்றாக வாசரிப்பார்கள். சமதமாதிகளோடேகூட தருமங்களைப் பண்ணித் தருமசீலாளாயிருப்பார்கள். ஜனித்தநாள்முதற் பாவங்களன்றியிலேயும், பரஸ்திரீ கமனங்களையும், தனங் களையும், ஆர்ச்சித்துப் பலவுபகாரிகளாய்த் தருமத்தைத்தா னே பண்ணுவார்கள். வாலிபத்திலேவித்தியாப்பியாசம் பண் ணுவார்கள். எவ்வனத்திலே தன்னுடைய ஸ்திரீகளோடே கூடியிருப்பார்கள். எக்கியங்களையெல்லாம்பண்ணுவார்கள். அன்னதானம், சுவர்ணதானம், முபநயனதானம், கன்னிகா தானம், கோதானம், பூதானம், கிரகக்ஷேத்திரதான மிவை முதலாகிய தருமங்களையெல்லாம் பண்ணுவார்கள் தபசுகள் கிருச்சிரம், சாந்திராயணம், உபவாசம், திதி, வாரநட்சே த்திராதிகளெல்லாம் பண்ணுவார்கள். சிவன்கோயில், விஷ்ணுகோயில், கட்டிவைத்து, தோப்புநந்தவனம்போட்டு வைத்து, வாவிகூபதடாகாதிகளை வெட்டிவைத்து, சத்தி

ரஞ் சாலை தண்ணீர்ப்பந்த லிவைகளெல்லாம் மியற்றிவைத்து, தருமிஷ்டாளாய்த் தானேயிருப்பார்கள்.

அப்படிப்பட்டபே ரந்தியகாலம் வந்தமட்டிலேதானே; புத்திரதாராதிகளுக்கெல்லாம் புத்திசொல்லி, யோகக்ஷேமங்களெல்லாஞ் சொல்லி, கொடுக்கல், வாங்கல், ஆஸ்தி, பாஸ்தி, ருணதனங்கள், வைப்புச்செப்பு, சகலமுஞ்சொல்லி, அசலூருக்குப் போகிறதுபோலே ஆயாசமன்றியிலே புண்ணியவான்களா யிருக்கிறபேர் பரலோகத்துக்குப்போவார்கள். பிராயச்சித்தாதிகள், கோதானம், பூதானம், கஜதானமெல்லாம் பண்ணிச் சுகமாகத்தானே பரலோகத்துக்குப் போவார்கள். சரீரம் விழுந்தவுடனே ஊரிலே யிருக்கிற ஜனங்கள் தண்ணீரெடாமற் சமையாமற் சாப்பிடாமற் சீக்கிரமாக வெடுக்கச்சொல்லுவார்கள். சம்பங்கித்தயிலம், நித்தியப்பியங்கனஞ், சுகந்தாதிமாலை யலங்காரம், வஸ்திரபூஷணாலங்காரம், அம்சதூளியிலே சயனம், நல்லஸ்திரீகளாகிய தன்னுடைய ஸ்திரீகளோடே போகம், நல்லசட்ரசங்களோடே போசனம், நல்ல தாம்பூலபக்ஷணம்; நல்ல ஆபரணங்களைத்தரிக்கிறது, நல்லபரிமளமாகிய சவ்வாது, புழுகு, கஸ்தூரிமுதலாகிய பரிமள சுகந்தங்களைத் தரிக்கிறது, இப்படிப்பட்ட சரீரத்தைப் பிராணவாயுவெளிப்பட்டமாத்திரத்திலே யந்தச் சரீரத்தைப் பார்க்கலாகாது, தொடலாகாது, கிரகத்திலே யிருக்கலாகாது கிராமத்திலேயிருக்கலாகாதென்றுசொல்லி ஊராரெல்லாம்வந்துகூடி யெடுத்துக் கொண்டுபோய்விடுவார்கள்.

தான் சம்பாதித்த அசுவங்கள், பசுக்கள், தனதானியங்கள், உடைமை பூசணங்கள், ஸ்திரீபாலாள், சகலமுங் கிரகத்திலேதானேயிருக்கும் மயான வரைக்கு மித்துருபந்

நுக்கள் வருவார்கள். அதற்குமே லொருத்தரும் வருகி றபேரில்லை. அதற்குமேற் றூனேகாங்கியாய்ப் போவன். புண்ணிய புருஷாளாயிருக்கிறபேர் தக்ஷிணாயனத்திலேயிற ந்து யாகாதிமார்க்கத்தினாலே சுவர்க்கத்துக்குப் போவார் கள். சுவர்க்கத்தை யநுபவித்துத் திரும்ப விங்கே வருவார் கள். திரும்பச் சுவர்க்கத்திற்குப் போவார்கள். திரும்ப வருவார்கள். இப்படிப்போக்குவருத்தா யிருக்கிறமார்க்கத் தையும், அநித்தியமாயிருக்கிற சுவர்க்கத்தையுமடைவார் கள். பாவிகளாயிருக்கிற பேர் எமலோகத்திலேபோய் நர கங்களை யடைந்து வெகுவாய் நரகதுக்கங்களை யநுபவித் துப் பாவசேஷத்தினாலே பசு பக்ஷி மிருகாதிகளாகவும், விருக்ஷங்க ளாகவும், செடிகொடிகளாகவும், ஜன்மத்தைய டைவார்கள். ஆனபடியினாலே சமுசாரமெல்லாந் துக்கந் தானே. துக்க சமுசாரமாகிற ஜனன மரணப் பிரவாக லக்ஷணசமுத்திரத்திலேநின் றெப்போமுக்தியடையப்போ கிறோமென்று முமுக்ஷுவாய் சாதன சதுஷ்டய சம்பன்ன னாய்க் கொண்டு குருப்பிரசாதத்தினாலேயும், வேதாந்த சிர வணத்தினாலேயும், பிரமக்ஞானம்வந் தந்தப் பிரமக்ஞான த்தினாலே கைவல்லியத்தை யடைவன். அப்படி யடைந்த புருஷனுக்குத் திரும்ப வருத்தில்லையென்று சகலவேதாந்த சித்தாந்த மெல்லாஞ் சொல்லுகின்றன. பிரம்மோபாசகா ள், சித்தாள், யோகசித்தாள், தபசித்தா ளிவர்களெல்லா மூபாசனாதிமார்க்க முத்தராயணத்தி லிறந்து பிரமலோகத் தை யடைவார்கள். இவர்களுக்கு மறுபிறப்பில்லை. பூரண ஞானிகளாய்வேதாந்தப் பிரமநிஷ்டாளாயிருக்கிறபேர் பூர ணப்பிரமமாகத்தானே பிரமசாயுச்சியத்தை யடைவார்கள்.

பதினேழாவது ஆவிருத்திமார்க்கப்பிரகரணமுற்றிற்று.

## பதினெட்டாவது. சந்நியாசிப்பிரகணம்.

———:0:———

வேதாந்தத்திலே சந்நியாசிகளுக்குத்தானே யதிகாரமென்று சொல்லுவார்கள். சந்நியாசத்துக்கு லக்ஷணமேது? சகல கருமத்தியாகஞ் சந்நியாசமென்றுசொல்லுவார்கள். சந்நியாசம்பண்ணி வேதாந்தசிரவணம் பண்ணவேண்டுமென்று சொல்லுவார்கள். சிரவணார்த்தமாய்ச் சந்நியாசம்பண்ணவேண்டும். கிரகஸ்தனுயிருக்கிறவனுக்கு வைதீக கருமம் விக்ஷேப மிந்த விக்ஷேபங்களினாலே வேதாந்த சிரவணம் பண்ணுகிறதற்குப் பொழுதுபோதா தானபடியினாலே சந்நியாசம்பண்ணிச் சகல விக்ஷேபங்களையும் பரிகரித்து வேதாந்தசிரவணம் பண்ணவேண்டுமென்று சொல்லுவார்கள். சந்நியாசம்பண்ணுமற் சிரவணம்பண்ணிஞானம்வந்தாலும்;ஞானந்திடமாகிறதற்குச் சந்நியாசம் பண்ணவேண்டும். அஃதெப்படியென்னில்? விளக்கேற்றுகிறதற்கு காற்றில்லாமலிருக்கவேண்டும். விளக்கேற்றினபிறகு விளக்கசையாமலிருக்கிறதற்குங் காற்றில்லாமலிருக்கவேண்டும். ஞானமன்றியிலேயிருக்கிற சந்நியாசத்தினாலே பிரமலோகத்தையடைவனென்று சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் நிஷித்த கருமங்களையும், காமிய கருமங்களையும், வற்சிக்கிறதே சந்நியாசமென்று சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள் சகல கருமங்களையும் பண்ணிக் கருமபலங்களை ஈசுரப்பிரீதிபண்ணுவது சந்நியாசமென்று சொல்லுவார்கள்.

சகல கருமங்களையும் விட்டுவிடவேண்டும், ஒரு கருமங்களையும் பண்ணலாகாது, எல்லாக்கருமங்களுந் தோஷ

ங்களோடேகூடியிருக்குமானபடியினாலே சகலகருமங்களையும் பரித்தியாகம்பண்ணுவதுவே சந்நியாசமென்று சாங்கியாள் மதம். எக்கியதான தபசுகளை விடலாகாதென்று மீமாம்ஸாள்மதம். சில பெரியவாள்:— ஞானசந்நியாசமே சந்நியாசமென்றும், நானென்ன திது நான் கர்த்தா போக்தாவென்கிறதுாகங்கார மோகப்பிராந்தியை விட்டுவிட்டு,நான் அகர்த்தா, அபோக்தா, நான் பரமாத்மாவென்கிற வறிவே சந்நியாசம், கருமசந்நியாசம் சந்நியாசமல்லவென்று சித்தாந்தம். ஸ்ரீ கிருஷ்ணபகவான் சம்மதஞ்சொல்லுகிறோம். எக்கியதான தபசுகளைவிடலாகாது, பண்ணவேண்டுமானால் நான் கர்த்தாவென்கிற அபிமானத்தைப் பரிகரித்து, பலவிச்சைகளையும் பரிகரித்து, தேகேந்திரியாதிகள்பண்ணுகிறது, நாம் பண்ணவில்லை; நாம் பரமாத்மாவென்கிற புத்தியோடுங்கூட யெக்கியதானதபசுகளைப்பண்ணவேண்டும். அதுவே சந்நியாசமென்று ஸ்ரீகிருஷ்ணபகவான் மதம். இதுதானே வியாசவசிஷ்டாதிகளுக்கு மறிவோடேகூட ஞானியாக விருந்துகொண்டு லோகவுபகாரார்த்தமாகக் கருமக்கூட்டங்களைப் பண்ணவேண்டுமென்கிறது அபிமதம்.

இன்னஞ் சந்நியாசலட்சணஞ் சொல்லுகிறோம். ஞானசந்நியாசமே சந்நியாசம், கருமசந்நியாசங் கூடாது, நித்திய நைமித்திய கருமங்களைப் பரிகரிக்கக்கூடாது; அக்ஞானத்தினாலே நித்திய நைமித்தியகருமங்களை பரிகரித்தானேயானால்? மோகத்தினாலே யந்தக் கருமத்தியாகந் தாமத சந்நியாசமென்று சொல்லப்படும். எக்கியதான தபசுகளைப் பண்ணுகிறது மஹாதுக்கம்; காயக்கிலேசமென்கிற புத்தியினாலே நித்தியநைமித்திய கருமங்களைவிட்டுவிடுவதிராசத

சந்நியாசமென்றுபெயர். நிஷித்தகருமங்களை வற்சித்து நித்தியநைமித்தியங்களை நான்பண்ணுகிறேனென்கிற அபிமானத்தையும், பல விச்சையையும்விட்டறிவோடே ஞானியாகவிருந்துகொண்டு லோகோபகாரார்த்தமாகப் பண்ணுகிறதுவே சாத்துவிதசந்நியாசம். இகலோககருமங்களையும்,பரலோககருமங்களையும் பரித்தியாகம்பண்ணி யாத்மாவைத்தேடி யாத்மஞானத்தையே சம்பாதிக்கவேண்டுமென்றும், சந்நியாசிக்கித்தானே ஞானாதிகாரமென்றும், ஆபஸ்தம்பர் மனுவிலேயுஞ் சொல்லியிருக்கிறதென்று சங்கித்தால்? அவர்கள் சந்நியாச ஆச்சிரமப்பிரகரணத்திலே சந்நியாசிக்கி வேறேதருமமொன்று மில்லாதபடியினாலே ஞானந்தானே யவனுக்கு தருமமென்றுசொன்னார்கள்.

சந்நியாசிக்கித்தானே ஞானாதிகார மிதராளுக்கு ஞானாதிகாரமில்லையென்கிறதிலே தாற்பரியம். வியாசர், வசிஷ்டர், அகஸ்தியர், அத்திரி, பிருகு, குச்சரர், கௌதமர், காசிபர், ஆங்கிரசர், போதாயனர், ஆஸ்வலாயனர், ஆபஸ்தம்ப ரிவர்கள் முதலான கோடி ரிஷிகள், தபசிகளாயும், பிரமக்ஞானிகளாயு மிருந்தார்களென்று சகல வேதசாஸ்திரப்பிரசித்தி. அந்த ரிஷிகளுடைய கிரந்தங்களிலேயும் ஞானகருமக் கூட்டுறவைத்தானே சொல்லியிருக்கிறார்கள். அந்தக் கிரந்தங்களிலே சகல வர்ணங்களுக்கும், சகல வாச்சிரமங்களுக்கும், ஞானாதிகாரமுண்டென்றும், அதினாலே முக்தியென்றுஞ் சொல்லியிருக்கிறார்கள். ஆனபடியினாலே ஞானசந்நியாசமே முக்திசாதனம். ஞானசந்நியாசிகளாயிருக்கிறபேர்களுக்கு மூன்றுவிதமாகவிருக்கிற கரும பந்தமுமில்லை.

அஃதெப்படியென்றால்? நரகவேதுவாயிருக்கிற பாவத்தினாலே நரகப்பிராப்தி, சுவர்க்கவேதுவாயிருக்கிற புண்ணியத்தினாலே சுவர்க்கப்பிராப்தி, புண்ணியபாவத்தினாலே மனுஷலோகப்பிராப்தி, இந்த மூன்று கருமபந்தமும், மூன்று கருமபலங்களும், ஞானசந்நியாசிகளுக் கில்லை. அஞ்ஞானிகளுக்குண்டு. ஞானிகளுக்கில்லை. சகல ஸ்மிருதிகளிலேயும்; நாலுவர்ணங்களும் நாலாச்சிரமங்களுஞ் சொல்லியிருக்கிறது. பிரமசரியத்தினாலே ரிஷிகள்ருணத்திலே நின்றும் விடுபடுவன். எக்கியத்தினாலே தேவர்கள்ருணத்திலே நின்றும் விடுபடுவன். புத்திராள்பிறந்தாற் பிதிர்கள்ருணத்திலே நின்றும் விடுபடுவன். அப்பாற் சந்நியாசமென்று சொல்லி ரிஷிகள்மதம். பிள்ளைகளைப்பெற்று அவாள்பெரியபிள்ளைகளானபிற்பாடவர்களிடத்திலே சம்சாரபாரத்தையும், ஸ்திரீகளையும், வைத்துப்போட்டப்பாற்சந்நியாசம்பண்ணிக்கொள்ளவேண்டுமென்று ரிஷிகள் மதம். அபுத்திரராக விருந்தார்களேயானாலும், புத்திரவாலராக விருந்தார்களேயானாலும், வாலஸ்திரீகளைப் பரிகரித்துச் சந்நியாசம் பெறவேண்டாமென்று ரிஷிகள் மதம். ஆபற்சந்நியாசஞ் சகலருக்குஞ் சம்மதந்தானே. சிலபேர் பெரியவாள்:—பிரமசாரியாக விருந்தும், விவாகம்பண்ணாமலிருந்தும், சந்நியாசம் பண்ணலாம். கிரகஸ்தாச்சிரமத்திலேயிருந்துஞ் சந்நியாசம் பண்ணலாமென்றுஞ் சொல்லுவார்கள். வானப்பிரஸ்தாச்சிரமத்திலேயிருந்துஞ் சந்நியாசம் பண்ணலாமென்றுஞ் சொல்லுவார்கள். சிலபேர் பெரியவாள்:— பிரமசாரியாய், அப்பாற் கிரகஸ்தனாய், அப்பால் வானப்பிரஸ்தனாய், அப்பாற் சந்நியாசனுமென் றிப்படிக் கிரமமாகச் சந்நியாசம் பண்ணவேண்டுமென்றுஞ்சொல்லுவார்கள். ஸ்திரீ விரூந்துபோனாலவனுக்குச்

சந்நியாசம் பண்ணலாமென்று சிலபேர்சொல்லுவார்கள். சிலபேர் ஸ்திரீயிருந்தாலும்; நல்ல வைராக்கியமுண்டானு லவன் சந்நியாசம்பண்ணலாமென்றுஞ்சொல்லுவார்கள். சந்நியாச வாச்சிரமத்துவ லக்ஷணஞ்சொல்லுகிறோம். சிகா யெக்ஞோப வீதங்களைப் பரிகரிக்க, கிரகக்ஷேத்திர கிராமாதிகளைப் பரிகரிக்க, புத்திரதாராதிகளைப் பரிகரிக்க, ஈஷணத்திரயங்களைப் பரிகரிக்க, சகல பூதங்களுக்குந் தன்னிடத்திலே நின்றும், அபயப்பிரதானம் பண்ண, காஷாயதெண்ட கமண்டலங்களைத் தரிக்க, மடத்திலேதானே போயிருக்க, அல்லவென்றாற் கிராம மேகராத்திரியாகத் திரிய, பக விருபதுநாழிகைக்குமேல் கிராமத்திலேவந்து பிக்ஷையெடுத்துப் புசிக்க, மடத்திலேதானே வசிக்க, அல்லவென்றாற் றேவாலயஞ் சூனியக்கிரகங்களிலே வசிக்க, ஏகாங்கியாயிருக்க, பிரமவிசாரம்பண்ண, சிரவணமனன நிதித்தியாசனங்களைப் பண்ண, பிரமநிஷ்டனுக விருக்க, லோகவார்த்தைகள் கிராமவார்த்தைகளிவைகளெல்லாம் பரிகரிக்க, இந்திரிய நிக்கிரகத்தோடே யந்தர் முகமாக விருக்க, சமதமாதிகளுடனே கூடி யிருக்க, சற்குருவினிடத்திலே நின்றும் வேதாந்த சிரவண முபநிடத்துக்க ளிவைகளெல்லாம் அப்பியாசித்துக் குருவுபதேசத்தினுலே பிரமஞானத்தை யடைந்து பிரமநிஷ்டனுய்ப் பிரமசரியத்தோடே சாவதானமாயிருக்க வேண்டும். ஸ்திரீகளோடே பேசுகிறது, ஸ்திரீகளைப் பார்க்கிறது, இஃதெல்லாம் பரிகரிக்க வேண்டும். எந்தஸ்திரீகளைக் கண்டாலும், மாதாவாகப் பாவிக்கவேண்டும். சர்வத்திராய் பிரமபாவனை பண்ணவேண்டும்.

இப்படிச் சந்நியாசியாய், ஞானியாய், பிரம நிஷ்டனுனுற் கைவல்லியத்தை யடைவன். ஞானமன்றியிலேபோனு

ளும்; சந்நியாசி பாவங்களைப் பண்ணமற் றன்னுடைய தருமத்தோடே கூடியிருந்தானேயாகி லவனுக்குப் பிரமலோகப்பிராப்தி. பாவங்களைப் பண்ணினனேயாகிற் பாவியாயிருக்கிற சந்நியாசியைத் தேவேந்திரன் தெண்டிப்பனென்று சாஸ்திரம். சந்நியாசியாயிருக்கிறவன் பணத்தை அபகரிக்க, ஸ்திரீயை அபகரிக்க, இந்த விரண்டுனுலேயு முடனே பதிதனுகப் போவனென்று சாஸ்திரம். சந்நியாசியாய்த் திரும்பக் கிரகஸ்த் தாச்சிரமத்திலே வரலாகாது.வந்தாலும்; நாலுபேருங்கூடி யவனைக் கிரகஸ்தனுக வைத்துக் கொள்ளலாகாது. அவனை யெப்போதும்போலே சந்நியாசியாகத்தானே மடத்திலே கொண்டுபோய்வைத்துச் சந்நியாசியாகத்தானே யிருக்கவேண்டுமென்று சொல்லவேண்டும். சிலபேர் சிகாதியெக்ஞோபவீதங்களிருக்க, காயத்திரியிருக்க, சந்நியாசம் பண்ணித் திரிதண்டுசந்நியாசியாயிருக்க வேண்டுமென்று சொல்லுவார்கள்.

அவா ளிந்தயுகத்தில் வைஷ்ணுவபக்ஷம். அது, சீயாக கூட்டம். சித்தாந்தஞ்சொல்லுகிறேம். பிராமணனுனுலும், வைசியனுனுலும், பிரமசாரி, கிரகஸ்தன், வானப்பிரஸ்தன், சந்நியாசி, ஆராறுலுந் தன்னுடைய தருமத்தோடேகூடவேதாந்த சிரவணமனன, நிதித்தியாசனங்களினுலே யறிவைச் சம்பாதித்துப் பிரமக்ஞானியாய், கைவல்லியத்தையடைவார்கள். ஸ்ரீகிருஷ்ணபகவானும், ஆபஸ்தம்பரும், சூத்திரானுக்குப் புராணஸ்மிருதிகளினுலே ஞானசம்பாதனமூண்டு; ஞானம்வந்தா லவர்களுக்கு முக்தியென்று சகலவேதாந்தத்தினுடைய சித்தாந்தமென்று சொன்னூர்கள். யாதொருத்தன் சகலவாசைகளுமொழிந்து; மடவாசியாய்,

சந்நியாசியாய், பிக்ஷைவாங்கிப் புசிக்கிறவனாய், பிரம நிஷ்டனாக ஞானகுணங்களோடே கூடியிருக்கிறானே; அவனே சந்நியாசி. யாதொருத்தன் ஸ்திரீகளைப் பாராமல். திரவியத்தைத் தொடாமல், மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசையொழிந்து; சந்நியாசியாய், தெண்டுகமண்டலத்தோடேகூடப்பிக்ஷைவாங்கிப் புசிக்கிறவனாய், மௌனியாய்க், கிராமமேகராத்திரி சஞ்சாரியாய், இருக்கிறானே; அவனேசந்நியாசி. யாதொருத்தன் கையிலே வாங்கிப் புசிக்கிறவனாய், காசாய கவுபீனதாரியாய், மரத்தடியில் வாசியாய், பிரமநிஷ்டனாக விருக்கிறானே; அவனே சந்நியாசி. யாதொருத்தன் வாயிற்போட்டசாதத்தைப் புசிக்கிறவனாய், சகல காமங்களுமொழிந்து சந்நியாசியாய், மடவாசியாய், பிரமநிஷ்டனாக விருக்கிறானே; அவனே சந்நியாசி. யாதொருத்தன் பிரமசாரியாயிருந்துகொண்டு பிக்ஷை புசித்துக் குருகிரகவாசியாய்க் குரு சிசுருஷைகளோடுங்கூட வேதாத்தியானங்களைப் பண்ணிச் சுதருமத்தோடுங்கூடப் பிரமக்ஞானியாய் யாதொரு பிரமசாரியா யிருக்கிறானே; அவனே ஞான சந்நியாசி.

யாதொருத்தன் கிரகஸ்தனாய், நியாயமாய்த் தனத்தைச் சம்பாதிக்கிறவனாய், அதிதிப் பிரீதியாய்ப் பிதிர்க்களுக்கு சிரார்த்தங்களைப் பண்ணுகிறவனாகப் பிரமஞானியா யிருக்கிறவனே; ஞானசந்நியாசி. யாதொருத்தன் ஸ்திரீபாலாளுடனே கூட ஆசக்தன்போலேயும், கருமிபோலேயும், வெளிக்கி யிருந்துகொண் டுள்ளே யாகாசம்போலே அசங்கனாக விருந்துகொண்டு ஞானியா யிருக்கிறானே; அவனே ஞானசந்நியாசி.யாதொருத்தன்பாகிய விந்திரியங்களினாலே

சகலதருமங்களையு மாசரித்துக்கொண் டுள்ளே தாமரை யிலையும் ஜலமும்போலே யொட்டாம லசங்கனாய்ப் பூர ணப்பிரமமாக யிருந்துகொண்டு ஞானியாக விருக்கிறானே; அவனே ஞான சந்நியாசி. யாதொருத்த னுள்ளே யசங்கனாக விருந்துகொண்டு வெளியிலே சகலராச்சியபாரங்கள், ராச்சி ய தந்திரங்கள், ராச்சியவிசாரங்கள், ராச்சிய பரிபாலனம், ஜீவாளுடைய பரிபாலனம், துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபா லனம், சகலபோக பாக்கியங்களையு மநுபவித்துக்கொண்டு ஞானியாய், புளியம்பழமு மோடும் போலே யிருக்கிறானே; அவனே ஞானசந்நியாசி. யாதொரு வைசியன் பசுக்களை ரக்ஷிக்க, வெள்ளாண்மைகளைப் பண்ண, வியவகாரங்களைப் பண்ண, சகல தானதருமங்களையு மாசரித்துக்கொண் டுள் ளே யசங்கனாக ஞானகுணங்களோடேகூட ஞானியாயிரு க்கிறவனே; ஞானசந்நியாசி. யாதொருத்தன் வனத்திலே யிருந்துகொண்டு, வனத்தி லுண்டாகிய காய்கனிகளைப் புசித் துக்கொண்டு, தபசியாய்ச் சடைகளைத் தரித்துக்கொண்டு, மரவுரிகளை வஸ்திரமாக வணிந்துகொண்டு, எக்ஞோபவீத காரியமாய் வானப்பிரஸ்தாச்சிரம தருமங்களையு மாசரித் துக்கொண்டு, ஞானகுணங்களோடேகூட ஞானியாயிருக் கிறானே; அவனே ஞானசந்நியாசி. யாதொரு சூத்திரனான வன்:—தன்னுடைய தருமத்தோடேகூட மற்ற மூன்று வர் ணத்துக்குஞ் சிசுருஷையைப்பண்ணிக்கொண் டுஞானகுணங் களாகிற சமதமாதிகளுடனே கூட ஞானகாண்டங்களாக விருக்கிற ஸ்மிருதி புராணங்களினாலே பிரதிபாதிக்கிறபிர மக்ஞானத்தைச் சம்பாதித்துப் பிரமநிஷ்டனாக விருக்கிற னே; அஃதன்றியில் நல்ல சற்குரு வுபதேசத்தினாலே பிரம க்ஞானத்தைச் சம்பாதித்துப் பிரம நிஷ்டனாக விருக்கிற

ளே; அவனே ஞான சந்நியாசி. யாதொரு ஸ்திரீகள் பத்தாவுக் கநுகூலமாக நடந்து பத்த சிசுருஷைகளைப்பண்ணிப் பத்தா வாக்கிய பரிபாலனங்களைப் பண்ணித் தருமசீலிகளாய் ஞானகுணங்களோடேகூடக் குருவுபதேசத்தினாலே ஞானம்வந்து; அஃதன்றியில் தத்துவசாஸ்திரங்களைக் கேட்டறிந்துகொண்டு பிரமக்ஞானிகளாய்ப் பிரமநிஷ்டையுடனேகூட விருக்கிறார்களோ; அவர்களே ஞான சந்நியாசிகள்.

ஞானத்தினாலே முக்தி. இது சகலவர்ண ஸ்திரீகள், சுமங்கிலிகள், கன்னிகைகள், விதவைகள் முதலாகிய ஸ்திரீசூத்திராளெல்லாருக்கும் பொதுத்தானே. இதற்குப் பகவான்:—ஞானிகளாயிருக்கிற ஸ்திரீகள், வைசியாள், சூத்திராளிவர்களெல்லா முக்தியடைவார்களென்று சொல்லியிருக்கிறார். இதுவல்லாமல் யாக்கியவற்கருடைய ஸ்திரீ மைத்திரைக்குப் பிரமநிஷ்டை, யாக்கியவற்கருடைய சிக்ஷிகார்க்கியென்கிற ஸ்திரீக்குப் பிரமநிஷ்டை, சூடாலைக்குப் பிரமநிஷ்டை, இப்படி யனேகஸ்திரீகள் பிரம நிஷ்டைகளா யனேகம் பேருண்டு. இதுவல்லாமற் பாஷியம்பண்ணின ஸ்ரீசங்கராசாரியசுவாமிகள்:— ஞானம் வேண்டுமென்கிற சகலவர்ண ஸ்திரீகளுக்கும், சூத்திராளுக்கும், ஸ்மிருதி புராணாதிகளினாலே ஞானசம்பாதன முண்டானாலே மோக்ஷமென்று சொல்லியிருக்கிறார்கள். வித்தியாரண்ணிய சுவாமிகள், விவரணாசாரியர், வாசஸ்பதி மிசுரர், கற்பகதரு பரிமள மிவர்களெல்லாருஞ் சொல்லி யிருக்கிறார்கள். பாஷியக்கிரந்த வியாக்ஞானமாகிய வாசஸ்பத்தியம், கற்பகதரு பரிமள மிந்தப்பாஷிய இறுதய வியாக்கியானங்களிலேயு மிந்தப்படிதானே சொல்லி யிருக்கிறார்கள்.

இந்தப்படி வியாச வசிஷ்டாதிகளும் ஞான சந்நியாசமே சந்நியாசமென்று சகல ஸ்மிருதிகளிலேயுஞ் சொல்லி யிருக்கிறார்கள்.

பதினெட்டாவது சந்நியாசிப்பிரகரணம் முற்றிற்று.

ஆகப்பிரகரணம், கஅ.

---

பாஷிய இருதயம் முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

---

சர்வஞ்சின்மயம்.

---

# குருபரம்பரை வணக்கம்.

பரமாகவொளிர்சச்சி தானந்தமாம்விண்டு
பங்கயன்வசிட்டர்சத்தி
பராசமாமுனிமகா வியாசர்சீர்சுகர்கௌட
பாதர்கோவிந்தயோகி
யருளுருவமாஞ்சங்க ராசாரியாமிறைக
ளமர்பத்மபாதருயரத்
தாமலகர்தோடகா சிரியர்வார்த்திகர்வித்
தியாரண்யராகுமுரவோ
ரிருளுருவமற்றவவர் மரபதனில்வந்தசுப்
பிரமணியதேவனயினா
வீசனழகப்பவா ரியன்வீரபத்திரகுரு
வின்பமுத்தையவடிக
ளெருளுருவமாமுகந் தையனன்மைகளிலாத்
தீயனேன்றனையுமாண்ட
சீர்முத்துராமலிங்க வருணாசலசிதம்பர
தேசியர்க டிகழ்பதமிறைஞ்சுவோமே,

# வடமொழி தென்மொழி
# பாடபேதங்களாற் சொற்பேதங்கள்.

:O:

முக்தி - முத்தி.
சந்நியாசம் - சன்னியாசம்.
கேட்க - கேக்க - கேழ்க்க.
சூதசங்கிதை - சூதங்கிதை.
பிரயோஜனம்-பிரயோசனம்
பாதகம் - வாதகம்.
சாஸ்திரம் - சாத்திரம்.
ஜாக்கிரம் - சாக்கிரம்.
ஜாக்கிர - சாக்கிர.
சொப்பனம் - சொற்பனம்.
சொப்பன - சொற்பன.
சாக்ஷி - சாட்சி.
விக்ஷேபம் - விட்சேபம்.
ஸபலம் } சபலம்.
ஜபலம் }
ஜன்மம் - சன்மம்.
மோக்ஷ - மோட்ச.
முமுக்ஷு - முமுட்சு.
ஜலம் - சலம்.
வியவகாரம் - விவகாரம்.
சுழுப்தி - சுழுத்தி.
அருச்சுனன் - அர்ச்சுனன்.
பிரத்தியக்ஷம்-பிரத்தியட்சம்
விரக்தி - விரத்தி.
பக்தி - பத்தி.
ஜாக்கிரதை - சாக்கிரதை.
சக்ஷு - சட்சு.
விஷயம் - விடயம்.
ஜக்தி - சத்தி

பரோக்ஷம் - பரோட்சம்.
க்ஷூமம் - சூட்சுமம்.
ஜோதி - சோதி.
ஜீரம் - சீரம். [ட்சஞானம்.
பரோக்ஷக்ஞானம்-பரோ
அபரோக்ஷக்ஞானம் - அப
ரோசஞானம்.
ஜகத்து - சகத்து
ஜீவன் - சீவன்.
யுக்தி - யுத்தி.
அநித்தியம் - அனித்தியம்.
ஆநந்தம் - ஆனந்தம்.
அநேகம் - அனேகம்.
அபேக்ஷை - அபேச்சை. [ன்
ஜீவன்முக்தன் - சீவன்முத்த
ஜீவன்முக்தி - சீவன்முத்தி.
உபேக்ஷை - உபேச்சை.
கர்மம் - கருமம்.
நிர்க்குணம் - நிற்குணம்.
தர்மம் - தருமம்.
பந்தம் - பெந்தம்.
மோக்கம் - மோட்சம்.
திருப்தி - திருத்தி.
அக்ஷரம் - அட்சரம்.
அக்ஷராஸ்திரீ - அட்சராஸ்திரீ.
விதிரிக்தம் - விதிரித்தம்.
ஸ்தாணு - தாணு.
நிர்தோஷம் - நிர்த்தோடம்.
அஜலம் - அசலம்.

இவ்வண்ண மநேகசொற்பேதங்க ளிந்நூலின் கண்ணேயுள அவைகளிற் சிற்சிலவரையப்பட்டுள்ளன.

# உதாரண ஆசிரியர்களின் பெயரகராதி.



பெரியவாள்.
அத்தொய்திகள்.
சித்தாள்.
வைஷ்ணுவாள்.
யோகிகள்.
வியாசாசாரியாள்.
பாஷியக்காரர்.
விவரணாசாரியாள்.
வித்தியாரண்ணியாள்
வாசஸ்பதிமிசிராள்.
தபோசித்தாள்.
யோகசித்தாள்.
ஈசுரோபாசகாள்.
தார்க்கிகாள்.
வேதாந்திகள்.
மீமாம்ஸாள்.
சாங்கியாள்.
வியாக்கியவற்கர்.
மனு.
பராசர்.
அருச்சுனன்.
கிருஷ்ணபகவான்.
பிரமதேவர்.
எயாதிமஹாராஜா.
கவீசுரர்கள்.
ஆசாரியாள்.
பக்தலகிரி.
அநேகரிஷிகள்.
ரிஷிகள்ராஜாக்கள்.
சந்நியாசிகள்.

சிலபேர்பெரியவாள்.
தத்துவதிருஷ்டி
யுடைத்தானபேர்கள்.
சாங்கியாள்.
உபாசகாள்.
சைவாள்.
கஞ்சனூராள்வார்.
மாத்துவாள்.
சாங்கியன்.
பரமேசுவரர்.
தேவதைகள்.
ரிஷிகள்.
ஜனகாதிகள்.
வசிஷ்டர்.
மனுஷாள்.
ஸ்தூலவாதிகள்.
பவுத்தாள்.
சூத்திரக்காரர்.
அகஸ்தியர்.
அத்திரி.
பிருகு.
குச்சரர்.
கௌதமர்.
காசிபர்.
ஆங்கிரசர்.
போதாயனர்.
ஆஸ்வலாயனர்.
ஆபஸ்தம்பர்.
பிரம்மோபாசகாள்.

# உதாரண நூல்களின் பெயரகராதி.

---

சுருதி.
சாந்தோக்கியஉபநிடதம்.
யோகசூத்திரம்.
பாஷியம்.
கீதாவசனம்.
மனுவசனம்.
பராசர்வசனம்.
நிராலம்பஉபநிடதம்.
சகலவேதசாஸ்திரங்கள்.
வேதாந்தங்கள்.
சாஸ்திரங்கள்.
ஸ்மிருதிபுராணங்கள்.
ஸ்மிருதி.
கைவல்லியஉபநிடதம்.
தைத்திரியஉபநிடதம்.
தர்க்கசாஸ்திரம்.
மீமாமிஸசாஸ்திரம்.
நீதிசாஸ்திரம்.
தருமசாஸ்திரம்.
காவியநாடகவலங்காரம்.
வைத்தியசாஸ்திரம்.
சூத்திரம்.
சூத்திரக்காரர் மதம்.
சாங்கியாள்மதம்.
யோகிமதம்.
சைவமதம்.
வைஷ்ணுமதம்.
வியாசர்மதம்.
பாஷியக்காரர்மதம்.
தார்க்கியாள்மதம்.
மீமாம்ஸாள்மதம்
பகவான்வாக்கியம்.
ஈசுரர்வாக்கியம்.
பகவான்மதம்.
ஆபஸ்தம்பர்மநுநூல்.
ரிஷிகள்மதம்.
வாசஸ்பத்தியம்.
கற்பகதருபரிமளம்.

---

இந்நூல்களை இந்நூலாசிரியரெவ்விடத்தெவ்விடத் தெந்தெந்தநியாயத்திற் கெந்தெந்தவிடத்திலுதாரணங்கள்கொடுக்க வேண்டுமோ; ஆண்டாண்டனந்தமடங்குதாரணங்கள் கொடுத்திருக் கின்றமையால். அவைகளை இங்குதெரிவிக்கப்பட்டுள்ளன.

இது வசனமாதலா லிடையிடையே வேண்டிய வேண்டிய இடங்களில் உயிரெழுத்தும் உயிர்மெய்யெழுத்தும் பிரிந்துவரும்படி செய்திருக்கின்றன. ஏனெனில் கற்றோரன்றியில் மற்றோருக்கும் உபயோகப்படுமென்பதனால்.

# பரிசோதனபத்திரம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| கக | உ | அந்தக்கார ... | அந்தகார |
| ககூ | கஅ | ஸ்நாம் ... | ஸ்நானம் |
| உசா | உங | மையித் ... | மைத்தி |
| ங௦ | உஎ | சதுஷ்ய ... | சதுஷ்டய |
| ஙஉ | உச | மாத்திரதிர ... | மாத்திர |
| சக | உசா | பிரமென்று ... | பிரமமென்று |
| சச | கூ | லேயுங் ... | லேங் |
| சரு | உச | பண்ணால் ... | பண்ணினால் |
| ஷை | உரு | நகிக்கும் ... | நசிக்கும் |
| ருக | சா | சகுனப் ... | சகுணப் |
| ருச | கஎ | பொக்கடி ... | போக்கடி |
| ருரு | உஎ | கர்பூர ... | கர்ப்பூர |
| ருஎ | உஎ | விருத்தாமன ... | விருத்தமான |
| சாங | ரு | சியதா ... | சிறியதா |
| சாச | கஉ | காரனோ ... | கரனோ |
| சாஅ | ங | யந்தபக்ஷம் ... | யந்தப்பக்ஷம் |
| எஅ | க௦ | கல்பக ... | கற்பக |
| அஅ | உஎ | பிரிச்சி ... | பிரிச்ச |
| கூஅ | ச | சாத்தினா ... | சாதத்தினா |
| கூகூ | உ௦ | றந்து ... | றிந்து |
| ஷை | உரு | காராரத ... | காரார்த்த |
| க௦௦ | கஎ | னானுபதி ... | னானுபவதி |
| க௦க | க௦ | கரும்பந்த ... | கருமபந்த |
| க௦உ | உஎ | மணனோ ... | மணனோ |
| ஷை | ஷை | அப்பட்டிப் ... | அப்படி |
| க௦ங | கங | நாமொன் ... | நாமொனம் |
| க௦ச | உ | சிவனாகமறி ... | சிவனாகவுமறி |
| க௦எ | கங | யாய்சிவ ... | யாய்ச்சிவ |
| கக௦ | கக | வையித்திசாஸ் ... | வைத்தியசாஸ் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௧௧ | ௩ | கூஉடறை ... | கூடிறை |
| ௧௧௨ | ௧௫ | பேத்திலெ ... | பேதத்திலெ |
| ௧௧௫ | ௨ | அர்த்ததை ... | அர்த்தத்தை |
| ௧௩௨ | ௨௭ | திரயங் ... | திரயங்க |
| ௧௩௩ | ௨௩ | வேட்டு ... | வெட்டு |
| ௧௩௪ | ௧௮ | கருமத்தறு ... | கருமத்திறு |
| ௧௩௫ | ௫ | சொ்ால்லு ... | சொல்லு |
| ௧௪௩ | ௨௧ | க்ள் ... | கள் |
| ௧௪௫ | ௧௭ | கூடலெ ... | கூடல் |
| ஷை | ஷை | யவியத்தையாவந்தக் கார ... | யவித்தையா வந்தக் கா |
| ௧௫௦ | ௩ | மீமாஸா ... | மீமாம்ஸா |
| ௧௫௧ | ௧௬ | யிருக்க ... | யிருக்கு |
| ஷை | ௨௫ | யவிததை ... | யவித்தை |
| ௧௫௨ | ௨௪ | சொல்னுவார் ... | சொல்லுவார் |
| ௧௫௩ | ௯ | சொல்வியி ... | சொல்லியி |
| ஷை | ௧௨ | பணறு ... | பண்ணு |
| ஷை | ௨௧ | வித்திரிய ... | விந்திரிய |
| ௧௫௪ | ௭ | வேணடு ... | வேண்டு |
| ஷை | ௮ | வார்கன் ... | வார்கள் |
| ௧௫௬ | ௨௨ | ஸ்திரிகள ... | ஸ்திரீகள் |
| ௧௫௭ | ௬ | திவவிய வலங் நாரங்களா ... | திவ்விய வலங் காரங்களா |
| ௧௫௯ | ௨௦ | யாதொத்தர் ... | யாதொருத்தர் |
| ௧௬௦ | ௮ | ஸதிரீக ... | ஸ்திரீக |
| ௧௬௫ | ௪ | வருஷிகிற ... | வருஷிக்கிற |
| ௧௭௭ | ௨௧ | படும ... | படும் |